# வைணவ விருந்து

பாச்சுடர். வளவ. துரையன்

இந்த நூல் "திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்" மதசம்பந்தமான நூல்கள் வெளியிட நிதியுதவி அளிக்கும் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற்று வெளியிடப்பட்டுள்ளது.

இந்த நூல் வெளிவந்தபிறகு இந்நூலைப் பற்றி எழும் எல்லா விமர்சனங்களுக்கும் விவாதங்களுக்கும் நானே முழுப்பொறுப்பாவேன்.

*வளவ. துரையன்,*

*கடலூர்*

**கஜலெட்சுமி எண்டர்பிரைசஸ்,**

7, வில்லியம் லே-அவுட்,

2-வது தெரு,

விழுப்புரம் - 605 602.

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | வைணவ விருந்து |
| ஆசிரியர் | : | வளவ. துரையன் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | பக்தி நூல் |
| எழுத்து | : | 10 புள்ளிகள் |
| தாள் | : | 11.6 வெள்ளைத்தாள் |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| முதற் பதிப்பு | : | ஆகஸ்ட் 2004 |
| அளவு | : | 18.5 X 12.5 செ.மீ. கிரவுன் |
| பக்கம் | : | 184 |
| நூல் கட்டுமானம் | : | சாதா அட்டை |
| *விலை* | : | *58.00* |
| வெளியீடு | : | கஜலெட்சுமி எண்டர்பிரைசஸ்,<br>7, வில்லியம் லே-அவுட்,<br>2-வது தெரு,<br>விழுப்புரம் - 605 602. |
| ஒளி அச்சு | : | யூ.எஸ்.கிராபிக்ஸ்<br>கே.கே. ரோடு, விழுப்புரம் |
| முகப்பட்டை வடிவமைப்பு<br>அச்சிட்டோர் | : | சக்தி பிராசஸ், சென்னை-81. |

# என்னுரை

தொல்காப்பியம் சங்க நூல்களுக்கு முன்னால் தோன்றியதாக அறிஞர்கள் கருதுகின்றனர். தொல்காப்பியத்தில்

'மாயோன் மேய காடுறை உலகமும்' (அகத் - 5) என்று திருமால் வழிபாடு காட்டப்படுகிறது.

தமிழ்க் கடவுளான 'மாயோன்' விஷ்ணுவாக மாற்றப் பட்டு விட்டபிறகு 'விஷ்ணு' என்ற சொல்லிலிருந்து 'வைணவம்' என்பது தோன்றி இருக்கலாம்.

விஷ்ணுவை 'உபேந்திரன்' என்று இருக்கு வேதம் கூறுகிறது. எனவே வைணவ சமயம் என்பது வேத காலத்திலேயே உருக்கொண்டு விட்டது என்று கூறலாம்.

சங்க நூல்களான மதுரைக் காஞ்சியில்
'மாயோன் மேய ஓண நன்னாள்' என்றும் (591)
திருமுருகாற்றுப் படையில்
'புள்ளணி நீள் கொடிச் செல்வன்' என்றும் (149)
பெரும்பாணாற்றுப் படையில்
'நேமியோடு வலம்புரி தாங்கும் தடக்கை
மாஅப் பொறித்த மால்' என்றும் திருமால் வழிபாடு பாடப்பட்டுள்ளது.

எனவே வைணவ சமயம் மிகத் தொன்மையானதென்றும், அநாதியானதென்றும் அறியலாம்.

வைணவ சம்பிரதாயத்தின்படி அச்சமயத்தை வளர்த்த பெரியவர்களை ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் என்று இரு பிரிவுகளாகப் பகுத்துக் கூறுவர். ஆழ்வார்கள் என்பவர்கள் திருமாலின் பல்வேறு அம்சங்களின் அவதாரங்களாகக் கருதப்படுவர்.

ஆச்சாரியர் என்று கூறப்படுபவர்கள் ஆழ்வார்களுக்குப் பிற்காலத்தில் தோன்றி அவர்களின் வழியைப் பின்பற்றி நடந்து வைணவ சமயத்தைப் பரப்பியவர்கள் ஆவர்.

ஆழ்வார்கள் பன்னிருவரின் பாடல்கள் ஒரு தொகுப்பாக நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் என்று பெயர் பெற்று வழங்கப்படுகிறது. அப்பெரியவர்களின் பாடல்களின் சொல்லாட்சி, நடையழகு போன்றவற்றைப் பார்க்கும்போது ஆழ்வார்கள் சங்க காலத்திற்குப் பிற்பட்டவர்கள் என்றே எண்ணவேண்டி உள்ளது.

அத்தகைய ஆழ்வார் பெருமக்களின் வரலாற்றையும் , சில அரங்கங்களில் ஆற்றிய சொற்பொழிவுகளையும், சில இதழ்களில் எழுதிய கட்டுரைகளையும் இந்த நூலாகத் தொகுத்துள்ளேன்.

தொடக்க காலத்தில் திருக்கோயில் திருவிழாக்களில் நடைபெறும் இராமாயண, மகாபாரதப் பட்டிமன்றங்களுக்காக சமய இலக்கிய நூல்களைப் படிக்கத் தொடங்கிய எனக்குக் கடலூர் குடி புகுந்தபின் வைணவ சமயத்தின் மீதான தொடர்பு அதிகமாயிற்று.

மதுராந்தகம் கவிச் செல்வர் திருமிகு. சௌரி - இரகுவீர பட்டாச்சாரியாரோடு கொண்டிருந்த நெருக்கம் அதிகமானதும் அதற்கு ஒரு காரணம். மேலும் திருப்பாதிரிப்புலியூர் அருள் மிகுவரதராஜப் பெருமாள் திருக்கோயிலில் இருமுறை மார்கழித் திங்கள் முழுமையும் திருப்பாவை சொற்பொழிவு நிகழ்த்தியமையும் மற்றுமொரு காரணம்.

இந்நூலில் உள்ள கட்டுரைகளில் சில திருமலை- திருப்பதி தேவத்தானம் நடத்தும் 'சப்தகிரி ; புதுக்கோட்டை 'புவனேசுவரி விஜயம் ', மதுராந்தகம் 'அருள்மலர் , சென்னை 'திருமால்' ஆகிய இதழ்களில் வெளிவந்தவை. அவற்றின் ஆசிரியர்களுக்கு என் நன்றி.

வைணவ உரை வளத்தை ஆய்ந்து முனைவர் பட்டம் பெற்றவர் சென்னை பச்சையப்பன் கல்லூரி முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர் திரு.தெ.ஞானசுந்தரம் அவர்கள். இந்நூலுக்கு அவரின் அணிந்துரை மிகப் பொருத்தமானதாகும். நான் அஞ்சலில் கட்டுரைகளை அனுப்பிக் கேட்டபோது, மறுக்காமல், தன் பல்வேறு பணிகளுக்கிடையில் சிறப்பானதோர் அணிந்துரை அளித்துள்ள அவருக்கு உளப்பூர்வமான நன்றி கூற நான் கடமைப்பட்டுள்ளேன்.

ஆழ்வார்களின் சிலரது வரலாற்றை மட்டுமே எழுதியிருந்தபோது அதைப்படித்து எஞ்சிய பெருமக்களின் வரலாறுகளையும் எழுத ஊக்குவித்த கடலூர் புலவர் இலட்சுமண ராமானுசதாச சுவாமிகளுக்கு என் நன்றி.

பரிபாடலில் திருமால் நெறி கட்டுரை முழுமையும் 'மருதம்' இணைய தளத்தில் வெளியிட்டு எனது எழுத்துகளை ஊக்கப்படுத்திய நண்பர் ஜெயமோகன் என் நன்றிக்குரியவர்.

என் இலக்கிய உணர்வுகளுக்கு வடிகால் அமைத்த மறைந்த வளவனூர் திருக்குறட் கழகத் தலைவர் அர.இராசாராமனை நினைந்து போற்றுகிறேன்.

என் இளம்பருவத் தமிழாசிரியர் புலவர். தா.மு.கிருட்டிணனார், வளவனூர் நண்பர்கள் துரை. சுந்தரமூர்த்தி, இராசு. துரைக்கண்ணன் கடலூர் நண்பர்கள் குறிப்பாக இந்த நூலை இவ்வாண்டே கொண்டு வந்துவிட வேண்டுமென ஊக்கம் தந்த பேராசிரியர் ந. பாசுகரன், மற்றும் மறைந்த பெரியவர் து. முத்துராசன், எஸ்வார்சி, யூகோ வங்கி இரகுராமன், என் பள்ளி உதவி ஆசிரியரும் என் முதல் வாசகருமான க. சிவலிங்கம், புதுவை பேராசிரியர் க.நாகராசன், பெங்களூர் பாவண்ணன் இவர்களெல்லாம் என் இலக்கியப் பணியை ஆர்வத்தோடு கவனித்து ஊக்கப் படுத்துபவர்கள்.

இவர்களுக்கும் என் முயற்சிகளுக்குத் துணை நிற்கும் என் துணைவி அலர்மேல் மங்கைக்கும் என் நன்றி !

இந்நூலைப் பதிப்பித்து உதவும் பதிப்பகச் செம்மல் மு இலெட்சுமணன் அவர்களுக்கும் இல விசுவநாதன் அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்

தமிழ் கூறும் நல்லுலகும் இத்தொகுப்பை நன்கு எதிர்கொண்டு உள்வாங்கும் என்று நம்புகிறேன்

20, இராசராசேசுவரி நகர்,
கூத்தப்பாக்கம், கடலூர் - 607 002,
தொலைபேசி : 04142 - 234826

வளவ துரையன்

**திருப்பாதிரிப்புலியூர்**
**அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோயில்**
**அறங்காவலர்கள்**
**திருவாளர்கள் ச. இராமையன், சு. நரசிம்மன்**
**மற்றும்**
**திருக்கோயில் தலைமை எழுத்தர் திரு.வி. ஆழ்வார்**
**ஆகிய பெருமக்களுக்கு**
**இந்நூல் ஓர் அன்புக்காணிக்கை**

# அணிந்துரை

முனைவர். தெ. ஞானசுந்தரம்
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை.

தமிழகத்தில் நிலவி வரும் பழமையான சமயங்களுள் ஒன்று வைணவம். தொடக்க காலத்தில் முல்லைநிலத் தெய்வமாக வழிபடப்பட்ட திருமால் பின்னர் முதல் தெய்வமாக உயர்ந்துள்ளான். 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்னும் தொல்காப்பிய நூற்பாவால் இதனை உணரமுடிகிறது. ஆழ்வார்களின் ஈரத் தமிழாலும் ஆசாரியர்களின் வித்தகத் தத்துவ விளக்கத்தாலும் திருமாலின் மேன்மை வேர்பிடித்துத் தழைத்துத் தளிர்த்துப் பூத்துக் குலுங்கியது.

ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிய பாசுரங்கள் திவ்வியப் பிரபந்தம் என்னும் நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அது வைணவ சமயத்தின் முதன்மை நூலாகத் தமிழில் திகழ்கிறது. அதனைத் தொகுத்தவர் நாதமுனிகள் ஆவார். அவர் கிபி. 832 இல் தோன்றிக் கிபி. 918 இல் திருநாடு அலங்கரித்தவர். அக்காலத்திலிருந்தே அதற்குப் பலர் விளக்கம் உரைத்துள்ளனர். அவ்விளக்கங்கள் பலருக்கும் சொல்லப்படாமல் 'ஓர் ஆசிரியர் ஒரு மாணவருக்குச் சொல்வது' என்னும் ஓராண் வழியடைவாகவே சொல்லப்பட்டு வந்தன என்பர். இதனை மாற்றிய பெருமை இராமானுசரையே சாரும்.

இராமானுசரால் சிலர்தம் தனிவுடைமையாக இருந்த ஆழ்வார் பாசுரங்கள் பொதுவுடைமையாயின. அவர் திருவாய்மொழியின் பொருளைப் பாரோர்க்கெல்லாம் பகர வேண்டும் என்று பணித்தார். வைணவ சமயத்தின்

மணிக்கதவம் திறக்கப்பட்டது. விழைவுடையோர் எல்லோரும் உட்புகுந்து அதன் புனித அழகினைக் கண்ணாரக் கண்டு களிக்கும் பேறு பெற்றனர். ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு வடமொழியும் தென்மொழியும் வல்லார்கள் உரைவகுக்கத் தொடங்கினர். அவர்கள் உரையால் வேதத்தின் சாரமே ஆழ்வார்களின் பாசுரங்கள் என்பது நிலைநாட்டப்பட்டது.

ஆழ்வார்களும் ஆசாரியர்களும் வைணவ சமயத்தின் இருபெருந் தூண்கள் ஆவர். இவர்களின் வரலாறுகள் முன்னோர்களால் பட்டோலை செய்யப்பட்டுள்ளன. ஆனால் அவையெல்லாம் வடமொழியும் தமிழும் விரவிய மணிப்பிரவாளநடையில் அமைந்திருப்பதால் தமிழ் மட்டும் அறிந்தவர்களால் அவற்றை முற்றும் உணர்ந்து நுகர இயலவில்லை. இக்குறையினை நீக்க அறிஞர் சிலர் முயன்றுள்ளனர். இவ்வரலாறுகளைத் தமிழில் எழுதி வழங்கலாயினர். பாக்டர் வளவ. துரையன் அவர்களும் இந்த நற்பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார். அதன் விளைவே 'வைணவ விருந்து' என்னும் இந்நூலாகும்.

இந்நூலில் உள்ள கட்டுரைகள் பல்வேறு மலர்களில் வெவ்வேறு காலங்களில் எழுதப்பட்டனவாகும். எனினும், அவற்றினையே ஓர் இயைபு காணப்படுகிறது. ஆழ்வார்களின் வரலாறு முற்பகுதியில் இடம் பெற்றுள்ளது. அதனையடுத்துச் சில பாசுரங்களின் நயம் விளக்கப்பட்டுள்ளது. இறுதியில் பழந்தமிழ் இலக்கியங்களான சிலப்பதிகாரம், பரிபாடல் ஆகியவற்றில் காணப்படும் வைணவ சமயக்குறிப்புகள் திரட்டப்பட்டு ஆராயப்பட்டுள்ளன.

ஆழ்வார்களின் வரலாறுகளைச் சொல்லும்போது அவர்களைப் பற்றி எழுந்த தமிழ்நூல்களையும் குறிப்பிட்டுள்ளது போற்றற்குரியதாகும். நம்மாழ்வாரின் பெருமையினைக் கூறும் நூல்களாகக் கவிச்சக்கரவர்த்தி கம்பரின் சடகோபர் அந்தாதி, திருவேங்கடத்துறைவான் கவிராயர்

இயற்றிய மாறன் கோவை, இலக்கண நூல்களான மாறனலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதிக் கோவை, மாறன் அகப்பொருள் ஆகியவற்றைக் குறித்துள்ளார். இவ்வாறே திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகரும், தொல்காப்பியவுரையாசிரியர் நச்சினார்க்கினியரும் திருவாய்மொழியினைச் சான்றாகக் காட்டியுள்ளனர் என்னும் பயனுள்ள தகவலினையும் தந்துள்ளார்.

ஒருசில இடங்களில் வைணவ உரையாசிரியர்களின் அரிய விளக்கங்கள் சிலவற்றை எடுத்துக் காட்டியுள்ளார். அவை கட்டுரைக்கு அழகு சேர்க்கும் அணிகலனாய்த் திகழ்கின்றன. ஆயமகள் ஒருத்தி யமுனையாற்றங்கரையில் கண்ணனின் வரவுக்காகக் காத்திருந்ததனைச் சொல்லி அவனோடு ஊடல் கொள்கிறாள்.

'வார்மணற் குன்றில் புலரநின்றேன் வாசுதேவா ! உன் வரவு பார்த்தே' என்பது அவள் வார்த்தை. இதனை விளக்குமிடத்து, 'உன்னை விஸ்வஸித்தன்று (நம்பியன்று) ; உன் பிதாவை விஸ்வஸித்து' என்னும் பெரியவாச்சான்பிள்ளை உரைப்பகுதியினைக் காட்டுவது சிறப்பாக உள்ளது. இதனைப் போலவே 'என்னை வருக' என்னும் பெருமாள் திருமொழி உரையில் அப்பாசுரத்திற்கு மெய்ப்பாடு தோன்ற ஆடிய உய்ந்தபிள்ளைக்கு எம்பார் திருத்தம் உணர்த்திய நிகழ்ச்சியினைச் சுட்டியுள்ளதும் குறிப்பிடத் தக்கதாகும். ஆளவந்தார், எம்பெருமானிடம் தஞ்சமாயிருத்தலின் பொருளை விளக்குமாறு கேட்ட திருக்கோட்டியூர் நம்பிக்கும் பெரிய நம்பிக்கும் பெரிய பெருமாளின் திருவடியின்கீழ் வீணையும் கையுமாக நிற்கும் திருப்பாணாழ்வார் திருவுருவத்தைத் திருவடிமுதல் திருமுடிவரை சேவித்துக் கொண்டிருக்குமாறு பணித்தார் என்பதனைக் காட்டும் இடம் உள்ளத்தைக் கவரும் வகையில் அமைந்துள்ளது.

'பழைய இலக்கியங்களில் பரசுராமர்' என்னும் கட்டுரையில் பரசுராமனைப் பற்றி அகநானூற்றிலும், மணிமேகலையிலும் சுந்தரர் தேவாரத்திலும் இடம் பெற்றுள்ள அரிய குறிப்புகளைத் தேடித்தொகுத்துத் தருவது ஆசிரியரின் உழைப்புக்குச் சான்றாகும்.

நஞ்சீயர், தம் ஆசாரியர் பட்டரிடம் கொண்டிருந்த ஈடுபாடு, பட்டரது பல்லக்கைச் சுமந்தபோது அதற்கு நஞ்சீயர் சொன்ன அமைதி ஆகியவற்றைக் குறித்துள்ளமை பாராட்டுக்குரியது. திருநறையூர்ப் பாசுரத்தில் பெண் நண்டின் முறையற்ற சீற்றத்திற்கு அவ்வுகந்தருளிய நிலத்தில் பிராட்டிக்கு முதன்மை இருத்தலை உளத்திற்கொண்டு, 'என்ன செய்வது? கேள்வி முறை இல்லாதபடி பெண்ணாட்சி செய்யும் நாடாயிற்றே' என்றும், பூதங்குடிப்பாசுரத்தில் வயலில் மீன்கள் நிறைந்திருக்கப் பறவை இரை தேடுவதற்குக் காரணம் கூட்டில் உள்ள குஞ்சுகள் வாயில் செல்லத்தக்க சிறுமீன்களைத் தேடுவதேயாகும் என்றும் பட்டர் தம் கூர்த்த அறிவினால் தந்த நயவுரை எண்ணும்தோறும் இனிப்பதாகும். இத்தகைய நயமான பகுதிகளை அங்கங்கே தந்திருக்கும் நூலாசிரியர் மிகுந்த பாராட்டுக்குரியவர்.

பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் வைணவக் கருத்துக்களைத் தொகுத்தளிக்கும் நூலாசிரியர் அவற்றை ஆழ்வார்களின் பாசுரங்களோடு ஒப்பிட்டு விளக்குவது சுவைமிக்கதாக அமைந்துள்ளது.

'துளவஞ் சூடிய அறிதுயிலோன்'

என்பது பரிபாடல், இதனை,

'வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன்மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம் காணலாம்'

'பாற்கடலில் பையத் துயின்ற பரமன்'

'பந்தனையிலாதான் யோகத்துயில்வரப் பள்ளி கொண்டான்'

'பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்த எந்தாய்'

என்று முறையே பெரியாழ்வார், ஆண்டாள் நாச்சியார், வில்லிபுத்தூராழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பாசுரங்களை மேற்கோள்காட்டி விளக்கியுள்ளார். இவ்வாறு விளக்குமிடங்கள் பலவாகும். அப்பகுதிகள் ஆசிரியரின் விரிந்த இலக்கியப் புலமைக்குச் சான்று பகர்கின்றன.

'சிலம்பில் திருமால் நெறி' என்னும் கட்டுரை சிலப்பதிகாரத்தில் காணப்படும் அனைத்துத் திருமால் பற்றிய செய்திகளையும் தொகுத்தும் பகுத்தும் ஆராய்கிறது. திருமால் சோ என்னும் அரணை அழித்ததனை, 'சோவின் அருமை அழித்த மகன்' என்னும் நான்மணிக்கடிகைக் கடவுள் வாழ்த்துப் பாடலைக் கொண்டு விளக்குவதும், 'கண்ணும் திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை' என்னும் சிலம்பின் தொடரினை, 'கையும் மலரடியும் கண்ணும் கனிவாயும், செய்ய கரிய திருமாலே' என்னும் விக்கிர சோழனுலாப் பகுதியைக் காட்டி விளக்குவதும் அருமை.

திருமால் பற்றிய செய்திகளை அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் எளிய தமிழில் எழுதியுள்ள ஆசிரியர் பெரிதும் பாராட்டுக்குரியவர். ஆசிரியர் முயற்சி வெல்வதாக ! என் வாழ்த்துகள்.

சென்னை - 600 101 — அன்பன்

15.10.2003 — **தெ. ஞானசுந்தரம்**

# பதிப்புரை

பாரத கண்டத்தின் பழம்பெருமை வாய்ந்த மதமாக வைணவம் திகழ்ந்து வருகிறது. வேதங்களும், புராணங்களும் வைணவத்தின் தொன்மைக்குச் சான்று கூறுகின்றன. மேலும் தென்னக மக்கள் திருமால் வழிபாட்டில் ஈடுபட்டுச் சிறந்திருந்ததை பழங்கல் வெட்டுகளும், தமிழ் இலக்கியங்களும் கூறி நிற்கின்றன.

வைணவ மதத்தைப் பரப்பிய பெரியவர்களை 'ஆழ்வார்கள்' என்பர். அவர்கள் அவதார ஞானிகளாகக் கருதப்படுகின்றனர்.

வைணவ மதத்திற்கு உயிர்நாடியாக விளங்குவது நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம். இதில் பன்னிரு ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் இடம் பெற்றுள்ளன.

பல பட்டிமன்றங்களிலும் வைணவ மாநாடுகளிலும் உரையாற்றியதோடு, சில இதழ்களில் வைணவம் தொடர்பான கட்டுரைகளையும் வளவ. துரையன் எழுதி உள்ளார்.

அவற்றோடு ஆழ்வார் பெருமக்களின் வரலாற்றையும் எளிய தமிழில் இந்நூலில் அவர் அளித்துள்ளார். முன்பே அவரது 'தாயம்மா' சிறுகதைத் தொகுப்பையும் 'சிகரங்கள்' கட்டுரைத் தொகுப்பையும் வெளியிட்டுள்ள நாங்கள் இத்  
நூலையும் வெளியிடுவதில் பெருமை அடைகிறோம்.

பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# பொய்கையாழ்வார்

நகரங்களில் சிறந்தது காஞ்சி என்று காஞ்சி மாநகரம் காளிதாசரால் சிறப்பிக்கப்படுகிறது. தொண்டை நாட்டின் தலைநகராகக் காஞ்சிபுரம் விளங்கி வந்துள்ளது. இம்மண்ணுலகில் உள்ள நாடுகள் எல்லாம் வயல்கள் என்றும், அவ்வயல்களில் விளைந்த கரும்பே தொண்டை நாடு என்றும், தொண்டை நாட்டின் நகரங்கள் யாவும் அக்கரும்பினது சாறு என்றும், அச்சாற்றைக் காய்ச்சி எடுக்கப்பட்ட கற்கண்டே காஞ்சிமாநகரம் என்றும் ஒரு தமிழ்ப்புலவர் எடுத்துரைக்கிறார். இன்றைக்கும் பல்வகையான சைவ வைணவ ஆலயங்களைத் தன்னகத்தே கொண்டதாய் அந்நகரம் பொலிவுடன் விளங்குகிறது.

ஆழ்வார் பெருமக்களில் முதலாழ்வாராகக் கருதப்படும், பொய்கையாழ்வார் காஞ்சிபுரம் எனும் புகழ்பெற்ற இத்திருத்தலத்தில்தான் அவதரித்தார். துவாபரயுகத்தில் **8,62,901** சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர்பிறையில், செவ்வாய்க் கிழமை, அஷ்டமி திதியில், திருவோண நட்சத்திரத்தில் அவர் தோன்றினார் என்பர். மேலும் திருமாலின் ஐந்து படைகளில் ஒன்றாய் விளங்கித் தோன்றும் பாஞ்ச சன்னியம் என்று கூறப்படும் திருச்சங்கின் அம்சமாக இவர் தோன்றினார் என்பர்.

காஞ்சிபுரத்தில் திருவெஃகா எனும் இடத்தில் உள்ள ஒரு பொய்கையில் பூத்திருந்த பொற்றாமரை மலரில் பொய்கையார் எழுந்தருளினார். பொய்கையில் தோன்றிய காரணத்தினால் இவருக்குப் பொய்கையார் எனும் திருநாமம் வழங்கலாயிற்று.

எம்பெருமானாகிய திருமாலிடத்தே அன்பு வைத்து, ஆழ்ந்த பற்றுகொண்டு பலபாசுரங்களை இவர் அருளிச் செய்தார்.

திருவரங்கம், திருவிண்ணகரம், திருக்கோவிலூர், திருவெஃகா, திருவேங்கடம், திருப்பாற்கடல், பரமபதம் ஆகிய திருத்தலங்களை இவர் போற்றிப் பாடியுள்ளார்.

எனது கை திருமாலைத் தவிர பிறரைத் தொழாது. இவ்வுலக மாந்தர் எம்பெருமானைத் தவிர பிறரைத் தொழார் இறைவனைக் காணாத கண்ணும், அவர்தம் புகழைக் கேட்காத செவியும், பார்வையற்ற கண்ணாகவும், கேட்கும் திறனற்ற செவியாகவும் கருதப்படும் என்று அவர் பாடுகிறார். இதோ அவர் பாடல்

“வாயவனை அல்லது வாழ்த்தாது கைஉலகம்
தாயவனை அல்லது தாம்தொழா – பேய் முலைநஞ் (சு)
ஊணாக உண்டான் உருவோடு பேர் அல்லால்
காணாகண் கேளா செவி”

மேலும் திருமாலின் அருங்குணங்களையும் அருளிச் செய்த பல செயல்களையும் இவர் பாடலில் காணலாம். திருமாலைப் புகழ்ந்து வணங்காதோர்க்கு வீட்டின்பம் இல்லை என்று இவர் பாடுகிறார்.

இவரது சமகாலத்தவரான பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோருடன் இறைவன் திருவருளால் இவர் திருக்கோவிலூரில் கூட்டுவிக்கப்பட்டார். அப்போது இம்முதலாழ்வார் மூவரும் ஞானக் கண்களால் இறைவன் திருமேனியைக் கண்டு வ்ணங்கினார்கள்.

பொய்கையாழ்வார் இவ்வுலகமே அகலாகவும் கடலே

நெய்யாகவும் கொண்டு அதில் சூரியனையே விளக்காகவும் கொண்டு விளங்கும் திருமாலுக்குப் பாமாலை சூட்டுவதாக முதல் திருவந்தாதியைப் பாடினார்.

அந்நூலானது

"வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச் – செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று"

எனத் தொடங்கி திருமாலின் பெருமைகளைப் பாடுகின்றது. இப்பிறவியின் பயனே திருமாலைத் தொழுது போற்றிப்பாடுவதுதான் என்று வாழ்ந்த பொய்கையாழ்வார் என்றும் அடியார் பெருமக்களால் துதிக்கப்படுகிறார்.

பிற ஆழ்வார் பெருமக்களைப் போல் அல்லாமல் மானிடத்தாயின் கருப்பத்தில் தோன்றாது பொய்கைத் தாமரையில் தோன்றிய பெருமை உடையவர் பொய்கையாழ்வார்.

இவரை "இப்புவியும் பேசுபுகழ் பொய்கையார்" என்று உபதேச ரத்தின மாலையின் ஆறாம் பாடல் கூறுகிறது.

பொய்கையாழ்வாரைக் "கவிஞர் போரேறு" என்று போற்றும் முதலியாண்டான் அவர்தம் பாசுரங்களை "அருந்தமிழ் நூற்றந்தாதி" என்று முதல் திருவந்தாதித் தனியனில் புகழ்கிறார்.

வேதாந்ததேசிகரும் பொய்கையாழ்வாரின் பாசுரங்களை “திருவிளக்காம் எனும் வையந்தகளி நூறும்” என்று தேசிகப் பிரபந்தத்தில் புகழ்கிறார்.

மேலும் “வருத்தும் புற இருள் மாற்ற எம் பொய்கைப் பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்து அன்று எரித்த திருவிளக்கு” என்று இராமானுச நூற்றந்தாதியில் திருவரங்கத்து அமுதனார் போற்றுவதிலிருந்தே பொய்கையாரின் பெருமையை நாம் அறிந்து மகிழலாம்.

# பூதத்தாழ்வார்

சோழநாடு சோறுடைத்து என்றும் சேரநாடு வேழமுடைத்து என்றும் பாண்டிநாடு முத்துடைத்து என்றும் புகழப்படுகின்றன. அதுபோல தெண்ணீர் வயல்தொண்டை நன்னாடு சான்றோருடைத்து என்று நடுநாடாம் தொண்டைநாட்டை ஔவையார் பாராட்டிப்பாடுகிறார்.

இத்தொண்டை நாட்டை ஆட்சி செய்தவர்களில் பல்லவ மன்னர்கள் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். அவர்களில் மிகப் புகழ்பெற்ற நரசிம்மவர்மனுக்கு 'மாமல்லன்' எனும் பட்டப்பெயர் உண்டு. எனவே அவனால் தோற்றுவிக்கப்பட்ட நகரம் மாமல்லபுரம் என அழைக்கப்பட்டது.

இம்மாமல்லபுரத்தில் திருமால் பள்ளிகொண்டு காட்சி தந்து உலகிற்கு அருள்பாலிக்கிறார். ஏனைய திருத்தலங்களில் பாம்பணை மீது பள்ளி கொண்டருளும் பெருமாள் இங்கு தலத்தில் பள்ளி கொண்டருளுகிறார். எனவே இத்தலத்தைக் 'கடல் மல்லைத் தலசயனம்' என்று கூறுவார்கள்.

பல்லவமன்னன் பல சிற்பங்கள் அமைத்து கலைக் கோயிலாகக் கட்டிய இக்கடல் மல்லையில்தான் பூதத்தாழ்வார் திரு அவதாரம் செய்தார். துவாபரயுகத்தில் மல்லிகைப் புதரில் நீலோற்பலமலரில் இவர் தோன்றினார். சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித்

திங்கள் வளர்பிறையில் நவமி திதியில் புதன்கிழமை அவிட்ட நட்சத்திரத்தில் பூதத்தாழ்வார் இம்மண்ணுலகில் எழுந்தருளினார்.

மேலும் திருமாலின் ஐந்து படைகளில் ஒன்றான கௌமோதகி எனும் கதாயுதத்தின் அம்சமாக பூதத்தாழ்வார் தோன்றினார்.

பிறந்தது முதலே அவர் மனம் இம்மண்ணுலக வாழ்வை நாடவில்லை. எம்பெருமானை எண்ணி எண்ணி அப்பெருமானின் திருவடி ஞானம் பெறுவதையே அவரது உள்ளம் விரும்பியது. தன்மனக் கோயிலிலேயே அவர் பெருமாளுக்குத் தனி இடம் கொடுத்தார். இறைவனை ஞான நீரால் திருமஞ்சனம் செய்தார். அவரது திருப்பாதங்களில் பூதத்தாழ்வார் அன்பாகிய மலரை இட்டு ஆராதனை செய்தார்.

உலகுண்ட பெருவாயனான அப்பெருமாளுக்குச் செந்தமிழ்ப்பாக்களால் பாமாலை சார்த்தி மகிழ்ந்தார். அதனால் "யானே நலம் உடையேன் ஏழ்பிறப்பும் தவம் உடையேன்" என்று அகமகிழ்ச்சி கொண்டார்.

பூதத்தாழ்வாரைக் கண்டவர்கள் இவர் நம்மைப் போன்றவர் அல்லர். தெய்வப் பிறப்பினர் என்று தொழுதனர். "நெடியோனாகிய திருமாலை வணங்கி அருள் பெற்றால் வேறு ஏதும் வேண்டாம்" எனும் மனம் பெற்ற பூதத்தாழ்வார் "திருமாலைச் செங்கண் நெடியானை எங்கள் பெருமானைக் கை கூப்பி வணங்கப்

பெற்றேனாதலின் யான் இனி ஒரு குடைக்கீழ் மண்ணுலகை ஆள்வதையும் வேண்டேன், தேவர்கட்கும் தேவனாய்த் தேவருலகை ஆள்வதையும் வேண்டேன்" என்று பாடுவார்.

இப்பெருமகனார் திருவரங்கம், தஞ்சை, திருக்குடந்தை, திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், திருத்தண்கால், திருக்கோவிலூர், திருக்கச்சி, திருப்பாடகம், திருநீர்மலை, திருக்கடல்மல்லை, திருவேங்கடம், திருப்பாற்கடல் ஆகிய திருத்தலங்களைப் பாடி அருள் செய்துள்ளார்.

"பூதத்தான் தாளிணைகள் பூதலத்தில் வாழியே"

# பேயாழ்வார்

உலகத்தின் பொதுமறை என்று போற்றப்படும் வான்புகழ் திருக்குறளை எழுதிய திருவள்ளுவருக்குக் கோயில் அமைந்துள்ள ஊர் சென்னையைச் சார்ந்த மயிலாப்பூர் ஆகும். இதனைத் திருமயிலை என்றும் வழங்குவார்கள்.

பெருமையும் பல்வேறு சிறப்புகளும் பெற்றுத் திகழும் திருமயிலை எனும் இத்தலத்தில் ஆதிகேசவப்பெருமாள் எழுந்தருளி அருளாட்சி செய்து வருகிறார். அவர் உறைந்திருக்கும் அத்திருக்கோயிலின் திருக்கிணற்றில்தான் பேயாழ்வார் அவதரித்தார். செவ்வல்லி மலரில் துவாபர யுகத்தில் சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர்பிறையில் சுக்கில பட்சம் பொருந்திய தசமி திதியில் வியாழக்கிழமை சதய நட்சத்திரத்தில் அவர் தோன்றினார்.

பேயாழ்வார் திருமாலின் ஐம்படைகளில் ஒன்றான நாந்தகம் என்னும் வாளின் அம்சமாக மண்ணுலகில் தோன்றினார். பேயாழ்வார் இளமைக்காலம் தொட்டே கல்வி கேள்விகளில் நாட்டம் கொண்டிருந்தார். கற்ற கருத்துகள் எல்லாம் அவர் தம் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்தன. அவர் உள்ளமோ பெருமானின் திருவடிகளால் கவரப்பட்டு அங்கேயே நிலைத்துவிட்டது. மனம், மெய், வாக்கு ஆகியவற்றால் பேயாழ்வார் எந்த நேரமும் திருமாலையே நினைந்து நினைந்து இன்பம் அடையலானார்.

அதனால் அவர் எப்பொழுதும் செந்தமிழ்ப் பாக்கள் பாடி திருமாலின் புகழையே எண்ணி எண்ணி உருகினார்.

இறைவனையே வாய்கூற மனம் நினைக்க ஞானக்கண் காண களிப்பு கொண்டு ஆடியும், ·பாடியும் அவர் திரியலானார். அவரை அனைவரும் வணங்கலாயினர்.

பேயாழ்வார் தாம் பாடிய மூன்றாம் திருவந்தாதியில் திருமாலின் திருவடிகளே நமக்குப் பற்றுக் கோடாகும். துன்பம் வந்த காலத்து ஆதிமூலமே என விளித்த யானையைக் காக்க முதலையை சக்கரப்படையால் அழித்தவன் அன்றோ நம்பெருமான் என்று அவர் பிரமாணம் காட்டுகிறார்.

"தொட்ட படைஎட்டும் தோலாத வென்றியான்
அட்ட புயகரத்தான் அஞ்ஞான்று – குட்டத்துக்
கோள்முதலை துஞ்சக் குறித்தெழுந்த சக்கரத்தான்
தாள்முதலே நங்கட்குச் சார்வு"

என்பது அவர் அருளிச் செயல் ஆகும். பேயாழ்வார் திருவரங்கம், திருக்குடந்தை, திரு விண்ணகர், திருமாலிருஞ்சோலை, திருப்பாடகம், திருவெஃகா, திருவல்லிக்கேணி, திருக்கடிகை, திருவேங்கடம், திருப்பாற்கடல் ஆகிய திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள திருமாலின் புகழைப் பாடித் துதித்துள்ளார்.

"பேயன்எழில் தாளியிணை பெருநிலத்தில் வாழியே"

# திருமழிசை ஆழ்வார்

எம்பெருமான் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள திருக்கோலத்தைத் தனது திருமேனியிலேயே அனைவரும் காணும்படி வெளிப்படுத்தி அனுபவித்தவர் திருமழிசையாழ்வார். காஞ்சிபுரத்திற்குக் கிழக்கில் திருமழிசை எனும் திருத்தலம் உள்ளது. அப்பகுதியில் பார்க்கவர் எனும் முனிவர் "தீர்க்கசந்திர யாகம்" செய்துவந்தார். அப்பெரியவருக்கும் கனகாங்கி எனும் தேவமாதிற்கும் துவாபரயுகத்தில் சித்தார்த்தி ஆண்டு தைத்திங்கள் தேய்பிறையில் மக நட்சத்திரத்தில் பிரதமை திதியில் ஞாயிற்றுக் கிழமையில் திருமாலின் திரு ஆழியின் அம்சமாய் கை கால் முதலிய உறுப்புகள் இல்லாத ஒரு பிண்டம் பிறந்தது.

அதனைப் பெற்றவர்கள் மிகவும் வருத்தம் கொண்டனர். அதை அருகில் இருந்த ஒரு பிரம்புப் புதரில் அவர்கள் போட்டுவிட்டுப் போக திருமால் அங்கே எழுந்தருளி அதை நோக்கி அருள்புரிய அப்பிண்டம் அழகிய ஆண் குழந்தையாக உருப்பெற்றது. உடனே அது அழத்தொடங்கியது. "மகீசார க்ஷேத்ரபாதி" யான எம்பெருமான் மீண்டும் எழுந்தருளி தனது திருக்கோலத்தைக் காட்டி அக்குழந்தையின் பசி தாகம் போக்கி மறைய அது இப்போது திருமாலின் பிரிவாற்றாமையால் அழத் தொடங்கியது.

அச்சமயத்தில் அங்கு வந்த திருவாளன் என்பவர் அம்மகவை எடுத்துத் தன் இல்லம் சென்று தன் மனைவியான பங்கயச் செல்வியிடம் அளித்தார். அவர் அக்குழந்தையை வளர்க்க எண்ணி உச்சி முகர்ந்து மார்போடணைத்தார். பங்கயச் செல்விக்கு உடன் பால் சுரந்தது. ஆனால் அக்குழந்தை அப்பாலை உண்ணவில்லை, அழவும் இல்லை, சிறுநீர் கழித்தல்

முதலானவையும் செய்யவில்லை. இதனைக் கேள்வியுற்று ஒரு முதிர்ந்த சான்றோர் தன் கையில் ஒரு கலத்தில் பால் காய்ச்சிக் கொண்டு வந்தார். அம்மகவின் முன் அதை வைக்க அக்குழந்தை அப்பாலை அருந்தியது.

திருவாளனும் பங்கயச் செல்வியும் அப்பெரியவரிடம் நாள்தோறும் பால் கொண்டுவந்து பாலகனைப் பருகுவிக்கச் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ள அவரும் இசைந்து அங்ஙனமே செய்தார். தம் மனைவியோடு தினமும் வரும் அம்முதியவரின் எண்ணம் அறிந்த அக்குழந்தை ஒருநாள் பாலமுதில் சிறிது நிற்கும்படி செய்து மீதியை உண்டது. எஞ்சியபாலை அப்பெரியவர்கள் அருந்தினர். அதனால் அவர்கள் இளமைப்பருவம் அடைந்தனர். சில திங்கள்கள் கழிந்து அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறக்க அப்பிள்ளைக்குக் கணிகண்ணன் எனப் பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

திருவாளனுக்கும் பங்கயச் செல்விக்கும் வளர்ப்பு மகனாக இருந்த பிள்ளை திருமழிசை என்ற தலத்தின் காரணமாக திருமழிசை ஆழ்வார் எனும் திருநாமத்துடன் விளங்கியது.

ஏழு ஆண்டுகள் கழிந்தபின் அப்பிள்ளை பல நூல்களைக் கற்று பற்பல சமயங்களிலும் புகுந்து இறுதியில் சிவவாக்கியர் எனும் பெயருடன் சைவ சமயத்தைச் சார்ந்து ஒழுகத் தொடங்கியது. சிவவாக்கியர் பல சிவத்தலங்களுக்கும் சென்று திருமயிலையை அடைந்தார்.

முதலாழ்வார்களில் ஒருவரான பேயாழ்வார் அங்கிருந்த பூஞ்சோலையில் தங்கி இருந்தார். சிவவாக்கியரைத் தடுத்தாட்கொண்டு உலகின் முதற்பொருளாய் விளங்கி முக்திநிலை அளிக்கும் முதல்வன் திருமாலே என்று பேயாழ்வார் அவருக்கு

உணர்த்தினார். பேயாழ்வார் திருநாராயணனின் திருமந்திரத்தை உபதேசிக்கத் திருமழிசையாழ்வார் ஸ்ரீ வைணவர் ஆனார். இதற்கு அவருக்கு நானூறு ஆண்டுகள் சென்றன.

திருமழிசையாழ்வார் எம்பெருமானையே தியானித்துக் கொண்டு திருமழிசையில் உள்ள "கஜேந்திர ஸரஸ்" குளக்கரையில் எழுநூறு ஆண்டுகள் யோகத்தில் மூழ்கி இருந்தார். பிறகு அவர் ஒரு மலைக்குகையை அடைந்து அங்கு சில காலம் தியானத்தில் எழுந்தருளிச் செய்தார். அப்போது உலகில் இதுவரை காணாத பேரொளி அக்குகையில் தோன்ற அதைக் கண்ட பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் ஆகிய முதலாழ்வார்கள் அங்கு வந்து திருமழிசையாழ்வாரைக் கண்டனர். அவர்கள் யாவரும் ஒருவருக்கொருவர் அன்புகொண்டு தழுவிப்பின் யோகத்தில் மூழ்கி இருந்து சிலகாலம் கழித்துத் திருமயிலை அடைந்தனர். அங்கிருந்து முதலாழ்வார்கள் விடைபெற்றபின் திருமழிசையாழ்வார் திருமழிசைக்கு மீண்டும் வந்தார்.

அங்கு ஒரு நாள் சாத்துகைக்குத் திருமண் வேண்டி அகப்படாமல் திருமழிசையாழ்வார் வருந்தினார். அவரது கனவில் திருவேங்கடநாதன் எழுந்தருளி, திருமண் உள்ள இடத்தைக் குறிப்பிட்டுக் கூறி அருளினார். அவரும் அங்கே சென்றுத் திருமண் கண்டு எடுத்துப் பன்னிரண்டு திருநாமம் அணிந்து திருமாலைத் தொழுதார். பிறகு திருமழிசையாழ்வார் கச்சியில் உள்ள திருவெஃகா சென்றார். அங்கு பொய்கையாழ்வார் அவதரித்த பொய்கைக் கரையில் ஆழ்வார் எழுநூறு ஆண்டுகள் யோகத்தில் எழுந்தருளி இருந்தார். இவரருளால் முதியவர்களுக்கு இளமைக்கோலம் வந்து பிறந்த கணிகண்ணன் இங்கு வந்து திருமழிசைாழ்வாரின் சீடர் ஆனார்.

இங்குதான் அன்பிலும், தொண்டிலும் பக்தியிலும் சிறந்திருந்த ஒரு முதிய பெண்மணி ஆழ்வாரின் திருவருள் பெற்று இளமையான அழகுப் பெண்ணாக உருமாறினாள். அவள் அழகில் மனம் பறிகொடுத்த பல்லவ வேந்தன் அவளை மணந்து மனைவியாகப் பெற்றான்.

சில ஆண்டுகளில் முதியவனான அவ்வேந்தன் தானும் இளம்பருவம் அடைய விரும்பினான். அவன் மனைவி தனக்கு இளமைத்தன்மை ஏற்பட்ட வரலாற்றினைக் கூறி "கணிகண்ணரின் துணையைப் பெற்று ஆழ்வாரின் அருளைப் பெறுவீராயின் தாங்களும் இளம்பருவம் அடையலாம்" என்று கூறினாள்.

மன்னன் கணிகண்ணரை அழைத்து அவரது ஆசானான ஆழ்வாரை அழைத்துவர வேண்டினான். எம் குரவர் எவர் மனைக்கும் வாரார் என்று கணிகண்ணர் விடை கூறினார். அதற்கு அரசன் "நீரே எம்மீது ஒரு பாட்டுப் பாடுக!" என்று கூற "யான் மானிடம் பாடவந்த கவியல்லேன்" என்று கணிகண்ணன் விடையறுத்தார். மன்னர்கள் திருமாலின் அம்சம் பெற்றவர்கள். எனவே அரசர்களைப் பாடுதல் குற்றமாகாது என்று மன்னன் சொல்ல கணிகண்ணன் திருமாலைப் போற்றி ஒரு பாடல் பாடினார்.

மன்னன் இப்போது திருமாலைப் பற்றிப் பாடியது ஏன் எனக் கேட்டான். "தாங்கள்தான் மன்னர்கள் திருமாலின் அம்சம் என அறிவித்தீர்கள். திருமாலைப் பாடுவதும் மன்னரைப் பாடுவதும் ஒன்றே அன்றோ? எனவேதான் திருமாலைப் பாடினேன்" என்று கணிகண்ணர் கூறினார். உடன் மன்னன் சினம் கொண்டான். நகரைவிட்டு வெளியேறுமாறு கணிகண்ணருக்கு ஆணையிட்டான்.

கணிகண்ணன் ஆழ்வாரிடம் விடைபெறச் செல்ல ஆழ்வாரோ நானும் எம்பெருமானை எழுப்பிக்கொண்டு வருகின்றேன் என்று சொல்லித் திருமாலை நோக்கி

"கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்று பாடினார்.

எம்பெருமானும் பைந்நாகப்பாயைச் சுருட்டிக்கொண்டு தேவர்களும் பின்தொடர காஞ்சி மாநகர் விட்டு வெளியேறினார். அந்நகரம் பொலிவிழந்து இருள்பெற்றது.

அரசன் அமைச்சர்களை அழைத்துக் காரணம் கேட்டான். ஒற்றர்கள் மூலம் நிகழ்ந்ததை அறிந்த அரசன் வருந்தினான். கணிகண்ணரைத் தேடிச்சென்றுக் காலில் விழுந்து வணங்கி மீண்டும் கச்சிப்பதிக்கு எழுந்தருள வேண்டினான். கணிகண்ணரும் இசைவு தெரிவித்து ஆழ்வாரை வேண்ட ஆழ்வார் பெருமானைப் பார்த்து

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும் – துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கெழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்" என்று பாடினார்.

திருமாலும் மீண்டும் கச்சிமாநகர் அடைந்தார். பைந்நாகப் பாய்விரித்துப் பள்ளி கொண்டருளினார். பெருமாள் ஆழ்வாருடனும் கணிகண்ணருடனும் ஓர் இரவு தங்கிய இடத்திற்கு ஓரிரவிடுக்கை என்று பெயர் வந்தது.

பின்பு திருமழிசையாழ்வார் திருக்குடந்தை செல்ல எண்ணிப் புறப்பட்டார். வழியில் உள்ள பெரும்புலியூர் என்ற கிராமத்தில் ஒரு திண்ணையில் தங்கினார். ஒரு சில அந்தணர்கள் திண்ணையிலே அமர்ந்து வேதம் ஓதிக் கொண்டிருந்தனர். இவரைக் கண்டதும் “நான்காம் வருணத்தினனாகிய இவன் கேட்க வேதம் ஓதக் கூடாது” என நிறுத்தினர். அவர்கள் கருத்தறிந்த திருமழிசையாழ்வார் திண்ணையை விட்டிறங்கினார். அந்தணர்கள் வேதம் ஓதத் தொடங்கியபோது அவர்களுக்கு விட்ட வாக்கியம் தோன்றவில்லை. உடனே ஆழ்வார் ஒரு கருநெல்லை நகத்தால் பிளந்து குறிப்பால் காட்டியருளிச் செய்தார். அவர்களுக்கு விட்ட வாக்கியம் தோன்றியது. அந்தணர்கள் ஆழ்வாரிடம் பிழை பொறுக்குமாறு வேண்ட அவரும் அவர்களுக்கு இன்மொழிகள் கூறி விடைபெற்றார்.

பின்னர் அவ்வூரில் திருமழிசையாழ்வார் பிச்சை ஏற்றுச் செல்ல தெருக்கள்தோறும் எழுந்தருளினார். அவ்வூர்க்கோயிலில் குடிகொண்ட பெருமாள் ஆழ்வார் செல்லும் வீதிகள் தோறும் தம் திருமுகத்தைத் திருப்பி அருளினார். இதைக் கண்ட அர்ச்சகர் நம்பியார் வியப்படைய அந்தணர்கள் ஆழ்வார் பெருமையைக் கூறினார்கள். அனைவரும் சென்று திருமழிசையாழ்வாரை வரவேற்று யாகசாலை அழைத்துச் சென்று சிறந்த பீடத்தில் வீற்றிருக்கச் செய்தனர்.

பிறகு யாகத்தலைவர் யாகத்தில் செய்யும் அக்கிரபூசையை திருமழிசை ஆழ்வாருக்குச் செய்யும்போது சில வேள்விச் சடங்கர்கள் ஆழ்வாரை இழிவுபடுத்திப் பேசினர். யாகத்தலைவர் மனம் வருந்தி ஆழ்வாரிடம் வேண்ட ஆழ்வாரும்

"அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்கொலோ
இக்குறும்பை நீக்கியென்னை ஈசனாக்க வல்லையேல்
சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே" என்று பாடியருளினார்.

அவ்வளவில் யாவரும் காணும்படி திருமழிசையாழ்வாரின் திருமேனியில் எம்பெருமான் பள்ளிகொண்ட கோலத்தைக் காட்டி அருளினார். இக்காட்சி கண்ட சடங்கர்கள் ஆழ்வாரின் திருவடிகளில் விழுந்து வணங்கினர்.

பிறகு ஆழ்வார் திருக்குடந்தை அடைந்தார். ஆராவமுதனைச் சேவித்தார். அப்பதியில் இதுவரையில்தான் எழுதிய பாசுரங்களை எல்லாம் எடுத்து ஆழ்வார் காவிரி ஆற்றில் விட்டார். அவற்றுள் தொண்ணூறு பாசுரங்கள் உடைய நான்முகன் திருவந்தாதியும் நூற்றிருபது பாசுரங்களை உடைய திருச்சந்த விருத்தமும் எதிர்த்து வந்தன. அவற்றை எடுத்துப் பெருமானைச் சேவித்து அவ்விரண்டு நூல்களையும் உலகிற்கு அருளினார்.

திருக்குடந்தைப் பதியில் திருமழிசையாழ்வார் இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டுகள் எழுந்தருளியிருந்தார் எனக் கூறப்படுகிறது. இவ்வாறு அன்ன ஆகாரங்களை விட்டுவிட்டு காய் கிழங்குகளைச் சிறிது அமுது செய்து 4700 ஆண்டுகள் மண்ணுலகின் உயிர்களுக்கு நல்வழியை ஆழ்வார் உணர்த்தினார் என்பார் அறிஞர்.

இவரால் பாடப்பெற்ற திருத்தலங்களாக திருவரங்கம், அன்பில், கும்பகோணம், கவித்தலம், திருக்கோட்டியூர், திருக்கூடல், திருக்குறுங்குடி, திருப்பாடகம், திருவூர், திருவெஃகா, திருவெவ்வுளூர், திருவேங்கடம், திருப்பாற்கடல், துவாரகை, பரமபதம் போன்றவை விளங்குகின்றன.

# நம்மாழ்வார்

பாண்டிய நாட்டில் தாமிரபரணி நதிக்கரையில் திருக்குருகூர் எனும் திவ்வியத்தலம் உள்ளது. அத்தலம் ஆழ்வார் திருநகரி என்றும் அழைக்கப்படுகிறது. அத் திருப்பெயர் கொண்ட திவ்யதேசத்தில் காரியார் எனும் வைணவப் பெருஞ்செல்வர்க்கும் உடைய நங்கையார் எனும் மங்கைக்கும் மகனாக வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் நம்மாழ்வார் அவதரித்தார்.

பெற்றோர் அக்குழந்தைக்கு 'மாறன்' எனப் பெயரிட்டனர். திருக்கோயிலில் உள்ள ஒரு புளிய மரத்தடியில் நம்மாழ்வாராகிய குழந்தை அமர்ந்து கொண்டு எவ்வித அசைவுமின்றி இறைவனையே மனத்தில் எண்ணி இருந்தது. பதினாறு ஆண்டுகள் இவ்விதம் கழிந்தன.

நம்மாழ்வார் தோன்றுவதற்குச் சில ஆண்டுகள் முன்னரே திருக்கோளூரில் ஸ்ரீ மதுரகவிகள் அவதரித்தார். வட நாட்டுத் திருப்பதிகளில் குடிகொண்ட எம்பெருமானைத் தரிசிக்க மதுரகவிகள் பயணம் மேற்கொண்டு ஒரு சமயம் கங்கைக் கரையில் தங்கி இருந்தார். அங்கு ஒருநாள் இரவில் தென்திசையில் அவர் ஒரு பேரொளியைக் கண்டார்.

அப்பேரொளியை நோக்கியே பலநாள் நடந்து வந்தார். திருக்குருகூர் அடைந்தபின் அவ்வொளியைக் காணவில்லை. எனவே மதுரகவிகள் 'இவ்வூரில் ஏதேனும் வியத்தகு நிகழ்ச்சி உண்டா' என்று கேட்டார். அவரை திருப்புளியமரத்தின் கீழ் இருக்கும் நம்மாழ்வாரிடம் கொண்டுபோய் ஊர் மக்கள் சேர்ப்பித்தனர்.

மதுரகவிகள் நம்மாழ்வார் முன் ஒலி எழுப்பினார். நம்மாழ்வார் கண் திறந்து பார்த்தார். அவரிடம் மதுரகவிகள் "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத்தின்று எங்கே கிடக்கும்" எனக் கேட்டார். உடனே நம்மாழ்வார் "த்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்றார். உயிர் அதன் பிறவிக்குரிய வினை முடியும்வரை அந்த அந்த உடம்பிலிருக்கும் என்பது இதன் கருத்தாகும்.

நம்மாழ்வாரின் விடையால் மகிழ்வுற்ற மதுரகவிகள் ஆழ்வாரையே குருவாக மேற்கொண்டார். பிறந்தது முதல் பெருமானையே நினைத்திருந்த நம்மாழ்வார் பெருமானின் மேல்பாடத் தொடங்கினார். அவரது அருளிச் செயல்கள் "திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி" என்னும் நான்கு பிரபந்தகளாக விளங்குகின்றன. இவை நான்கு வேதங்களின் சாரமாக அமைந்துள்ளன என்று அறிஞர்கள் கூறுவார்கள்.

நம்மாழ்வாருக்கு (மக்களுக்கு விருப்பமானவர் எனும் பொருள்தரும்) பிரபந்த ஜன கூடஸ்தர் எனும் சிறப்புப் பெயர் உண்டு.

நம்மாழ்வார் பாண்டிய நாட்டுத் திருப்பதிகளையும், மலைநாட்டுத் திருப்பதிகளையுமே மிகுதியாகப் பாடி உள்ளார். திருவேங்கடத்தின் பெருமையை இவரது பல அருளிச்செயல்களில் காணலாம். முப்பத்தைந்து ஆண்டுகள் இவ்வுலகில் இறைவன் பெருமையைப் பாடி இருந்து அதன்பின் நம்மாழ்வார் பரமபதம் அடைந்தார்.

சடாரி, சடகோபன் என்பன நம்மாழ்வாரைக் குறிக்கும் திருநாமங்கள் ஆகும். பெருமாளின் திருவடியில் எப்பொழுதும் நம்மாழ்வார் குடியிருக்கிறார். எனவேதான் திருமால் கோயில்களில்

சேவிக்கச் செல்வோரின் தலைமீது அவர் திருவடி வைக்கப்படுகிறது. அதைச் சடாரி என்று அழைக்கிறோம்.

மதுரகவிகள் நம்மாழ்வாரையே தெய்வமாக எண்ணி அவர்மீது பதினொன்று பாசுரங்கள் பாடினார். அது "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்று தொடங்குவதால் அப்பெயராலேயே வழங்கப்படுகிறது.

கவிச்சக்கரவர்த்தி கம்பர் நம்மாழ்வாரின் பெருமைகளை நூறு பாடல்களில் "சடகோபர் அந்தாதி" எனும் நூலில்பாடி உள்ளார். அதில் கம்பர் நம்மாழ்வாரின் திருவாய்மொழி கிடைத்ததுதான் திருமாலுக்குப் பெரிய சிறப்பு என்று பாராட்டுகிறார்.

மேலும் மாறனலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதிக்கோவை, மாறன் அகப்பொருள் முதலிய பல நூல்களும் நம்மாழ்வாரின் சிறப்புகளைப் பலவகைகளில் இலக்கண, இலக்கியங்களில் பாடுகின்றன. திருவேங்கடத்துறைவான் கவிராயர் இயற்றிய மாறன் கோவை எனும் நூலும் உள்ளது.

தமிழ் நூலைப் பாராட்டி வடமொழி நூல்கள் தோன்றுவது மிகவும் அரிதாகும். 1. த்ரமிடோ உபநிஷத் சங்கதி 2. த்ரமிடோ உபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி எனும் வடமொழி நூல்கள் திருவாய் மொழியின் சிறப்பைப் பாடுகின்றன.

நம்மாழ்வார் தோன்றிய திருத்தலமும் "திருக்குருகூர்" எனும் பெயர் மாறி அவர் பெயரால் "ஆழ்வார் திருநகரி" என்று வழங்கப்படுகிறது.

திருவாய்மொழியின் இலக்கிய, சமயக் கருத்துகள் மேற்கோள்களாக பல உரையாசிரியர்களால் பயன்படுத்தப் பட்டுள்ளன.

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்"

எனும் குறளுக்கு உரை எழுதும் பரிமேலழகர் "அற்றது பற்றெனில் உற்றதுவீடு" என்ற பாசுரப்பகுதியை எடுத்துக் காட்டுகிறார்.

நச்சினார்க்கினியரும் தொல்காப்பியச் செய்யுளியல் "தரவின்றாகித் தாழிசை பெற்றும்" என்ற 149 ஆம் நூற்பாவிற்கு உரை கூறும்பொழுது திருவாய்மொழியை எடுத்துக் காட்டுகிறார்.

அறிவு தோன்றி வளராத இளமைப் பருவத்திலேயே பெருமாளின்மீது தீராப்பற்று கொண்டதால் இறைவன் நம்மாழ்வாரிடம் அன்பு செலுத்தினார் என்பதை,

"அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத்து அடியேனை வைத்தால்" எனும் திருவாய் மொழிப்பாசுர அடிகள் விளக்குகின்றன.

நம்மாழ்வார் இறைவனை ஞானக் கண்ணால் கண்டு மகிழ்ந்து வழிபட்டார். அவர் அனுபவம் எல்லாம் மானசானுபவமேயாகும். எம்பெருமானை நினைக்க நினைக்க அவரது உள்ளம் தித்திக்கிறது. தேன், பால், சர்க்கரை, அமுதம் ஆகியவை தரும் இனிப்புச்சுவையை எம்பெருமானை எண்ணி வழிபடும்போது நான் அடைகிறேன் என்கிறார்.

"தேனும் பாலும் கன்னலும் அமுது மாகித் தித்திப்ப
யானும் எம்பி ரானையே ஏத்தி னேன்யான் உய்வானே"
என்பது அவர் அருளிச் செய்த அடிகள் ஆகும்.

"மயர்வற மதிநலம் அருளினன்" என்று நம்மாழ்வார் தமது முதல் பாசுரத்தில் பாடுகிறார். எனவே அவர் பாடிய பாடல்கள் எல்லாம் இறைவன் திருவருளால் பாடப்பட்டவையே ஆகும். மேலும் இறைவனே தம் உள்ளிலிருந்து இப் பாசுரங்களைப் பாடுகிறான் என்பதை

"என் நெஞ்சத் துள்ளிருந்திங் கிருந்தமிழ்நூல்
இவை மொழிந்து" எனும் அடிகளில் அவர் கூறுகிறார்.

ஞானக் கண்ணால் கண்ட இறைவனை ஆழ்வார் ஊனக் கண்ணால் காண விரும்புகிறார் ; பலமுறை பெருமானை அழைக்கிறார். அப்பொழுதும் இறைவன் வரவில்லை. "என் முன் வர விருப்பம் இல்லாவிடில் உன்முன் வரமாட்டேன் என்றாவது கூறுக. இறைவனே என்முன் தோன்றி" நீ பாவி ; அதனால் உனக்குக் காட்சி தந்து அருளமாட்டேன் என்றாவது கூறுக. உன் சொற்கேட்டு யான் மகிழ்வேன் என்று ஆழ்வார் பாடுகிறார்.

"கூவிக் கூவி நெஞ்சுருகிக்
கண்பனி சோர நின்றால்
பாவிநீ என்றொரு சொல்லாய்
பாவியேன் காண வந்தே"
என்பது அவர் பாசுரம் ஆகும்.

மேலும் எனக்கு வேண்டியவை எம்பெருமான் மட்டுமே எனக்குத் தரவேண்டும். மிக்க அன்போடு வேறு யார் கொடுத்தாலும் அவை வேண்டேன் எனும் பொருள் தரும்படி

"உன்னால் அல்லால் யாவ ராலும்

ஒன்றும் குறை வேண்டேன்"

என்று ஆழ்வார் பாடுவதையும் பார்க்க முடிகிறது.

நம்மாழ்வார்

"பிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்

இறப்பில் எய்துக எய்தற்க யானும்"

என்று பாடுகிறார். "யான் மோட்சம் அடைந்தாலும் சரி, நரகமே அடைந்தாலும் சரி ; எனக்குக் கவலை இல்லை. என் உள்ளில் உள்ள எம்பெருமானை இடையறாது எண்ணி மகிழும் இன்பமே யான் எப்பொழுதும் வேண்டுவன்" என்று அவர் கூறுகிறார்.

இவ்வாறான பல மனநிலைகளை ஆழ்வார் அடைந்திருப்பதையும், அனைத்திற்கும் அவர் பெருமாளின் மீது கொண்ட பேரன்பே அடிப்படை என்பதையும் திருவாய் மொழிப் பாசுரங்களில் காணமுடிகிறது.

# மதுரகவி ஆழ்வார்

ஆண்டவன் பெருமைக்கு நிகராக அடியவர் தன்மைகளைப் போற்றுவது வைணவத்தின் தனிச்சிறப்பாகும். "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்" என்று பெருமாளுடன் உறவுகொண்டு அருளிச் செய்த நம்மாழ்வாரின் திருவடிகளையே போற்றிப்பாடி அனுபவித்தவர் மதுரகவி ஆழ்வார்.

ஒரு நற்குருவின் வழிச்சென்றே இறையனுபவத்தைக் கண்டுகளிக்க வேண்டும் என்பது வைணவ சம்பிரதாயமாகும். அதன்படி நம்மாழ்வாரையே தனது ஆசானாகக் கொண்டவர் மதுரகவி ஆழ்வார். இவர் பண்டைய பாண்டி நாட்டில் திருக்கோளூர் என்னும் திருத்தலத்தில் அவதரித்தார்.

முன்குடுமிச் சோழிய அந்தணர் மரபில் துவாபரயுகத்தில் ஈசுவர ஆண்டு சித்திரைத் திங்கள் வளர்பிறையில் சதுர்த்தசி திதியில் வெள்ளிக் கிழமையில் மதுரகவி தோன்றினார். சித்திரை நட்சத்திரத்தில் ஸ்ரீ வைநதேயாம்சராய் தோன்றியருள் செய்த மதுரகவி ஆழ்வார் சிறு வயது முதற்கொண்டே திருமாலிடம் அன்பு வாய்க்கப் பெற்றவராய் ஒழுகி வந்தார். இவர் வடமொழியிலும் தமிழ்மொழியிலும் புலமை பெற்று சிறந்து விளங்கினார்.

தமிழ்மொழியில் இனிமையான (மதுரமான) கவிதைகளைப் பாடியதால் இவர் மதுரகவியாழ்வார் என்றழைக்கப்பட்டார். செங்கண்மாலைப் பலத் திருத்தலங்களுக்கும் சென்று சேவிக்க விரும்பிய மதுரகவி முதலில் அயோத்தி சென்றார். பின்னர்

அங்கிருந்து மதுரை, மாயை காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் திருப்பதிகளுக்குச் சென்று எம்பெருமானாய்த் தரிசித்து மீண்டும் அயோத்தி திரும்பி வந்தார். அங்கே எழுந்தருளியுள்ள அழியா அழகினனான இராமபிரானையும் சீதா பிராட்டியையும் சேவித்து அங்கேயே ஆழ்வார் வாழ்ந்து வந்தார்.

மதுரகவி ஆழ்வார் திருக்கோளூர் எனும் திவ்யதலத்தில் குடி கொண்டுள்ள எம்பெருமானை ஒருநாள் நள்ளிரவில் திசைநோக்கித் தொழக் கருதினார். அவர் தென்திசையை அதன் பொருட்டு நோக்கியபொழுது அங்கே வானுற உயர்ந்து விளங்கிய ஒருபேரொளியைக் கண்ணுற்றார். தொடர்ந்து மூன்று நாள்களிலும் அவ்வொளியைக் கண்டு வியப்பு கொண்ட ஆழ்வார் அதைக்காண விருப்பம் கொண்டார். எனவே அதைக் குறியாகக் கொண்டு புறப்பட்டார். அதன் வழியேத் தன் வழியாய்க் கிளம்பிய மதுரகவி ஆழ்வார் பலநாள் நடந்து பலநாடுகள் கடந்து திருக்குருகூரை அடைந்தார். மதுரகவி ஆழ்வாருக்கு வழிகாட்டிய அப்பேரொளி அவ்வூரின் திருக்கோயிலில் புகுந்து மறைந்து விட்டது.

திருக்குருகூரின் மக்களைப் பார்த்து "இவ்வூரில் சிறப்பான செய்தி ஏதேனும் உண்டா" என்று மதுரகவி ஆழ்வார் வினவ அவர்கள் அவருக்கு திருக்கோயிலுக்குள் எழுந்தருளியுள்ள நம்மாழ்வாரின் பெருமையையும் வரலாற்றையும் கூறினர். மதுரகவி திருக்கோயிலின் உள்ளே சென்று நம்மாழ்வாரை அணுகி இரண்டு கைகளையும் தட்டி நன்றாக ஓசை எழுப்பினார். உடன் நம்மாழ்வார் பதினாறு ஆண்டுகள் இருந்த யோகம் கலைந்து கண் திறந்து மதுரகவியைப் பார்த்தார்.

மதுரகவி அவரிடம் "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்று கேட்டார். அதற்கு நம்மாழ்வார் அத்தைத்தின்று அங்கே கிடக்கும் என்று திருவாய் மலர்ந்தருளினார். உடலின் உள்ளே தோன்றும் ஆன்மா அந்த உடலின் தொடர்பினால் வரும் இன்ப துன்பங்களை அனுபவித்துக் கொண்டு அங்கேயே கிடக்கும் என்பது இதன் பொருளாகும்.

உடனே மதுரகவி நம்மாழ்வாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி "அடியேனை ஆட்கொள்ள வேண்டும்" என விண்ணப்பித்தார். அவருக்கு அருள் செய்த நம்மாழ்வார் அவரைத் தம் அருளிச் செயல்களைப் பட்டோலையில் அலங்கரிக்கச் செய்தார். இதனால் மதுரகவிக்கு நம்மாழ்வாரின் பாசுரங்களின்பால் பற்று ஏற்பட்டது. எனவே அவர் நம்மாழ்வாரின்மீது பதினோரு பாசுரங்களால் ஆன பாமாலை பாடிச் சார்த்தினார்.

அதன் முதல்பாடல் "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்று தொடங்குவதால் அப்பாமாலைக்கே "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்று பெயராயிற்று. மேலும் மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வார்பால் மட்டற்ற அன்பும் அளவற்ற பக்தியும் கொண்டிருந்தார். எனவே நம்மாழ்வார் திருநாடு அலங்கரித்த பின்னர் அவரின் அர்ச்சை வடிவை திருக்குருகூரில் மதுரகவி ஆழ்வார் எழுந்தருளச் செய்தார்.

நம்மாழ்வாருக்கு நித்தியம் நைமித்திக விழாக்களை எல்லாம் மதுரகவி சிறப்புற நடத்தி வந்தார். அவ்விழாக்களில் நம்மாழ்வாரைப் பெருமைப்படுத்த "வேதம் தமிழ்செய்த மாறன்; திருமாலுக்குரிய தெய்வப்புவலர் அளவிலா ஞானத்து ஆரியர்" முதலானப் பல விருதுகளைக் கூறி முழங்கினார். மதுரைத்

தமிழ்ச்சங்கப் புலவர்களில் ஒரு சிலர் இதைக் கேள்வியுற்று "நமது ஆழ்வார் ஒரு பக்தர்தானே ! பகவானோ? இவர் சங்கமேறிய புலவரோ? இவர் பாடிய திருவாய்மொழி சங்கம் ஏறிப் பெருமை பெற்றதோ? அன்றியும் இவரை வேதம் தமிழ் செய்வாரென்று போற்றுதல் தகுமோ" என்று பல் வகையாய் வினா தொடுத்துப் பரிகசித்தனர்.

அதைக்கேட்ட மதுரகவி மனம் வருந்தினார். "இவர்களெல்லாம் செருக்கழிந்து போக வழி செய்தருளவேண்டும்" என்று துதித்தார். உடன் சடகோபர் ஒரு கிழ அந்தணர் வடிவத்தில் தோன்றினார். "மதுரகவியே ! கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் ! எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை எழுதுவீர் ! எழுதிய அந்த ஏட்டை சங்கப் பலகையில் வைத்தால் அவர்களின் கர்வம் அடங்கும் என்று கூறியருளினார். அவ்வாறே மதுரகவி ஆழ்வாரும் செய்தார். அந்த ஏட்டை வைத்த அளவில் சங்கப் பலகை பொற்றாமரைக் குளத்தில் மூழ்கியது. அதன் மீதிருந்த புலவர்களும் நீரில் வீழ்ந்தனர். அந்தச் சிற்றேட்டை மாத்திரம் தாங்கிக் கொண்டு சங்கப் பலகை நீரில் மிதந்தது.

நீரில் நீந்திக் கரையேறிய சங்கப் புலவர்கள் நம்மாழ்வாரின் தெய்வாம்சத்தை உணர்ந்தனர். தங்கள் செருக்கழிந்த அவர்கள் நம்மாழ்வாரின் பெருமைகளைத் தனித்தனியாகப் பாடல் இயற்றிப் போற்றினர். தங்கள் குற்றங்களைப் பொறுத்தருளுமாறு வேண்டினர்.

மேலும் தமிழ்ச்சங்கப் புலவர்களுக்குத் தலைவராக விளங்கியவர் "உங்களுக்கு நாங்கள் நிகராக நிற்க முடியுமோ? கருடனுக்கெதிரே ஈயும் சூரியனுக்கெதிரே மின்மினியும், புலியின்

முன் நாயும், சிங்கத்தின் முன் நாயும் சமமாகுமோ" எனும் கருத்தமைந்த இப்பாடலால் ஆழ்வாரைப் போற்றிப் புகழ்ந்தார்.

"ஈயா டுவதோ கருடற் கெதிரே
இரவிக் கெதிர்மின் மினியா டுவதோ
நாயா டுவதோ உறுவெம் புலிமுன்
நரியா டுவதோ நரகே சரிமுன்
பேயா டுவதோ அழகூர் வசிமுன்
பெருமான் வகுளா பரணன் அருள்கூர்ந்(து)
ஒவா துரையா யிரமா மறையின்
ஒருசொற் பெறுமோ உலகிற் கவியே"

இதன்பிறகு சங்கப்புலவர்களும் மதுரகவி ஆழ்வாருடன் சேர்ந்து நம்மாழ்வாருக்கு விருதுகள் கூறி விழாக்களெல்லாம் சிறப்பாக நடத்தி வந்தனர்.

மதுரகவி ஆழ்வாரும் பல ஆராதனைகளை நம்மாழ்வாருக்கு நடத்தி வந்ததுடன் அவரது அருந்தமிழ்மறைகளின் பொருள்களைப் பலரும் உணரச் செய்தார். சிலகாலம் கழித்து மதுரகவி ஆழ்வாரும் பேரின்பப் பெருவீடான திருநாடு அலங்கரித்தார்.

# குலசேகராழ்வார்

பாற்கடலில் பாம்பணையில் அறிதுயில் கொள்ளும் எம்பெருமானிடம் அன்பு செலுத்தி மனம் உருகி ஆழ்ந்த ஆழ்வார் பெருமக்களில் குலசேகராழ்வார் தனி இடம் வகிக்கிறார்.

ஆழ்வார் பெருமக்களில் பெருமாள் எனும் அடைமொழி சேர்க்கப்பட்டு குலசேகரப் பெருமாள் என்று அழைக்கப்படும் பேறு பெற்றவர் இவரே ஆவார். ஆழ்வார் குலத்திற்கே சேகரர் என்று இவரைப் போற்றுவார்கள்.

மேலும் "கொல்லிக்காவலன், கடல் நாயகன், கோழிக்கோன் குல்சேகரன்" எனும் பெயர்களால் இவர் புகழப்பாடுகிறார். குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரைப் போல மன்னர் மரபிலே வந்துதித்த மாணிக்கம் போன்றவர் ஆவார்.

"கொல்லி நகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்" என்று இவர் பிறந்த நாளை உபதேசரத்தின மாலையில் மணவாள மாமுனிகள் வியந்து போற்றுகிறார்.

பராபவ ஆண்டு மாசித்திங்கள் வளர்பிறையில் துவாதசி திதியில், வெள்ளிக்கிழமையில் எம்பெருமானின் திருமார்பில் ஒளி வீசும் கௌஸ்துபமணியின் அம்சமாக குலசேகராழ்வார் தோன்றினார். இவரைத் திருமகனாக அடையும்பேறு பெற்றவர்கள் திடவரதனும் நாதநாயகி அம்மையாரும் ஆவார்.

தக்கபருவம் வந்தபின் தந்தையாருக்குப் பின் பட்டமேற்று

சோழனையும், பாண்டியனையும் வென்றார். அவ்வளவில் எம்பெருமானின் கடைக்கண் அருட்பார்வை பட்டதனால் குலசேகரருக்கு வாழ்க்கைத் தத்துவம் விளங்கியது. திருமாலுடைய அருஞ்செயல்களை எண்ணி ஏத்தாது கழித்த நாட்கள் பிறந்தும் பிறவாத நாட்கள் என்று குலசேகரர் ஏங்கினார். திருவரங்கப் பெருமாளை என்று கண்ணாரக் களிப்போம் என்ற வாடினார். எப்பொழுதும் வைணவ அன்பர்கள் புடை சூழ இறைவன் பெருமையையே அவர் பேசிக் கொண்டிருந்தார்.

இதை விரும்பாத சிலர் இறைவனின் நவரத்தின மாலையை வைணவ அன்பர்கள் களவாடியதாக வீண்பழி சுமத்தினர். வைணவ அன்பர்கள் தீயசெயல் செய்யார் எனும் நம்பிக்கை உடைய குலசேகரர் ஒரு குடத்தில் நல்ல பாம்பை இட்டு வைணவர்கள் அம்மாலையை எடுத்திருந்தால் இப்பாம்பு எனைத் தீண்டட்டும் என்று அதனுள் கையை விட்டார். பாம்போ அவரைத் தீண்டாமல் வணங்கிப் படமெடுத்தாடியது.

இச்செய்தியை மணக்கால் நம்பியின் பெருமாள் திருமொழித் தனியனில் காணப்படும்,

"ஆரம்கெடப் பரன்அன்பர் கொள்ளார் என்று அவர்களுக்கே
வாரம்கொடு குடப்பாம்பில் கையிட்டவன்"

எனும் அடிகள் உறுதி செய்கின்றன.

திருமங்கை மன்னனும், தொண்டரடிப் பொடியாழ்வாரும் வாழ்ந்த காலத்திலே குலசேகராழ்வாரும் அருளிச் செயல்கள் புரிந்ததால் இவரது காலம் எட்டாம் நூற்றாண்டாக அறியப்படுகிறது.

குலசேகர ஆழ்வார் அருளிச் செய்த நூற்றைந்து பாசுரங்களும் பெருமாள் திருமொழி என்று போற்றப்படுகின்றன.

"இருளிரிய என்று எடுத்த இசையிற்சொன்ன
நன்பொருள் சேர்திருமொழி நூற்றைந்துபாட்டும்" என்று ஸ்ரீவேதாந்த தேசிகர் கூறுகிறார்.

குலசேகர ஆழ்வார், திருஅயோத்தி, திருவரங்கம், திருவாலி, திருக்கண்ணபுரம், திருச்சித்திரகூடம், திருப்பாற்கடல், திருவேங்கடம், திருவித்துவக்கோடு ஆகிய திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமானை மங்களாசாசனம் செய்துள்ளார். தம் இறுதிக்காலத்தில் இப்பெருமாள் திருக்குருகூர் சென்று நம்மாழ்வாரைச் சேவித்துப் பின் தம் அறுபத்தைந்தாம் வயதில் பிரம்மதேசம் எனும் மன்னார்கோயிலில் திருநாட்டை அலங்கரித்தார் எனக் கூறுவர்.

பெருமாள் திருமொழியின் முதல் இரண்டு பத்துக்களும் பாம்பணையில் பள்ளி கொண்டுள்ள திருமாலின் திருக்கோல அழகைக் கண்டு மகிழும் ஆர்வத்தையும், எம்பெருமானின்மீது அன்பு கொண்டுள்ள அடியவரை விரும்பும் ஆழ்வாரின் மன வேட்கையையும் வெளிப்படுத்துகின்றன.

மூன்றாவது திருமொழி இறைவனுக்கு விருப்பம் இல்லாதவற்றை நாமும் வெறுத்து ஒதுக்க வேண்டும் எனக் கூறுகிறது. திருவேங்கடமுடையானின் திருமலையில் ஏதேனும் ஒன்றாகக் கிடக்க ஆழ்வார் விரும்புவதை நான்காம் திருமொழியும் இறைவனிடம் சரண் அடைய வேண்டியதை ஐந்தாம் திருமொழியும் காட்டுகின்றன.

ஆறாம் திருமொழி ஆய்ச்சியர்கள் ஊடலையும், ஏழாம் திருமொழி தேவகி புலம்பலையும் காட்டுகின்றன. கோசலை தாலாட்டை எட்டாம் திருமொழியிலும் தயரதனின் பிரிவுத் துயரை ஒன்பதாம் திருமொழியிலும் காண முடிகிறது.

பத்தாம் திருமொழி முழுவதிலும் இராமகாதையே சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது.

இராமாயண உபன்யாசம் கேட்டுக்கொண்டு இருந்த குலசேகர ஆழ்வார் அவ்வரலாறு அப்போதுதான் நடைபெறுவதாக உணர்வு அதிகமாகித் கர தூஷணர்களிடமிருந்து இராமனைக் காப்பாற்ற படை திரட்டிச் சென்றதாகக் கூறுவார்கள்.

இராமாவதாரத்தில் ஈடுபட்டு அனுபவித்த அதே அளவிற்குக் குலசேகர ஆழ்வார் கிருஷ்ணவதாரத்திலும் பக்தி செலுத்தி உள்ளதைப் பார்க்க முடிகிறது.

ஆறாம் திருமொழியாகிய ஏர்மலர் பிரவேசம் முழுமையும் கண்ணனைப் பற்றியே கூறுகிறது. நாயகியாகப் பாடிய நம்மாழ்வரையும், திருமங்கை ஆழ்வாரையும் இத்திருமொழி நினைவூட்டுகிறது.

மேலும் நம்மாழ்வாருக்கு "மின்னிடை மடவாரும்" என்ற திருமொழியைப்போல, திருமங்கையாழ்வாருக்கு "காதில் கடிப்பும்" திருமொழியைப் போன்று குலசேகரப் பெருமாளுக்கு ஏர்மலர் பிரவேசம் பெருமை சேர்க்கிறது என்று கூறுவார்கள்.

இப்பாசுரங்களில் கண்ணபிரானிடம் பலமுறைகளில் ஆய்ச்சியர் ஊடல் கொள்கின்றனர். உரிமையுடன் கோபமாகப் பேசுகின்றனர்.

"கூர்மழைபோல் பனிக்கூதலெய்திக்
கூசி நடுங்கிய யமுனையாற்றில்
வார்மணற் குன்றில் புலரநின்றேன்
வாசுதேவா உன்வரவு பார்த்தே"

என்பவை பாசுர அடிகள் ஆகும்.

ஒரு பெண் பேசுகிறாள் "கண்ணா ; யமுனை ஆற்றங்கரையில் என்னைக் காத்திருக்கச் சொன்னாய் ; மழைக்காலத்தில், யமுனை ஆற்றின் ஓரம் மணல் குன்றில் நான் நின்றிருந்தேன். பனிக்காற்று வீசியது. உடல் நடுங்கி யாராவது பார்த்துவிடப் போகிறார்களே என உள்ளமும் கூசி போகத்துக்கு ஏகாந்தமான மணல் குன்றில் இருந்தேன். உன் வரவு பார்த்திருந்தேன் ; வாசுதேவா ! நீ வரவில்லையே !"

இப்பாசுரத்தில் கண்ணனை "வாசுதேவா" என அழைத்து வேண்டுவது கவனிக்கத்தக்கது. "நாங்கள் உன் வார்த்தையை நம்பவில்லை ; ஆனால் நீ ஒரு வார்த்தையும் பொய் சொல்லாத வாசுதேவன் என்பவரின் பிள்ளையன்றோ ! அதனால்தான் வந்தோம்" எனும் பொருள்பட வாசுதேவா என அழைக்கின்றனராம் ;

"உன்னை விஸ்வஸித்தன்று ; உன் பிதாவை விஸ்வஸித்து" என்பது வியாக்கியானம் ஆகும்.

ஆறாம் திருமொழியின் எட்டாம் பாசுரம் மிகச் சிறப்பான ஒன்றாகும். "கண்ணா ! என்னை வரச் சொன்னாய் ! ஆனால் முல்லைப் பந்தலின்கீழ் வேறு ஒருத்தியிடம் அன்பு செலுத்தினாய், நான் பார்த்துவிட்ட போது பொய்யச்சம் காட்டி அகன்றாய்" என்று

ஒரு பெண் மொழிகிறாள். மேலும் "என்னை ஏமாற்றிப்போய் விட்டீர் அல்லவா ! என் கையில் ஒரு நாள் அகப்பட்டால் நான் என் சினம் தீர்த்துக் கொள்வேன்" என்றும் அவள் பேசுகிறாள்.

"என் கையகத்து ஒருநாள் வருதியேல்
என்சினம் தீர்வன் நானே" என்பது ஆழ்வார் அருளிய அடிகள் ஆகும்.

உய்ந்தபிள்ளை எனும் அரையர் இப்பாடலுக்கு நடனம் ஆடினராம். 'என் சினம் தீர்வன் நானே' எனும் அடிக்கு அபிநயம் பிடிக்கையில் கோபத்தைத் தீர்த்துக் கொள்வதுபோல் கையால் அடித்தும் காலால் உதைத்தும் காண்பித்தாராம். இதைப் பார்த்துக் கொண்டிருந்த எம்பார் அவர்கள், அடியவரின் ஸ்பரிசத்தை விரும்பும் கண்ணனுக்கு இவை இனிக்குமன்றோ ! அவன் வரும்போது பாராமுகமாய் இருப்பதே கண்ணபிரானைத் தண்டித்தலாகும். பக்தன் தன்னைப் பார்க்கவில்லையெனில் பரமன் வருத்தப்படுவார் எனும் பொருளில் முகத்தைக் கைகளால் மறைத்துக் காண்பித்து அபிநயம் புரிதல் வேண்டும் என்றாராம்.'

ஏழாம் திருமொழியின் பத்துப் பாசுரங்களும் தேவகி புலம்பலாக வெளிப்பட்டுள்ளது. 'கண்ணபிரானை நோன்பிருந்து பிள்ளையாகப் பெறும் உபாயம் அறிந்து பெற்றோம். ஆனால் உபேயமாகிய பலனை யசோதையன்றோ அனுபவித்தாள். கண்ணனின் பிள்ளை விளையாட்டுகளான வெண்ணெய் உண்டல், குன்றினால் குடைகவித்தல், குரவை கோத்தல், கன்றினால் விளவு எறிதல், காலால் காளியன் தலைமிதித்தல், குடக்கூத்தாடி அருளல் முதலியவற்றை எல்லாம் யசோதை கண்ணாரக் கண்டாளே ! நான்

பிள்ளை இன்பத்தை இழந்த கொடுவினையேன் ஆனேனே என்றெல்லாம் யசோதை புலம்புவதாக ஆழ்வார் அருளிச் செய்கிறார்.

மேலும் வீட்டிலுள்ள முதிர்ந்த பெண்டிர் கண்ணனிடம் உன் தந்தை யார் என்று கேட்பார்களாம். கண்ணன் என்ன செய்வான் என்பதை தேவகி கூறுகிறாள்.

'நின் செங்கேழ் விரலினும் கடைக் கண்ணினும்' காட்ட நந்தன் பெற்றனன் ; நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே என்பது பாசுர அடிகள் ஆகும்.

கண்ணபெருமானுக்குத் தந்தையாகக் காட்டப்படும் பேற்றை நந்தகோபன் பெற்றானே ! வாசுதேவன் பெறவில்லையே என்று கணவனுக்காகவும் தேவகி புலம்புகிறாள். மேலும் ஆலை நீள் கரும்பன்னவன் தாயோ, அம்புயத்தடங்கண்ணினன்தாலோ, வேலைநீர் நிறத்தன்னவன் தாலோ என்றெல்லாம் யசோதை தாலாட்டுவாளே ! இப்படித் தாலாட்டும் அனுபவம் எனக்குக் கிடைக்கவில்லையே ! தாயாரில் கடையாயின தாயாகிவிட்டேனே என்று தேவகி பாடுகிறாள். கரும்பு நாவிற்கு இன்பம் தரும், தாமரை கண்ணுக்கு இனிமையாய் இருக்கும், கடலோ செவிக்கு ஓசையின்பம் நல்கும். இவ்வாறு கண்ணன் எல்லாப் பொறிகட்கும் இனிமையானவன் என்பது புலப்படுகிறது.

கண்ணன் சிறு குழந்தையாய்த் தூளியில் மேலே கட்டப்பட்டுள்ள பொருளைக் கண் விழித்துப்பாாத்து, சிவந்த திருவடிகளை மடக்கி, சிறுவிரல்களையும் உள்ளங்கை நோக்கி இறுக மடித்து ஆனைக்குட்டி கிடப்பதுபோல் பள்ளிகொண்ட அழகை யசோதை

கண்டுகளித்தாளே ! யான் அனுபவிக்கவில்லையே என்று தேவகி புலம்புவதாக ஆழ்வார் பாடுகிறார். குலசேகர ஆழ்வாரே ஆயர்குலப் பெண்களாகவும், தேவகியாகவும் மாறி அருளிச் செய்துள்ள பாசுரங்கள் பக்தி இன்ப வெள்ளத்தில் நம்மை திளைக்கச் செய்கின்றன.

இவ்வாறு குலசேகரப் பெருமாள் தான் பெற்ற அனுபவங்களையும் பெறவேண்டிய இன்பத்தையும் கண்ணன்மேல் ஏற்றிப்பாடி நமக்காக அருளிச் செய்திருக்கிறார் என்றால் மிகையாகாது.

# பெரியாழ்வார்

பாண்டிய நாட்டில் புத்தூர் எனும் ஊருக்கருகில் ஒரு பெரியகாடு சிறந்து விளங்கியது. அக்காட்டில் வாழ்ந்த வேடர் குலத் தலைவனுக்கும், அவன் மனைவி மல்லி என்பாளுக்கும் வில்லி, கண்டன் எனும் இரு புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்கள் தக்க பருவத்தில் ஒருநாள் வேட்டையாடப் புறப்பட்டனர். கண்டன் ஒரு புலியைத் துரத்திச் சென்று அம்பெய்தான். ஆனால் அம்பிற்குத் தப்பிய புலி சீறிப்பாய்ந்து வந்து கண்டனைத் தாக்கிக் கொன்றது.

பின்னால் ஓடிவந்த வில்லி, கண்டன் இறந்து கிடப்பதைக் கண்டு வருந்தினான்; அழுதான் ; இறைவனை வேண்டினான். பெருமானின் அருள் வெள்ளம் பாய்ந்து கண்டன் உயிர் பெற்றெழுந்தான். அதோடு அங்கே கடவுள் அருளால் செல்வம் மிகுதியாகக் கிடைத்தது. அதைக் கொண்டு வில்லி அந்த இடத்தில் திருமாலுக்கு ஓர் அழகிய உயர்ந்த கோயில் எழுப்பினான். கோயிலைச் சுற்றித் தெருக்களும், சோலைகளும், தெருக்கள்தோறும் சிறந்த வீடுகளும் அமைத்தான்.

பிறகு புத்தூரில் உள்ளவர்களை புதியதாய்த் தான் அமைத்த ஊரில் குடியேறச் செய்தான். புத்தூர் என்பதோடு தன் பெயரான வில்லி என்பதையும் சேர்த்துப் புதிய ஊருக்கு வில்லிபுத்தூர் எனப் பெயரிட்டான். அங்குக் கட்டிய கோயிலுக்குப் பூசை செய்வதற்குரிய வழிகளையும் செய்தான். அவ்வூரைச் சூழ்ந்த இடத்திற்குத் தனது தாயின் நினைவாக 'மல்லிநாடு' எனப் பெயரிட்டான்.

வில்லிபுத்தூரில் குடியேறிய அந்தணர்களில் முகுந்தபட்டர் என்ற முன் குடுமிச் சோழியர் ஒருவர் இருந்தார். அவர் பதுமவல்லி என்பாரை மணந்து இல்லறம் நடத்தி வரும் நாளில் திருமாலின் நல்லருளால் அவர்களுக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அந்த ஆண்மகவே பிற்காலத்தில் பெருமையுடன் விளங்கிய பெரியாழ்வார் ஆவார்.

பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூரில் கலியுகத்தில் ஸ்ரீ பராங்குசர் அவதாராதி 47 –ஆவதான குரோதன ஆண்டு, ஆனித் திங்கள், வளர்பிறையில் ஏகாதசி திதியில், ஞாயிற்றுக் கிழமையில், சுவாதி நட்சத்திரத்தில் பெரிய திருவடியான கருடாழ்வாரின் அம்சமாய் அவதரித்தார்.

பெற்றோர் இவருக்கு விஷ்ணுசித்தன் எனப் பெயரிட்டனர். இவர் கல்வி கேள்விகள் கைவரப் பெற்றார். திருமாலுக்குத் தொண்டு செய்வதே வாழ்வின் சீரிய நோக்கம் என அவருக்குத் தோன்றியது. எனவே ஒரு நீர்ப்பாங்கான நிலத்தைத் தேர்ந்தெடுத்து அதனைச் சுற்றிலும் வேலி அமைத்தார். அங்குப் பலவகை மலர்ச்செடிகளையும் கொடிகளையும் வளர்த்து அவற்றிலிருந்து நாள்தோறும் மலர்கள் பறித்து அம்மலர்களால் மாலைகள் தொடுத்து அவற்றை அவ்வூரின் வடபெருங்கோயிலில் எழுந்தருளியுள்ள திருமாாலுக்குச் சார்த்தி வரும் திருத்தொண்டையே பெரியாழ்வார் புரிந்து வந்தார்.

அப்பொழுது பாண்டிய நாட்டை வல்லபதேவன் எனும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் நற்கல்வி கேள்வி ஞானம் வாய்க்கப்பெற்றதோடு பலகலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தான்.

அவன் அறக்கள வேள்வியிலும் மாட்சிமை அடைய விரும்பி வாழ்வின் உண்மைப் பொருளை உணர வழி தேடினான். அவனை நாடி வேத வேதாகமங்களில் தேர்ச்சி பெற்ற செல்வ நம்பி எனும் புரோகிதர் ஒருவர் வந்தார். அவரிடம் அரசன், "அந்தமில் இன்பத்தை எவ்வாறு பெறலாம்" என்று கேட்டான். அதற்கு அவர் "வேதமுடிவாகிய பரம்பொருள் இன்னது என்பதை வித்துவான்கள் மூலம் நிச்சயித்து, அவ்வழியாகவே பெறலாம்" என்று விடையிறுத்தார்.

பின்னர் அரசன் தனது அரியணைக்கு முன் ஒரு தோரணக் கம்பம் நட்டு அதில் ஒரு பொற்கிழியைக் கட்டுவித்தான். "யார் கூறும் உண்மைப் பொருள் நிச்சயத்தாலே இப்பொற்கிழிதானே அறுந்துவிழும்படி எவர் செய்கின்றாரோ அவருக்கே இப்பொற்கிழி உரியதாம்" என்று பறையறிவித்தான். பலர் வந்து பல உரைத்தும் பொற்கிழி அறுபடவில்லை.

இந்நிலையில் ஒருநாள் பெருமாள் விஷ்ணுசித்தன் கனவில் தோன்றினார். பாண்டியன் அவைக்குச் சென்று பொற்கிழி அறும்படி உண்மைப் பொருளை உரைக்கும்படி அருளினார். விஷ்ணுசித்தரும் இறைவன் சொற்படி பாண்டியன் திருநகர் அடைந்தார். அரசவையில் மன்னன் அவரை வரவேற்றான் தக்க இருக்கை அளித்துச் சிறப்பு செய்தான்.

ஆனால் அங்கிருந்த புலவர்கள் விஷ்ணுசித்தரைப் பார்த்து எண்ணி நகையாடி அவமதித்துப் பேசிக் கொண்டனர். அரசன் குறிப்பின்படி செல்வ நம்பி விஷ்ணுசித்தரிடம் "வேதமுடிவாயுள்ள உண்மைப் பொருளைத் தாங்கள் உணர்த்த வேண்டும்" என உரைத்தார். திருமாலின் திருவருள் பெற்றமையால் விஷ்ணுசித்தர் அவையின் இடையில் வந்தார். அவையை வணங்கினார். வேத

முடிவாயுள்ள உண்மைப் பொருளைத் தன் சொற்கள் கொண்டு விளக்க உரை ஆற்றினார். அச்சொற்பெருக்கால் பொற்கிழி கட்டியிருந்த கம்பம் இவரை நோக்கி வளைய பொற்கிழி இவர் அருகே வந்தது. இவரும் பொற்கிழி அறுத்துக் கொண்டார்.

மன்னனும் செல்வநம்பியும் மற்றவர்களும் விஷ்ணுசித்தரை வணங்கினர்., மன்னர் அவருக்கும் "பட்டர்பிரான்" எனும் பட்டம் வழங்கினான். பட்டத்து யானைமீதுஅவரை ஏற்றி விருதுகளும் வாழ்த்தொலிகளும் முழங்க அவரை வீதிஉலா வரச் செய்தான். அவ்வாறு வருங்காலத்துத் திருமால் அயன், அரன், இந்திரன் புடைசூழ கருடாழ்வாரின் மீது அமர்ந்து வந்து பெரியாழ்வாருக்கும் அரசனுக்கும் காட்சியளித்தார்.

பரந்தாமனின் எழில் தோற்றம் கண்ட பட்டர்பிரான் அன்பின் வெள்ளம் பெருக்கெடுத்து வர, இறைவன் எழில்நிலை பெற்றிருக்கும் வகையில் திருமாலுக்குப் பல்லாண்டு பாடி வாழ்த்தினார். பின்னர் பெரியாழ்வார் அனைவரிடமும் விடைபெற்று வில்லிபுத்தூர் அடைந்தார். பொற்கிழியறுத்ததால் கிடைத்த பொன்னைக் கொண்டு வட பெருங்கோயிலைப் புதுப்பித்தார். கண்ணபிரானின் திருஅவதாரச் சிறப்பினை நாற்பத்து நான்கு திருமொழிகளாக அருளிச் செய்தார். இவற்றின் மொத்தப் பாசுரங்கள் **461** ஆகும்.

பல்லாண்டின் பாசுரங்கள் பன்னிரண்டு ஆகும். ஆகப் பெரியாழ்வாரால் பாடப்பட்ட பாசுரங்களின் எண்ணிக்கை **473** ஆகும். இவை பெரியாழ்வார் திருமொழி எனும் பெயரில் வழங்கப்படுகின்றன. திருமாலுக்கே பல்லாண்டு பாடினமையால் பெரியாழ்வார் என்று வழங்கப்படும் இவருக்கு ஸ்ரீ வில்லிபுத்தூர் கோன், கிழியறுத்தான், புதுவைக்கோன், பட்டர்பிரான் எனும் பெயர்களும் கூறப்படுகின்றன.

பெரியாழ்வரால் பாடப்பெற்ற தலங்கள் திருவரங்கம், திருவெள்ளாறை திருப்பேர் நகர், கும்பகோணம், திருக்கண்ணபுரம், திருச்சித்திரகூடம், திருமாலிருந்சோலைமலை, திருக்கோட்டியூர், ஸ்ரீ வில்லிபுத்தூர், திருக்குறுங்குடி, திருவேங்கடம், திருவயோத்தி, சாளக்கிராமம், வதரியாச்சிரமம், திருக்கங்கை கரைக் கண்டம், துவாரகை, வடமதுரை, திரு ஆய்பாடி, பரமபதம் திருப்பாற்கடல் முதலியனவாகும்.

பெரியாழ்வாரின் நந்தவனத்தில் ஒருநாள் ஸ்ரீதேவியின் அவதாரமாகிய பெண் குழந்தை வந்துகிடக்க அவர் அதை ஆண்டாள் எனும் பெயர் சூட்டி வளர்த்தார். அப்பெண் தக்க பருவம் அடைந்ததும் கண்ணன் மீது காதல் கொண்டு அவரையே மணக்க உறுதிமேற்கொண்டு வாழத் தொடங்கினாள். இறுதியில் திருவரங்கத்தின் திருக்கோயிலின்கண் அரங்கநாதப் பெருமாளின் திருவருளால் ஆண்டாள் எம்பெருமானின் மேனியில் கலந்து மறைந்தார். இவ்வாறு பெருமாளுக்கே மாமனாராகப் பெரும் பேறு வாய்க்கப் பெற்றவர் பெரியாழ்வார் ஆவர்.

பெரியாழ்வார் தம் வாழ்நாள் முழுதும் ஸ்ரீ வில்லிபுத்தூரில் இறைவனுக்கு மாலை சார்த்தும் திருத்தொண்டில் ஈடுபட்டு எண்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்து இறைவனை அடைந்தார்.

# சூடிக்கொடுத்த சுடர்க்கொடி

வேடர் குடியைச் சார்ந்த வில்லி என்பவனால் உருவாக்கப் பட்டதே ஸ்ரீ வில்லிபுத்தூர் எனும் திருத்தலமாகும். புதியதாகத் தோற்றுவிக்கப்பட்ட இந்நகரில் புத்தூரில் வாழ்ந்த அந்தணரை அவன் குடியேற்றினான். அவ்வூருக்கு அந்தணர்கள் முன்பு வாழ்ந்திருந்த 'புத்தூர்' எனும் பெயரையும் தன் பெயரான 'வில்லி' என்பதனையும் சேர்த்து வில்லிபுத்தூர் எனப்பெயர் வைத்தான்.

மேலும் இத்தலத்தில்தான் திருமால் வராகமாய்த் தோன்றி இரணியாக்கனை அழித்ததாகவும், அதனால் இதற்கு வராகசேத்திரம் எனும் பெயர் உண்டென்றும் கூறுவர். இத்தலத்தில் உள்ள 196 அடி கோபுரம் திருவரங்கம் கோபுரத்திற்கு அடுத்தான பெருமையைப் பெற்றதோடு தமிழக அரசின் சின்னமாகவும் பதிக்கப் பெற்றுள்ளது.

இந்நகரில் வாழ்ந்திருந்த 'விஷ்ணுசித்தர்' என்றழைக்கப் பட்ட பெரியாழ்வார் இங்கு கோயில் கொண்டருளிய வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை சாத்தும் திருப்பணியை மேற் கொண்டிருந்தார். ஒரு நாள் விஷ்ணுசித்தர் நந்தவனத்தைக் களைக் கொட்டால் கொத்திக் கொண்டிருந்தார். திடீரெனபூமி வெடிக்கும் ஒலி கேட்டது. போய்ப் பார்த்தபோது அங்குத் திருத்துழாய்ச் செடியின்கீழ் ஐந்து வயதுள்ள பெண் குழந்தையைக் கண்டு வியப்படைந்தார்.

பெரியாழ்வார் அக்குழந்தையைத் தூக்கிக்கொண்டு போய் வடபத்ரசாயியின் சந்நிதியில் சேர்ப்பித்தார். 'இம்மகவிற்குக்

கோதை எனப் பெயரிட்டு உம்மகள் போல் வளர்த்து வருக' என்று பெருமாள் திருவாய் மலர்ந்தருளினார்.

இவ்வாறு ஸ்ரீ பராங்குசர் அவதாராதி 9 –ஆவதான நள ஆண்டு ஆடிமாதம் வளர்பிறையில் சதுர்த்தசிதிதியில் செவ்வாய்க்கிழமை பூர நட்சத்திரத்தில் கோதை நாச்சியார் பெரியாழ்வாரின் திருமகளாய் மண்ணுலகில் அவதரித்தார்.

பெரியாழ்வார் தமது மனைவி விரஜையிடம் குழந்தையைச் சேர்த்து பஞ்சசம்ஸ்காரங்கள் செய்வித்து பரஞானத்தையும் கற்பித்தார் ஆண்டாள் தோன்றிய நாளைப் பற்றி,

'இன்றோ திருவாடிப்பூரம் எமக்காக
அன்றோ இங்காண்டாள் அவதரித்தாள்' என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்கிறார்.

எம்பெருமானை நினைத்து நினைத்து உருகிய பக்தி கோதையின் உள்ளத்தில் பெருங்காதலாய் மாறியது. அவனையே மணஞ்செய்து கொள்ளக் கருதி எப்பொழுதும் பெருமாளையே நினைத்தல், அவர் பெருமைகளையே பாடித்துதித்தல் ஆகிய செயல்களை அவள் மேற்கொண்டாள்.

ஒருநாள் பெரியாழ்வார் இறைவனுக்காக மாலை தொடுத்து வைத்திருந்தார். தான் கண்ணனுக்குத் தகுந்த காதலி என எண்ணியதால் அம்மாலையைத்தான் எடுத்து சூட்டிக்கொண்ட கோதை கண்ணாடியில் அழகு பார்த்தாள். பின் கசங்காமல் பூக்கூடையில் வைத்துவிட்டாள். வழக்கம் போல் அம்மாலையை பெரியாழ்வார் இறைவனிடம் சேர்த்தார். அம்மாலைகள் என்றும்

இல்லாத அழகும் மணமும் ஒளியும் பெற்றுத் திகழ்ந்ததைக் கண்டோர் பெரும் வியப்புற்றனர்.

கோதையின் இச்செயல் தொடர்ந்து நடைபெற்று வந்தது. ஒருநாள் இதைக் கண்டுவிட்ட பெரியாழ்வார் 'என்ன அபசாரம்' எனக்கூறி மகளைச் சினந்து கடிந்து கொண்டார். அம்மாலையைச் சார்த்தாமல் வேறு மாலை தொடுத்து பெருமாளுக்குக் கொடுத்தார். அந்நாள் இரவில் ஆலிலைப் பள்ளியான் பெரியாழ்வாரின் கனவில் தோன்றினார். 'உம் திருமகள் சூடிக் கொடுத்த மாலையையே யாம் விரும்புகிறோம். இனி அதையே எமக்குக் கொண்டு வருவீர்' என இறைவன் அருளிச் செய்தார்.

மறுநாள் முதல் மாலை தொடுத்தபின் அம்மாலையை கோதையை அணியச் சொல்லி அழகு பார்ப்பார். பின் அவர் அதை பெருமாளுக்கு அணிவித்து வந்தார். கோதை சூடிக்கொடுத்த மாலையை அணிந்த எம்பெருமானின் அழகு மேலும் ஒளிர்ந்தது.

அதைக்கண்ட பெரியாழ்வார் மனம் மகிழ்ந்தார். "என்னை ஆள்வதற்கு இவ்வுலகில் அவதரித்த ஆண்டாள் இவளே" என்று அவர் கொண்டாடினார். அன்று முதற்கொண்டு கோதைக்கு 'ஆண்டாள்'. 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' எனும் திருநாமங்கள் வழங்களாயின.

வளர்ந்து பருவமடைந்த ஆண்டாள் நாச்சியாருக்கு வில்லிபுத்தூர் ஆயர் சேரியாயிற்று ; வட பெருங்கோயிலுடையான் கண்ணனானான்.அங்குள்ள பெண்கள் இடைப் பெண்களாயினர். திருக்கோவில் நந்தபோபர் மாளிகையாயிற்று ; ஆண்டாள் கண்ணனைப் பெறுவதற்காக மார்கழியில் பாவை நோன்பு அனுசரித்து திருப்பாவை பாடி அருளிச் செய்தார்.

நோன்பு நோற்ற பின்பும் கண்ணபிரான் வந்து ஆட்கொள்ளவில்லை. வந்து கலக்கவில்லை. இந்நிலையில் தாம் அடைந்த அனுபவங்களை ஆண்டாள், நாச்சியார் திருமொழியாகப் பாடி அருளினார். பெரியாழ்வார் இவருக்கேற்ற மணாளனைத் தேட ஆரம்பித்தார். ஆண்டாளோ

"மானிடவர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன்" என்றார். தந்தையோ கவலை கொண்டார்.

திருவரங்கப் பெருமான் பெரியாழ்வாரின் கனவில் தோன்றி "உமது செல்வியைப் பெரிய கோயிலுக்கு அழைத்து வருவீர் ; நாம் அங்கு ஏற்றுக் கொள்வோம்" என்று திருவாய் மலர்ந்து அருளினார். அரங்கன் கட்டளைக்கேற்ப கோயிலைச் சேர்ந்தவர்கள் மங்கள வாத்தியங்களுடன் நவரத்தின பல்லக்கு எடுத்து வந்தனர். கோதையும், தந்தையும் திருவரங்கம் புறப்பட்டனர்.

இச்செய்தியைக் கேள்விப்பட்ட பாண்டிய மன்னன் நெடுவழி முழுதும் அலங்கரித்தான். பெருங்கோயில் புகுந்த ஆண்டாள் அரவப் படுக்கையை அடைந்து எம்பெருமானின் திருமேனியில் கலந்தாள். பெரும்பேறு பெற்ற பெரியாழ்வார் வில்லிபுத்தூர் திரும்பி இறுதிவரையில் பெருமாளுக்கும் மாலை தொடுக்கும் கைங்கர்யம் செய்து வந்தார்.

# தொண்டரடிப்பொடி ஆழ்வார்

சோழநாட்டைச் சேர்ந்த திருமண்டங்குடியில் பராபவ ஆண்டு மார்கழி மாதம் தேய்பிறையில் சதுர்த்தசி திதியில் செவ்வாய்க்கிழமை கேட்டை நட்சத்திரத்தில் முன் குடுமிச் சோழியராகிய ஒரு வைணவப் பெருமகனார்க்கு மகனாக விப்ரநாரயணர் அவதரித்தார்.

இவர் திருமாலை அலங்கரிக்கும் ஸ்ரீவனமாலையின் அம்சம் என்பர். தொடக்கம் முதலே இறையனுபவத்தில் ஈடுபட்ட இவருக்கு இல்லறத்தில் சிறிதும் நாட்டமில்லை. இறைவனாகிய திருவரங்கப் பெருமாளுக்குத் தொண்டு புரிவதையே தம் வாழ்நாளின் பயனாக அவர் கருதினார்.

எனவே விப்ரநாராயணர் திருவரங்கம் சென்று பெருமாளின் அழகில் ஈடுபட்டார். அங்கே ஒரு அருமையான நந்தவனம் அமைத்து நாள்தோறும் பள்ளி கொண்ட பெருமாளுக்கு மாலை கட்டித்தரும் திருத்தொண்டைச் செய்து வந்தார்.

அந்நாளில் திருவரங்கத்திற்கு அருகில் உள்ள உத்தமர் கோயிலில் தேவதாசி குலத்தில் தோன்றிய தேவதேவி என்பவள் வாழ்ந்து வந்தாள். அவள் தன் தமக்கையுடன் சோழனின் அரண்மனையில் நடனமாட உறையூர் செல்லும்போது விப்ரநாராயணர் அமைத்துள்ள நந்தவனத்தைப் பார்த்தாள். அதன் வனப்பில் பெரிதும் நாட்டம் கொண்டு அதை அமைத்தவரையும் தன்வயப்படுத்த வேண்டும் என்று விரும்பினாள்.

ஆனால் அவள் தமக்கையோ "இதனை அமைத்துள்ள விப்ரநாராயணர் தம் உள்ளம் முழுதும் இறைவன்பால் பறிகொடுத்தவர். ஆதலால் உன்னால் அவரை வயப்படுத்த முடியாது என்றாள். தேவதேவி தன் தமக்கையிடம் அவரை என் வயப்படுத்தாவிடில் நான் உனக்கு ஆறுமாதம் அடிமையாவேன்" என்று சூளுரைத்தாள்.

பிறகொரு நாள் தேவதேவி மெல்லிய காவிச் சேலை உடுத்து விப்ர நாராயணரிடம் சென்றாள். "நீயாவள்" எனக்கேட்ட விப்ரநாராயணரிடம் "நான் தாசிகுலத்தில் பிறந்தவள். ஆனால் அத்தொழிலைச் செய்யாமல் திருமாலின் திருவடிகளை அடைய விருப்பம் கொண்டு தங்களை நாடி வந்தேன்" என்றாள். அவளின் வஞ்சக எண்ணம் அவருக்குப் புரியவில்லை. நந்தவனத்தின் சிறு பணிகளில் அவளை அவர் ஈடுபடுத்தினார்.

தேவதேவியும் நல்லவளாய் நடித்து நந்தவனத்தில் செடிகளுக்கு நீர் ஊற்றுதல், பாத்தி அமைத்தல், சுத்தம் செய்தல் போன்ற பணிகளைச் செய்து வந்தாள். ஒருநாள் கடுமழை பொழிந்தது. தேவதேவி வெளியே நனைந்து கொண்டே வந்தாள். விப்ரநாராயணர் கருணை உள்ளத்துடன் அவளை உள்ளே வருமாறு கூறினார். உள்ளே வந்த அவள் மென்மொழிகளாலும் உடல் கவர்ச்சியினாலும் அவர் உள்ளே புகுந்தாள். அவரைத் தன் வயமாக்கித் தேவதேவி மகிழ்ந்தாள். அவருடன் சில நாள்கள் வாழ்ந்தாள். பிறகு அவரை விட்டுப் பிரிந்து தன்வீடு சென்றாள்.

தேவதேவியின் பிரிவை அவரால் தாங்க முடியவில்லை. அவர் உள்ளம் வருந்தி அவள் நினைவாகவே கிடந்தார். இந்த வேளையில் திருமகனார் திருமாலிடத்தே "விப்ரநாராயணரைத்

திருத்தி ஆட்கொள்ள வேண்டும்” என்று வேண்டினாள். இறைவன் திருக்கோயிலின் பாத்திரங்களுள் பொன்வட்டில் ஒன்றை எடுத்துக் கொண்டார். மனித உருத்தாங்கி தேவதேவியின் இல்லம் சென்று அதைத் தந்ததோடு “நான் அழகிய மணவாளதாசன், விப்ரநாராயணர் அனுப்ப வந்தேன்” என்றார்.

தேவதேவி ‘அவரை வரச்சொல்’ என்று கூற விப்ர நாராயணர் அவள் இல்லுள் சென்று மகிழ்ந்து இருந்தார். பொழுது விடிந்த அளவில் திருக்கோயிலின் பொன்வட்டிலைக் காவலர் தேடத் தொடங்கினர். தேவதேவியின் இல்லில் இருப்பதாக ஒற்றர் தகவல் கூற தேவதேவி விசாரிக்கப்பட்டாள்.

அவளோ விப்ரநாராயணரின் ஏவலாள் அழகிய மணவாளதாசர் மூலம் அவர் அனுப்பினார் என்றாள். யான் ஒன்றும் அறியேன் என்று கூறிய விப்ரநாராயணர் சிறையில் அடைக்கப்பட்டு வருந்தினார்.

விப்ரநாராயணருக்கு அருள் செய்யுமாறு மீண்டும் அரங்கநாயகி அம்மை பெருமாளை வேண்டினார். திருமால் அரசனின் கனவில் தோன்றி ‘இவரின் கருமத்தைக் கழிக்க யாமே பொன்வட்டில் கொண்டு போய்த் தந்தோம்’ என்று நடந்ததைக் கூறினார். விப்பிரர் விடுவிக்கப்பட்டார். தன் தவறுகளை உணர்ந்துப் பெரிதும் வருந்தினார். திருமாலை மறந்து பெண் இன்பம் பெரிதாய் எண்ணியதால் உய்யும் வழி என்று யாவரிடமும் யாசித்தார்.

பெரியோர்கள் ‘திருமாலின் தொண்டர்களுடைய திருவடித் தீர்த்தம் உட்கொள்வதே இதற்குப் பிராயச் சித்தம்’ என்று கூறினார்கள். அதுமுதல் தொட்டு விப்ரநாராயணர்

வைணவர்களுடைய திருவடித் தூளியாய் மாறி அவருக்கே அடிமையாகித் தொண்டு புரிந்து வாழலானார். அதனால் தொண்டரடிப் பொடி எனும் திருநாமம் பெற்றார்.

திருமாலிடம் தான்பெற்ற அனுபவங்களைத் 'திருப்பள்ளி எழுச்சி' எனும் பிரபந்தமாக அருளிச் செய்தார். திருவரங்கத்தில் கோயில் கொண்ட பள்ளி கொண்ட பெருமாளுக்குச் சேவை சாதித்து நூற்றைந்து ஆண்டுகள் வாழ்ந்தார்.

தேவதேவியும் தான் நல்ல கதி அடைய கோயிலில் திரு அலகிடுதல் மெழுகிடுதல், கோலமிடுதல் முதலிய அடிமைத் தொழில்களைச் செய்யலானாள்.

தொண்டரடிப் பொடி ஆழ்வாரின் பாசுரங்கள் உள்ளத்தை உருக்குவன. இனிமைச் சுவை மிக்கன. பக்தித்தேன் கொட்டுவன.

இவர் திருவரங்கம், திருவயோத்தி, திருப்பாற்கடல் முதலிய திருத்தலங்களைப் பாடி உள்ளார்.

"தொண்டரடிப் பொடியெம்மான்
துணைப் பதங்கள் வாழியே"

# திருப்பாணாழ்வார்

திருமாலிடத்தே அகத்தைப் பறிகொடுத்து அன்பினால் உருகிப் பாடியவர்களே ஆழ்வார் பெருமக்கள் ஆவர். பன்னிரு ஆழ்வார் தம்மில் தனிச்சிறப்பு பெற்றவர் திருப்பாணாழ்வார்.

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் மிகக் குறைவாக பத்தே பாசுரங்கள்தாம் திருப்பாணாழ்வார் அருளிச் செய்தார். திருமாலின் திருமேனியிலே கலந்துவிட்ட பேறு பெற்றவர் அவர். அவர் அருளின பத்துப் பாசுரங்களும் பிரபங்களின் மொத்தக் கருத்துகளையும் சுருங்கக் கூறி விளங்க வைப்பன ஆகும்.

உன்னடியார்க்கு அடிமை என்ற பாகவத சேஷத்துவத்தை அறிந்தவரே திருப்பாணாழ்வார். ஒருமுறை திருக்கோட்டியூர் நம்பியும், பெரிய நம்பியும் ஆளவந்தாரிடம் "எம்பெருமானிடம் தஞ்சமாயிருக்கும் அர்த்தத்தை அருளிச் செய்ய வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டார்களாம். அதற்கு அவர் "பெரிய பெருமாளின் திருவடியின்கீழ் வீணையும் கையுமாக நிற்கும் திருப்பாணாழ்வார் விக்கிரகத்தைத் திருவடி முதல் திருமுடி வரை சேவித்துக் கொண்டிருங்கள் என்றாராம்"

வைணவக் குரு பரம்பரை ஆசாரியர்களால் இவ்வாறு போற்றப்படும் பெருமையுடையவர் திருப்பாணாழ்வார். சோழவள நாட்டின் தலைநகராக விளங்கி 'ஊரெனப்படுவது உறையூர்' எனப்புகழப்பட்ட உறையூரில் திருப்பாணாழ்வார் அவதரித்தார். கலியுகம், ஸ்ரீ பராங்குசர், அவதாராதி **343** – ஆவதான துன்மதி ஆண்டு, கார்த்திகை மாதம், தேய்பிறை, துவிதியை திதி, புதன் கிழமை, உரோகிணி நட்சத்திரத்தில் திருப்பாணாழ்வார் தோன்றினார்.

எம்பெருமானுடைய ஸ்ரீ வத்சத்தின் அம்சமாக இவர் அவதாரம் செய்தது ஒரு தனிச் சிறப்பாகும்.

காவிரி நதி பாயும் கழனியிடத்தே நெற் பயிரிடையே திருப்பாணாழ்வார் அவதாரம் செய்தார். பிறவாது பிறந்த அந்தத் தெய்வக்குழவியை பஞ்சமர் குலம் சார்ந்த பாணர் ஒருவர் கண்டெடுத்து வளர்க்கத் தொடங்கினார்.

இறைவன் திருவருளால் உதித்த பெருங்காரணத்தால் அக்குழந்தை வளர்ந்தபின்னே உலகப் பற்றுகளை ஒழித்து அரங்கநாதரையே எண்ணி வந்தது. தாம் வளர்ந்த பாணர் மரபுக்கு ஏற்ப யாழ் வாசித்துப்பாடும் கலையில் தேர்ச்சி பெற்றதால் திருப்பாணர் எனும் திருநாமம் இயல்பாய் வந்து சேர்ந்தது.

இறைவனால் இலச்சினை பெற்ற பாணர் திருவரங்கம் சென்று பாம்பணை மேல் பள்ளிகொண்ட பரந்தாமனைப் பாட விரும்பினார். அங்ஙனமே பயணம் மேற்கொண்டார். ஆனால் தான் வளர்ந்த குலம் பாணர் குலம் ஆதலால் திருவரங்கப் பதியை மிதிக்கவே அஞ்சினார். எனவே காவிரியின் தென் கரையிலேயே யாழும் கையுமாக நின்று கொண்டார்.

நாள்தோறும் அங்கிருந்தே திருவரங்கநாதர் உள்ள திசைநோக்கித் தொழுதார். யாழிசைத்து கண்கள் பனிக்க நெஞ்சுருகிப் பாடினார். திருப்பாணரின் இசை காவிரிக்கரையின் காற்றில் கலந்து கேட்போரின் உள்ளமெல்லாம் குளிர்ந்தது.

உலோக சாரங்கர் எனும் முனிவர் காவிரியிலிருந்து அரங்கநாதருக்குத் திருமஞ்சன நீர் கொண்டு செல்லும்

திருத்தொண்டைச் செய்து வந்தார். ஒருநாள் அவர் காவிரி நீர் கொண்டு செல்ல வந்தபோது கரையில் நின்றிருந்த பாணரைக் கண்டார். பாணரின் உள்ளன்பை உணராத உலோகசாரங்கர், பாணரின் குலப்பிறப்பை எண்ணி 'அப்பால் செல்' என்று கூவினார். பாணர் அசையவில்லை. முனிவர் மீண்டும் அதட்டிக் கூவினார்.

பாணரோ மனத்தில் திருவரங்கனையே எண்ணி வழிபட்டுக் கொண்டிருந்ததால் இவ்வுலகத்தொடர்பே அற்றிருந்தார். எனவே உலோக சாரங்கர் மொழிந்தது அனைத்தும் அவர் செவியில் வீழவே இல்லை.

பலமுறை கூவிய உலோகசாரங்கர் சினம் கொண்டார். அதனால் அவர் கல்லை எடுத்து பாணர்மீது வீசினார். அவருடன் வந்த மற்றவர்களும் கற்களால் தாக்கத் தொடங்கினர். பல கல்லடிகள் பட்டதால் திருப்பாணரின் நெற்றியிலிருந்து குருதி கொட்டத் தொடங்கியது. அப்போதும் மெய் உணர்ச்சி ஏதும் இன்றி பாணர் இறைவனுக்கு இசை மஞ்சனம் செலுத்திக் கொண்டிருந்தார்.

பிறகு உலோக சாரங்கரும் மற்றவர்களும் திருவரங்கநாதனுக்குத் திருமஞ்சனநீர் முகந்துகொண்டு சென்றனர். திருக்கோயிலைத் திறந்து உள்ளே சென்றனர். அங்கே பெருமானின் திருநெற்றியிலிருந்து குருதி பெருகுவது கண்டு மனம் கலங்கினர்.

உலக மக்களிடையே சாதி முக்கியமான ஒன்றன்று ; உள்ளார்ந்த இறையன்பே இன்றியமையாததாகும் என்ற கருத்தை உணர்த்த திருவுள்ளம் கொண்டார் அரங்கநாதர். ஒருநாள் உலோக சாரங்கரின் கனவிலே பெருமாள் தோன்றினார். 'பாணர் எம் சிறந்த அன்பர் ; அவர் மேனியை நோகச் செய்யலாமா? அவரை

இழிகுலத்தவர் என்று எண்ணாது நும் தோளில் ஏற்றி நம் பக்கம் கொணர்வீர்' என்று எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளினார்.

பெருமானின் கட்டளையைக் கேட்ட உலோக சாரங்கர் தம் செயலுக்காக வருந்தினார். உடன் பாணர் இருந்த இடம் சென்று அவர் திருவடிமுன் தண்டனிட்டார். பெருமாள் பாணரை, அழைத்த கட்டளையைக் கூறினார். பாணரோ வியப்பும் அச்சமும் அடைந்து 'யான் திருவரங்கப் பதியை மிதிக்கலாமோ? கூடாது' என மறுத்துரைத்தார்.

தாங்கள் மிதிக்க வேண்டாம் ; எம்பெருமான் பெரிய திருவடியாகிய கருடாழ்வாரின் தோளில் ஏறி வருவதைப்போல் நீவிர் என் தோளில் ஏறி எழுந்தருளும் என்று முனிவர் கூறினார். பாணர் "மெய்த்தவ முனிவராகிய உம்மை அவமதிக்கலாமோ? இதைவிட எரியில் மூழ்குதல் நலம்" என்றார். மீண்டும் இது பெருமாளின் கட்டளை என்று முனிவரும் மற்றவரும் வலியுறுத்தினர். எம்பெருமான் ஆணை என்றதும் திருப்பாணர் மீற முடியாமல் செயலற்று நின்றார்.

பின்னர் திருப்பாணரைத் தோள்மீது ஏற்றிச் சென்று அழகிய மணவாளன் திருமண்டபத்தருகே இறக்கி விட்டனர். அப்பொழுது பெரிய பெருமாள் தம் வடிவழகைப் பாணருக்குக் காட்டியருளினார். பாணரோ எம்பிரானை அடிமுதல் முடிவரை கண்டு பெருமகிழ்வு கொண்டார். பேரானந்த வெள்ளத்தில் திளைத்தார். திரு உருவத்தின் அழகைக் கண்ணால் மனத்தால் அனுபவித்தார். அந்த அனுபவத்தை உலகோரும் உணரவாக்கால் பாடத் தொடங்கினார்.

"அமலனாதிபிரான்" என்று தொடங்கி திருப்பாணாழ்வார் பத்துப் பாசுரங்களை அருளிச் செய்தார். முதற்பாசுரம் தொடங்கி பொன்னாடை, உந்தி, உதரபந்தம், மார்பு, வயிறு, வாய், கண், மேனி

என்று பெருமானின் திரு அவயங்களைப்பாடி இறுதியில் "அரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று நீர்ப் பண்டம்போல் கரைந்து பாடினார்.

ஐம்பதாண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்திருந்த திருப்பாணாழ்வாரை தம் திருமேனியில் கலக்க எம்பெருமான் அருள்பாவித்தார். அனைத்து மக்களும் கண்டுகொண்டிருக்க பாணர் எம்பெருமான் அரங்கநாதருடன் கலந்து ஒன்றானார்.

எம்பெருமாளின் திருவடியை அடைய குலப்பிறப்பைவிட உள்ளன்பே முக்கியம் என்பதை திருப்பாணாழ்வாரின் வரலாறு நமக்குத் தெளிவாக்குகிறது.

# திருமங்கையாழ்வார்

திருமால் எழுந்தருளியுள்ள 108 திவ்விய தேசங்களில் ஏறக்குறைய 86 தேசங்களை மங்களாசாசனம் செய்து அனுபவித்தவர் திருமங்கை ஆழ்வார்.

ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, வித்தாரக்கவி என்னும் நான்கு விதமான கவிகள் புனைவதிலும் வல்லவராகத் திகழ்ந்ததால் அவர் "நாலுகவிப் பெருமாள்" என்று அழைக்கப்பட்டார்.

மேலும் ஆழ்வார் பெருமக்கள் அருளிச் செய்த நாலாயிரத்தில் மூன்றில் ஒரு பங்கிற்கு மேலாக மிக அதிகமான பாசுரங்களைப் பாடியவரும் இவரே ஆவார்.

திருமங்கை ஆழ்வார் சோழநாட்டில் கள்ளர் மரபில் ஆலிநாடுடையார்க்கும் அவரது மனைவியாகிய வல்லித்திரு அம்மையார்க்கும் மகனாக கலி 398 நள ஆண்டு கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று கார்த்திகை நட்சத்திரத்தில் அவதரித்தார்.

இவர் வீரத்தைப் பாராட்டி சோழ மன்னன் "பரகாலன்" எனும் பட்டம் அளித்ததோடு ஆலி நாட்டிற்கு அரசனாக்கினான். ஒருமுறை இவர் திருநாங்கூர் மருத்துவர் ஒருவரின் இல்லத்திற்குச் சென்றார். அம்மருத்துவரின் பெண்ணைக் கண்டு மணம் செய்து கொள்ள விருப்பம் தெரிவித்தார்.

அப்பெண் தேவமகளிரைச் சேர்ந்தவள் ஆவாள். திருநாங்கூர்க் குளத்தில் நீராட தேவமகளிர் வந்தனர். இப்பெண்

குமுதமலர் கொய்து கொண்டிருந்ததைப் பாராமல் இவளை விட்டுவிட்டுப் பிறர் சென்றுவிட்டனர்.

தனியே விடப்பட்ட அப்பெண்ணுக்கு குமுதவல்லி எனப் பெயரிட்டு மருத்துவர் வளர்த்து வந்தார். மருத்துவர் மங்கை மன்னரின் விருப்பத்தை வளர்ப்புப் பெண்ணிடம் தெரிவித்தார்.

அவளோ, "திருஇலச்சினையும் திருநாமமும் உள்ளவர்க்கு அன்றி மற்றவர்க்கு என்னைப் பேசவிடேன்" என்றாள். உடனே திருமங்கை மன்னர் திருநறையூர் நம்பியிடம் சென்று திரு இலச்சினையும் பன்னிரண்டு திருநாமங்களும் சார்த்திக் கொண்டு வந்தார்.

பிறகும் குமுதவல்லியார் "நாள்தோறும் 1008 ஸ்ரீ வைணவர்க்கு அமுது செய்விக்கவேண்டும், இவ்வாறு ஓர் ஆண்டு முழுவதும் நடத்தவேண்டும்" என்று சொல்ல அதற்கும் மங்கை மன்னர் இசைந்தார்.

இருவர்க்கும் மணம் நடந்தேறியது. ஸ்ரீ வைணவர்க்கு நாள்தோறும் அமுது செய்விப்பதில் பெரும்பொருள் செலவாகியது. மன்னனுக்குத் திறைப்பணம் கட்ட முடியவில்லை. எனவே மங்கை மன்னர் சோழமன்னனால் சிறைப் பிடிக்கப்பட்டார்.

எம்பெருமான் அருளால் காஞ்சியில் பொருள் கிடைக்க அதை மன்னனிடம் கொடுக்க சோழ மன்னன் வியப்புற்று விடுவித்தான். மீண்டும் பணம் முழுவதும் செலவழித்து அடியார்களுக்கு அமுது செய்வித்தார். பணம் இல்லாதபொழுது வழிப்பறி செய்யத் தொடங்கினார். அப்பொருளால் வைணவர்க்கு அமுது செய்ய ஆரம்பித்தார்.

இவரைத் திருத்த எம்பெருமானும் பிராட்டியும் திருமணக் கொல்லை எனும் ஊரில் இவர்முன் மணக்கோலத்தில் வந்தனர். அவர்களிடமும் மங்கை மன்னர் கொள்ளையடித்தார். எல்லா அணிகலனையும் வாங்கியபின் பெருமானின் திருவடியில் இருந்த அறுகாழி மோதிரத்தை வாயால் கடித்து வாங்கிய மங்கை மன்னரைக் கண்டு நம் கலியனோ எனப் பெருமாள் அருளினார்.

எல்லாப் பொருள்களையும் சுமையாகக் கட்டித் தூக்க முயன்ற மங்கை மன்னரால் அதைத் தூக்க முடியவில்லை. மணக்கோலத்தில் இருந்த பிராமணிடம் "நீர் மந்திரம் செய்தீர்" என்று சினந்தார். "ஆம்" என்ற பெருமாள் "அம்மந்திரத்தை உனக்குச் சொல்கிறோம்" என்றார்.

"உடன் நீர் எனக்குச் சொல்லாவிடில் என் வாளுக்கு இரையாவீர்" என்று மங்கை மன்னர் வாளை உருவி அதிகாரத்துடன் கேட்டார். எம்பெருமானும் மங்கை மன்னர் கழுத்தைச் சேர்த்தணைத்து அவர் காதில் எட்டு எழுத்தாய் மூன்று பதமாய் விளங்கும் "ஓம் நமோ நாராயணாய" எனும் திருமந்திரத்தைச் செவிச்சார்த்தியருளினார்.

மாங்கை மன்னர் இது காதில் கேட்டதும் ஞானம் பெற்றார். திருமந்திரத்தின் உள்ளீடான பெருமாளின் வடிவத்தையும் அருள்மாரி எனும் பெரிய பிராட்டியருளாலே கண்டுகளித்தார்.

இந்த அனுபவத்தின் விளைவாக வாடினேன் ; வாடி, வருந்தினேன் மனத்தால் என்று தொடங்கிப் பத்துப்பாசுரங்களால் முதல் திருமொழியை முடித்தார்.

பிறகு பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்கிற பிரபந்தங்களையும் திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்தார்.

திருக்குறுங்குடியில் தம் துணைவி குமுதவல்லியாரோடு தங்கிய திருமங்கையாழ்வார் தம் இறுதிக் காலத்தைக் கழித்தார். பெருமாளின் வடிவழகை அனுபவித்துக் கொண்டு அங்கேயே திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

# இராமகாதையின் பாத்திரங்கள்

வால்மீகியார் வடமொழியில் எழுதித் தந்து பின்னர் அருந்தமிழில் கம்பநாட்டாழ்வார் அருளிச் செய்ததுதான் இராம காதை. இதை ஓர் இதிகாசநூல் என்றும், இலக்கிய நூல் என்றும், பக்தி நூல் என்றும் அறவுரை நூல் என்றும் பலவாறாகக் கொள்ளலாம்.

மாந்தர் செம்மையாக வாழ்வதற்கு அவர் கொள்ள வேண்டிய பண்புகளைக் கூறுவது தான் இராமகாதை. அன்பு, வீரம், கொடை, பாசம், பணிவு, நன்றி, பக்தி போன்றவற்றை மனிதன் கடைப்பிடிப்பதோடு தீயனவற்றை விலக்க அவற்றையும் அறிந்திருக்க வேண்டும்.

எனவேதான் மாயம், சினம், வஞ்சகம் போன்ற சில குணங்களும் கம்ப நாட்டாழ்வார் எழுதிய இராமகாதையில் சில பாத்திரங்கள் மூலம் காட்டப்பட்டுள்ளனர்.

இறைவனும் மண்ணுலகில் பிறந்து மாந்தர் அடைய வேண்டிய இன்ப துன்பங்களை அடைந்து ஒரு மனிதன் எவ்வாறு வாழவேண்டும்? அவது கடமைகள் என்னென்ன என்பதைத் தெளிவாக்குவதே இராம காதையாகும்.

ஒரு சொல், ஒரு இல், ஒரு வில் என்ற உன்னதத் தத்துவத்தை உலகிற்குக் காட்டவே எம்பெருமான் நாராயணன் கோசலையின் மணி வயிற்றில் வந்துதித்தான். அவன் பெயர் சொல்லி அவன் வழி நடந்து அவன் புகழ் பாடினால் நற்கதி அடையலாம் என்று செப்பும் நூலே இராமகாதையாகும்.

புகழும், வரமும், வீரமும் வாய்க்கப் பெற்று இருந்தாலும் ஒருவன் பெண்ணாசை கொண்டால் அழிந்து போவான் என்பதைக் காட்டுவதுதான் இராம கதையாகும்.

இராமகாதையில் பல்வேறு வகைப்பட்ட பண்புகளைக் கொண்ட பர்திரங்களைப் பார்க்கிறோம்.

இராமனிடமிருந்து ஒரு மனிதன் எப்படி வாழவேண்டும் என்பது விளங்கும். அண்ணனிடம் எப்படி அடி பணிந்து அன்பு காட்ட வேண்டும் என்பதற்கு இலக்குவன் ஓர் எடுத்துக்காட்டு. பாசம் என்றால் என்ன என்ற வினாவிற்கு விடைதான் பரதன். மகனின் மீது மட்டற்ற அன்பை வைக்க வேண்டும் என்பதை விளக்கிக் காட்டுபவன் தசரதன். ஒரு குடம்பாலும் ஒரு துளி நஞ்சால் கெட்டுவிடும் என்பதைக் காட்டுபவள் கைகேயி ! வஞ்சகமே குறியாய் சொல்ல வேண்டியதை சொல்லத்தக்க முறையில் கூறும் குறுகிய கூனி; தவம் செய்த தவமாம் கற்பினுக்கு அணியாக சீதா பிராட்டி; தாயினும் நல்லானாக விருந்தினர்க்கு உயிரையே தரக்கூடிய குகப்பெருமான்.

வஞ்சனையின் முழு உருவம் வாய்த்தது போன்ற சூர்ப்பனகை; நட்புக்கு இலக்கணமாய் "சுக்ரீவன்" ; வரமும் வலிமையும் இருந்தும் வழிதவறி மாயும் "வாலி"; அறிவில் தேர்ந்து அடக்கத்தின் உருவாய் அடியவர்க்கு எடுத்துக் காட்டாய் சொல்லின் செல்வன் "அனுமன்"; எல்லாத் தகுதியும் புகழும் பெற்றும் மாற்றான் மனைவியைக் கவர்ந்து பெண்ணாசையால் வீழும் "இராவணன்". பட்டறிவால் பயன்பெறும் "மாரீசன்", செஞ்சோற்றுக் கடன் தீர்க்கும் "கும்பகர்ணன்". தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என

உயிரையும் தந்தைக்காகத் தரும் இந்திரசித்தன். சேற்றில் முளைத்த செந்தாமரை "வீடணன்"

இவ்வாறு இராமகாதையின் பாத்திரங்கள் அனைவரும் ஒவ்வொரு பண்பை பாரினுக்கு அளிக்கிறார்கள். இவர்களில் நல்லவர்களை மனத்தில் கொண்டு நல்ல பண்பைக் கைக்கொண்டு இராமன் பெயர் உச்சரித்து நல்லகதி அடைவதே நமக்குரிய வழியாகும்.

இராமகாதையை உளப்பூர்வமாக உணர்ந்து மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் இராமகாதை வழி நடந்து நாமும் உய்வடைந்து பிறரையும் வாழவைப்போமாக.

# பழைய இலக்கியங்களில் பரசுராமர்

சத்திரியர் குலத்து அரசர்களின் ஆணவத்தை அடக்கவே திருமால் மண்ணுலகில் பரசுராமராக அவதாரம் எடுத்தார். கார்த்த வீரியார்ச்சுனன் குமாரர்கள் பரசுராமரின் தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கொன்றார்கள். தன் கணவன் இறந்தபோது பரசுராமரின் தாயாகிய இரேணுகாதேவி இருபத்தோரு முறை தன் மார்பில் அடித்துக்கொண்டு அழுதாள்.

ஆயிரம் தோள்களை உடைய கார்த்த வீரியார்ச்சுனனைக் கொன்ற பரசுராமர் தன் தாய் அடித்துக்கொண்டதற்கேற்ப இருபத்தோடு சத்திரிய குலத்தலைமுறை மன்னர்களை அழித்தார். அவர்தம் குருதியில் மூழ்கித் தந்தையின் ஈமக்கடனை முடித்தார்.

இச்செய்தியை

"மழுவினால் அவனி அரசை மூவெழுகால்
மணிமுடி பொடிபடுத்து உதிரக்
குழுவுவார் புனலுள் குளித்து வெங்கோபம் தவிர்ந்தவன்"

என்றும்

"தெவ்வாய மறமன்னர் குருதி கொண்டு
திருக்குலத்தில் இறந்தோர்க்குத் திருத்தி செய்து"

என்றும் பெரிய திருமொழி எடுத்துக் காட்டுகிறது.

பிறகு பரசுராமர் சினம் தணிந்து மேருமலையில் தவம் செய்தார். இராமன் சிவதனுசை ஒடித்ததை அறிந்து சீற்றம் கொண்டு வந்தார். இராமனிடம் தன்னிடம் உள்ள திருமால் தனுசை வளைக்க இயலுமா எனக் கேட்டார். இராமன் அதில் நாணேற்ற பரசுராமர் ஆணவம் அழிந்து தன் தவ வலிமையை அதற்கு இரையாகத் தந்தார்.

ஒரு அவதாரம் தோன்றி வளரும்போது மற்றொரு அவதாரம் செயல் இழக்கும் என்பதை இதன்மூலம் அறியலாம்.

பழைய சங்க இலக்கியங்களில் எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான அகநானூறு மட்டுமே பரசுராமர் பற்றிக் குறிப்பிடுகிறது. ஒரு தலைவனைத் தோழி வரைவு கடாவுகின்ற நெய்தல் திணைப்பாடலில் பரசுராம அவதாரத்தைப் பார்க்க முடிகிறது.

தலைவியின் அழகைக் கூறவந்த தோழி அதற்கு ஓர் உவமை கூறுவதாக இந்த **220** ஆம் பாடலில் மதுரை மரு தன் இளநாகனார் பாடியுள்ளார். "மன்னர் பரம்பரையைக் கருவறுத்த பரசுராமன் முயன்று செய்த யாகத்தில் ஓர் அழகான வேள்வித்தூண் உள்ளது. அது மிகவும் அழகினை உடையது. யாவரும் காண்பதற்கு அரிதானது. தனது அரையில் ஒரு கயிற்றால் சுற்றப்பட்டுள்ளது. அத்தகைய வேள்வித்தூண்போல் அழகாக தலைவி உள்ளாள்" என்று தோழி கூறுவதாக கீழ்க்கண்ட அடிகள் அமைந்துள்ளன.

"மன்மருங்கறுத்த மழுவா ணெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பி
னருங்கடி நெடுந்தூண் போல யாவருங்
காண லாகா மாணெழி லாகம்"

அடுத்து சங்கம் மருவிய காலத்தில் மணிமேகலையில் மட்டுமே பரசுராமர் காணப்படுகிறார்.

"மன் மருங் கறுத்த மழுவாள் நெடியோன்" என்று சிறை செய்காதையின் 25 ஆம் அடியில் சாத்தனார் பரசுராமரைக் குறிப்பிடுகிறார். மன்னர் குலத்தைக் கருவறுத்ததும் மழுவாகிய வாளையும் அவர் கொண்டிருந்தார் என்பதும் இதன்மூலம் அறியப்படுகிறது. மேலும் திருமாலின் அவதாரம் என்பதால் நெடியோன் என்றும் கூறப்படுகிறார்.

அரசை ஆளும் உரிமை பெறாதவரை பரசுராமர் அணுகார் என்பதை அதே காதையில்

அரசா ளுரிமை நின்பா லின்மையின்
பரசு ராமனின் பால்வந் தணுகான்

என்ற அடிகள் காட்டுகின்றன.

சுந்தரர்தம் தேவாரத்தில் திருநின்றியூர் என்ற தலத்தையே பரசுராமர்தான் உண்டாக்கினார் எனும் பொருள்படி

"ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி
ஒங்கு நின்றியூரென்றுனக் களிப்பப்
பத்தி செய்தவப் பரசு ராமற்குப்
பாதங்காட்டிய நீதிகண் டடைந்தேன்"

என்று பாடி உள்ளார்.

இவ்வாறு பழைய இலக்கியங்களில் பரசுராமர் புகழ் பேசப்படுகிறது.

# திருமந்திர வரலாறு

இவ்வுலகில் பிறப்பெடுத்த ஆன்மாக்கள் தத்தம் வினைகளின் காரணங்களால் பாவச் சுழல்களில் அகப்பட்டுத் தடுமாறுகின்றன.

இவ்வாறு இந்த உயிர்கள் பயனற்ற பல வழிகளில் சென்று கொண்டிருப்பதைக் கண்ட எம்பெருமான் கவலை கொள்கிறார். பிறவிப்பெரும்பயனை அறியாத உயிர்களுக்கு நல்ல வழிகாட்ட எண்ணி அவ்வுயிர்கள் தன்னை அறிய வழி வகுக்கிறார்.

அதற்காகவே அந்த ஆன்மாக்கள் அறியும்படி தானே ஆசாரியனாகவும் தானே சீடனாகவும் இருந்து திருமந்திரத்தை வெளியிட்டருளுகிறார்.

மூன்று பதமாய் எட்டு எழுத்துகளாய் அமைந்த "ஓம் நமோ நாராயணாய" என்பதே திருமந்திரம் ஆகும்.

"சிஷ்யனாய் நின்றது சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டார் அறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக" என்று முமுட்சுப்படி விளக்கம் தருகிறது. ஆசாரியனைச் சென்றடையும் சீடனின் இலக்கணங்களைக் காட்டுவிக்கவே அவர் சீடனாகவும் தோன்றினாராம்.

சத்திய யுகத்தில் பதரிகாசிரமத்தில் திருமால் ஆசாரியனாகவும் சீடனாகவும் அவதரிக்கிறார். ஆசாரியரின் திருப்பெயர் நாராயணன் என்றும் சீடரின் திருநாமம் நரன் என்றும் கூறப்படுகிறது.

"பதரி" என்பது இமயமலையில் இருக்கும் ஒரு திருத்தலம் ஆகும். இங்குதான் தர்மதேவனுக்கும் தட்சப் பிரஜாபதியின் மகளாகிய மூர்த்தி தேவிக்கும் நாராயணனும், நரனும் பிறக்கின்றனர்.

இவ்விருவரின் குழந்தைப் பருவம் நைமிசாரணியம் என்னும் தலத்தில் கழிகிறது. இந்த ஊர் கிழக்கிந்திய இருப்புப் பாதையில் உள்ள சீதாபூர் பாலாவை நிலையத்திற்கு இடையில் உள்ளது.

இளமைப்பருவம் கழிந்தபிறகு நாராயணனும் நானும் கந்தமாதன பருவத்தில் தவ வாழ்க்கை மேற்கொள்கிறார்கள். பின்னர் இவ்வுலக உயிர்களுக்கு குரு சிஷ்ய முறையை விளக்கிக் காட்டுவதற்காக அவர்கள் பதரிகாசிரமம் வருகின்றனர். பதரி என்பது வடமொழியில் இலந்தை மரத்தின் பெயர் ஆகும். அம்மரங்கள் நிறைந்த இடத்திற்கு பதரி என்று பெயர்.

இந்த இலந்தை மரத்தின் அடியில்தான் நாராயணன் குருவாக அமர்ந்திருந்து நரனுக்குத் திருமந்திரத்தை உபதேசித்து அருள் செய்ததாகக் கூறப்படுகிறது.

இந்த பதரித் திருத்தலத்தைத் திருமங்கையாழ்வார் "பாரோர் புகழும் பதரி" என்று சிறிய திருமடலில் அருளிச் செய்கிறார்.

இதே நரனும் நாராயணனும் துவாபர யுகத்தில் முறையே அருச்சுனன், கண்ணனாகத் தோன்றி பகவத் கீதை நமக்குக் கிடைக்கக் காரணமாக அமைகின்றனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

# ஒன்பதினாயிரப்படி

ஆழ்வார் பெருமக்களின் பாசுரங்களை முதன்முதல் தொகுத்து விளக்க உரைகள் எழுதித் தந்தவர் நாமமுனிகளே ஆவார்.

அவரைப் பின்பற்றி பல ஆசாரியர்கள் திவ்வியப் பிரபந்தகளுக்கு உரை எழுதி உள்ளனர். ஆனால் ஸ்ரீராமானுஜரும், பட்டரும் பாசுரங்களுக்குச் சிறப்பான விளக்கங்கள் கூறினாலும் தாங்கள் உரை எழுதாமல் தத்தம் சீடரைக் கொண்டு உரைகளை எழுதுவித்தனர்.

பட்டருடைய உத்தரவின் காரணமாக அவரது சீடரான நஞ்சீயர் திருவாய் மொழிக்கு உரை எழுதி உள்ளார். நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிக்கு முதலில் தோன்றிய விளக்க உரை திருக்குருகைப் பிரான் பிள்ளான் எழுதிய ஆறாயிரப்படி ஆகும். ஆறாயிரப்படிக்கு அடுத்துத் தோன்றிய உரை நஞ்சீயர் அருளிய ஒன்பதினாயிரப்படி ஆகும்.

ஒன்பதினாயிரப்படி, ஆறாயிரப்படி உரைபோல பொழிப்புரையாக இல்லாமல் இருந்தாலும் சுருக்கமாக உள்ளது. ஆறாயிரப்படியின் உரையை ஒன்பதினாயிரப்படி ஒத்து இருந்தாலும் ஒரு வேறுபாடு உள்ளது.

ஆறாயிரப்படியில் பாசுரங்களில் உள்ள சொற்கள் எடுக்கப்படாமல் உரை மட்டும் உள்ளது. ஆனால் ஒன்பதினாயிரப்படியில் பாசுரங்களிலிருந்து சொற்கள் எடுக்கப்பட்டுள்ளன.

ஒன்பதினாயிரப்படியிலிருந்து சில விளக்கங்களை ஈண்டு காணலாம்.

"கண்டலங்கள் செய்ய கருமேனியம்மான்" என்ற நம்மாழ்வாரின் வாக்கிற்கு "பரந்து சிவந்த திருக்கண்களையும் கரிய திருமேனியையும் உடைய எம்பெருமான்" என்று பலரும் உரை கூறுகின்றனர்.

ஆனால் நஞ்சீயரோ கண்கள், திருமேனி ஆகியன நிறங்கொண்டமைக்குக் காரணம் கூறுகிறார். அடியவரான ஆழ்வாரோடு கலந்ததனால் எம்பெருமானின் கண்களும் சிவந்து திருமேனியும் நிறம் பெற்றது என நஞ்சீயர் கூறுகிறார்.

திருவாய் மொழியின் கடைசிப் பாசுரமான "அவாவறச்சூழ்" என்கிற பாசுரத்தின் உரையில் நஞ்சீயர் ஆயிரம் பாடல்களிலும் உள்ள கருத்துகளைச் சுருக்கமாகக் கூறி உள்ளது போற்றி வழிபடத் தக்கதாகும்.

இராமன் வனத்திற்குச் சென்றவுடன் பரதன் அரசைக் கண்டு வெறுத்ததைப் போன்று பராங்குச நாயகியும் எம்பெருமானிடம் ஈடுபட்டதால் விளையாடும் பொருள்களான பூவை பைங்கிளி, பந்து ஆகியனவற்றை வெறுத்தாள் என்று நஞ்சீயர் கூறுகிறார்.

மேலும் "நெடுமாற்கடிமை" எனும் பாசுரத்திற்கு உரை கூறும்போது நஞ்சீயர் பரதனிடம் மிகவும் ஈடுபாடு கொண்ட சத்ருக்னனுடன் ஆழ்வாரை ஒப்பிடுகிறார்.

ஆழ்வாரைப் புராணப் பாத்திரங்களோடு ஒப்பிட்டுக் காட்டும் உத்தியை நஞ்சீயர்தாம் முதன்முதலில் கையாண்டுள்ளார்.

"ஐவாயரவணை மேல் ஆழிப் பெருமானார் மெய்வாசகம் கேட்டு உன் மெய்நீர்மை தோற்றாயே" என்று கூறுகிறாள் பரங்குசநாயகி.

"திருவனந்தாழ்வானாகிய ஆதிசேஷன் பொய் கூறுவதற்கு ஐந்து வாய்களை உடையவன்; பாரதப்போரில் ஜயத்ரதனை வதம் செய்யும் பொருட்டு சூரியனை மறைத்துப் பகலை இரவாக்கிய பொய்க்குத் துணை நின்றவன் திரு ஆழியாழ்வான். அவர்களோடு பழகி எம்பெருமானும் பொய்யனாகி விட்டான்" என்று நஞ்சீயர் உரை கூறும் திறம் மெய் சிலிர்க்க வைக்கிறது.

ஆழ்வார் கூனியின் சரித்திரத்தைக் குறிப்பாகக் காட்டும்போது அவள் கடன் நிமிர்ந்த வகையை "கூனே சிதைய உண்டைவில் தெறித்தாய்" என்கிறார். இதற்கு உரை எழுத வந்த நஞ்சீயர்பிரான் கூனே என்பதில் உள்ள ஏகாரத்திற்கு "கூனியினுடைய மற்ற எந்த அவயவத்திற்கும் வாட்டம் வராமே கூனே நிமிரும்படி கண்டுவில் தெறித்தார் போலே" என்கிறார்.

நம்மாழ்வார் தம் முதல் பாசுரத்தில் அருளிய "அயர்வறும் அமரர்கள் அதிபதி" எனும் சொற்றொடரைப் பல இடங்களில் நஞ்சீயர் காட்டுகிறார்.

வைணவ சமயத்தில் பெருமாளோடு தொடர்புடைய அனைத்தையும் ஸ்ரீ அல்லது திரு என அடைமொழி இட்டே வழங்குவர். இதைத் தொடங்கி வைத்தவர் நஞ்சீயரே ஆவார். அவதாரங்களை ஸ்ரீ வராகம், ஸ்ரீ வாமனன் என்றும் ஆயுதங்களை ஸ்ரீ பாஞ்சசன்யம், ஸ்ரீ சாரங்கம், ஸ்ரீ பஞ்சாயுதம் என்றும் அவர் எழுதிக் காட்டுகிறார்.

மேலும் திரு எனும் அடைமொழியைப் பயன்படுத்தி திருமேனி, திருநாபிக்கமலம், திருவயிறு திருக்குழல் என்று குறிப்பிடுகிறார். ஆழ்வார் வாட்டாறு என்று பாடியிருந்தாலும் நஞ்சீயர் திருவாட்டாறு என்றே கூறுகிறார்.

நஞ்சீயர் கர்நாடக மாநிலத்தில் உள்ள மேல் நாட்டில் (திருநாராயணபுரம்) அவதரித்தவர் ; வடமொழி வேதாந்தங்களில் கரை கண்டவர் ; ஆனால் அவரது உரையில் ஆங்காங்கே பல அரிய தமிழ்ச் சொற்களைக் காண முடிகிறது.

அகவாய், இட்டளம், ஒருவெளிப்பாடு, எளிவரவு, தலை நீர்ப்பாடு, பகைத்தொடை, கடுப்பு, கோப்பு, புறவாய் போன்ற சொற்களும் இலையகலப்படுத்தல், உடை குலைப்படுதல் செல்வப் பிள்ளைத் தன மடித்தல், விளாக்குலை கொள்ளுதல், விளை நீரடைத்தல் போன்ற மரபுத் தொடர்களையும் கையாளுவதிலிருந்து நஞ்சீயர் பெருமானின் தமிழ்ப்புலமை தெளிவாகிறது.

ஒன்பதினாயிரப் படியில் பற்பல புதிய உத்திகளைக் கையாண்டு பின்னர் எழுந்த உரையாசிரியர்களுக்கெல்லாம் நஞ்சீயர் வழிகாட்டியாக, சிறந்த முன்னோடியாகத் திகழ்கிறார் என்றால் அது மிகையாகாது.

# நஞ்சீயர்

திருமாலிடத்தில் பக்தியில் மிகவும் ஆழ்ந்தவர்கள் ஆதலின் அவர்கள் "ஆழ்வார்கள்" எனும் திருநாமத்தால் அழைக்கப்பட்டனர். ஆழ்வார்கள் அள்ளித்தந்த பாசுரங்களுக்கு ஆச்சாரியர்கள் உரை எழுதி மேலும் மெருகூட்டினார்கள்.

ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களுக்கு முதன்முதலில் விரிவான உரை எழுதியவர் நாத முனிகளே ஆவார். வேறு சில பெரியவர்கள் பிரபந்தப் பாசுரங்களுக்கு வாய்மொழியாய் பல்வேறு விளக்கங்கள் கூறினார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்க பெருமக்களாக ஸ்ரீ ராமனுஜர், ஸ்ரீ பராசரபட்டர் ஆகியோர் விளங்குகிறார்கள்.

மேற்கொள்ள இருவருமே தாங்கள் உரை எழுதாவிடினும் தங்கள் சீடர்களைக் கொண்டு உரை எழுதுவித்தனர். பட்டருடைய ஆணையினால் நஞ்சீயர் எனும் அவரின் சீடர் திருவாய்மொழிக்கும் வேறு சில பிரபந்தங்களுக்கும் உரை எழுதி உள்ளார்.

தற்போதைய கர்நாடக மாநிலத்தில் உள்ள மேலைக்கோட்டுத் திருநாராயணபுரத்தில் விஜயம் ஆண்டு (கி.பி. 1113) பங்குனி மாதம் உத்திரத் திருநாளில் நஞ்சீயர் அவதரித்தார். இவர் நூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்ததாக ஆறாயிரப்படி குரு பரம்பரை கூறுகிறது. மாதவாசிரியர் எனும் இயற்பெயரைக் கொண்ட நஞ்சீயர் வேதங்களில் மிகவும் வல்லமை பெற்றுத் திகழ்ந்ததால் "வேதாந்தி" என்று அழைக்கப்பட்டார்.

ஸ்ரீ ராமானுஜர் திருநாடு அடையும் முன் பராசரபட்டரை அழைத்து, "மேல்நாட்டில் வேதாந்தி என்ற பெரிய வித்வான் இருக்கிறான் ; நீர் அங்கே சென்று அவனைத் திருத்தும்" என்று கடைசிச் செய்தியாகக் கூறி அருளினார். இதே பொழுதில் மேலை நாட்டில் மாதவாசாரியரிடம் ஒரு தீர்த்தவாசி அந்தணன் "உம்மை விடப் பட்டர் மிகச் சிறந்த அறிஞர்" என்று கூற வேதாந்தியும் பட்டரைச் சந்திக்க ஆவலுடன் இருந்தார்.

ஸ்ரீ ராமானுஜரின் ஆணைக்கிணங்க பட்டர்பெருமான் மேலைநாடு சென்றார். வேதாந்தி எனப்படும் மாதவாசாரியரைச் சந்தித்து தர்க்க வாதம் ஒன்பது நாட்கள் நடத்தினார். பத்தாம் நாளில் விசிஷ்டாத் வைத மதமே சிறந்தது என ஒப்புக் கொண்ட மாதவர் பராசரப் பட்டரைச் சரணடைந்தார். பட்டரும் அவருக்கு பஞ்சஸம்காரங்கள் செய்துவிட்டுத் திருவரங்கம் திரும்பி விட்டார்.

மாதவர் வழக்கம்போல் அந்தணர்களை அழைத்து உபசரித்து வந்தார். ஒருநாள் அவரில்லம் நாடி வந்த ஏழை அந்தணர்களுக்கு மாதவரின் இரண்டு மனைவியரும் உணவு தராமலே இருந்துவிட்டனர். இதைக் கண்ட வேதாந்தி ஒரு முடிவுக்கு வந்தார்.

தமது அளவற்ற செல்வத்தை மாதவர் மூன்று பங்குகளாகப் பிரித்தார். இரண்டு பங்குகளைத் தம் மனைவியர் இருவர்கட்கும் வழங்கினார். மூன்றாவது பங்கினைத் தம்மை ஆட்கொண்டு ஆசாரியரான பட்டருக்கு அளிப்பதற்காக எடுத்துக் கொண்டார். இல்லறத்தைத் துறந்து துறவறம் மேற்கொண்டு பட்டரைக் காண திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார்.

தம்மை நாடிவரும் ஏழைகளுக்கு உணவிடுதலே இல்லறத்தாரின் கடமை என்ற கொள்கையை மாதவர் கொண்டிருந்தார் என்பது இதன் மூலம் புலனாகிறது. திருவரங்கம் அடைந்த வேதாந்தி பட்டர் தம் திருவடிகளில் வீழ்ந்தார். உடனே பட்டர்பிரான் "நம் சீயர் வந்தார்" என்று வாரி அணைத்துக் கொண்டார். மாதவர் அது முதல் நஞ்சீயர் எனும் பெயர் பெற்றார். துறவிகளைச் சீயர் என்ற சொல்லால் அழைப்பது வைணவ மரபாகும்.

இதன்பிறகு பட்டருடைய சீடராக நஞ்சீயர் திருவரங்கத்திலேயே வாழ்ந்துவரலானார்.

நஞ்சீயர் பட்டர்பிரானிடம் வைணவ நூல்களைக் கற்றுத் தெளிந்தார். மதி நுட்பம் வாய்ந்த நஞ்சீயர் தம் ஐயத்தை அகற்றிக் கொள்ள கூறிய வினாக்களைக் கேட்க பட்டர் அவற்றிற்கு சிறப்பான விடைகளை அளித்தார்.

திருமங்கை "ஒரு நல் சுற்றம்" என்று தொடங்கும் திருமொழியில் பத்துபபாடலகளிலும் பற்பல வைணவத் தலங்களைப் பாடுகிறார். "இவ்வாறு பல திவ்ய தேசங்களை ஒரே பதிகத்தில் அருளிச் செய்வதன் கருத்து என்ன" என்று நஞ்சீயர் கேட்டார். "புதிதாகத் திருமணம் ஆன பெண் புகுந்த வீட்டிற்குப் புறப்படுகிறாள். தன்னுடன் நெடுநாள் பழகிய வரிடமும் சொல்லிக்கொண்டுபோவாள். அதுபோல திருமங்கை ஆழ்வார் புக்ககமாகிய பரம்பதத்திற்குச் செல்வதற்கு முன் தான் ஈடுபட்ட தலங்களைச் சொல்லிக் கொண்டு போகிறார்" என்றுபட்டர் சிறப்பாக விடை கூறினார்,

நஞ்சியர் தனது குருவான பட்டரின் பல்லக்கைத் தோளில் சுமக்க முற்பட்டார். துறவியாகிய நீர் இப்படிச் செய்யக் கூடாது எனப் பட்டர் தடுத்தார்.

உடனே நஞ்சீயர் தங்களுக்குக் கைங்கர்யம் செய்ய துறவறம் இடையூறு எனறால் அத்துறவறத்தையே துறந்து விடுகிறேன் எனறு கூறிக் காவி உடையைக் களைந்தார் இதிலிருந்து நஞ்சீயரின் குருபக்தி தெரியவருகிறது பட்டரும் நஞ்சீயரிடம் மிகவும் அன்பு பாராட்டினார். ஒருமுறை திருக்கோட்டியூரில் ராமாநுஜதாசர் என்பருக்கு திருவிருத்த விரிவுரை கூறும்படி தனக்குப்பதிலாக பட்டர் நஞ்சீயரையே அனுப்பிவைத்தார்.

பிற்காலத்தில் நஞ்சீயருக்கு மிகச்சிறந்த சீடராக நம்பிள்ளை என்பவர் வாய்த்தார். நம்பிள்ளை கேட்ட வினாக்களுக்கு தம் குருவினைப்போலவே நஞ்சீயர்விடை இறுத்தார். ஸ்ரீவில்லிபுத்தூரில் குடியிருக்கும் எம் பெருமானாகிய வடபெருங்கோயிலுடையானின் திருவடிகளைக் காணவேண்டும் எனும் விருப்பத்தினால் எனது கண்கள் உறங்கவில்லை என்று திருவாய்மொழியில் ஆண்டாள் பாடுகிறான் இதைப்படித்த நம்பிள்ளை ஒருகேள்விகேட்டார்.

“ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே பிறந்து வளர்ந்து வாழ்த்துவரும் ஆண்டாள் நாச்சியார் அவ்வூரிலேயே குடிகொண்டுள்ள எம்பெருமானின் திருவடிகளைக் காணமுடியாமல் கண்கள் உறங்காமல் இருந்ததாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்”
இவ்வினாவிற்கு விடையாக,

“வடபெருங்கோயிலுடையான் கோயிலில் ஆண்டான் புகுந்தாளானால் நம்மைப்போல் திரும்பி வரமாட்டாள். தனக்குக்காட்சியளிக்க எம்பெருமான் இங்கே வந்து பள்ளி கொண்டிருக்கிறானே எனறு அவனுடைய எளிமைக் குணத்தை

நினைத்து உருகி மயங்கிவிடுவான். ஆகையால் அவனைக் கோயிலுக்குள் அழைத்துச் செல்லமாட்டார்கள். எனவே ஆண்டாள் அப்படிக் கூறியது பொருத்தமே" என்று நஞ்சீயர் கூறினார்.

நஞ்சீயர் திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி வியாக்யானம், கண்ணி நுண் சிறுத்தாம்பு வியாக்யானம், திருப்பாவைக்கு ஈராயிரப்படி வியாக்யானம், சரமகுரு நிர்ணயம், ஆகிய நூல்களை எழுதி உள்ளார்.

மேலும் திருவந்தாதிகளுக்கும் திருப்பல்லாண்டுக்கும் உரை, ரஹஸ்ய விவரணமாக நூற்றெட்டு, சரணாகதி கத்ய வியாக்யானம் ஆகிய நூல்களையும் அவர் அருளிச் செய்துள்ளார்.

நஞ்சீயர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவருடைய விருப்பம் என்ன என்று கேட்டனர். திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியில் "தூவிரிய மலருழக்கி" என்ற பதிகத்தை அரையர் சேவிக்கக் கேட்க வேண்டும் என்று நஞ்சீயர் கூறினார். அப்பதிகத்தில் நான்காவது பதிகத்தை அரையர் சேவித்தபோது அதன் பொருளில் ஈடுபட்டுச் சில வார்த்தைகள் பேசிய நஞ்சீயர் அப்படியே திருநாடு அலங்கரித்ததாகக் கூறுவர்.

பட்டருடைய மறைவிற்குப் பின்னர் நஞ்சீயர் 34 ஆண்டுகள் ஆசார்ய பீடத்தை அணி செய்ததாகவும் அக்காலத்தில் நூறுமுறை திருவாய்மொழி காலட்சேபம் செய்ததாகவும், நூறாம் முறையின்போது நஞ்சீயருடைய சீடரான நம்பிள்ளை தமது ஆச்சாரியருக்கு சதாபிஷேகம் செய்ததாகவும் குரு பரம்பரை, பெரிய திருமுடியடைவு ஆகிய இரு நூல்களுமே கூறுகின்றன.

# நஞ்சீயர் வாழித் திருநாமம்

தென்திரைசூழ் திருவரங்கம் செழிக்க வந்தோன் வாழியே !
சீமாதவன் என்னும் செல்வனார் வாழியே !
பண்டைமறைத் தமிழ்ப்பொருளைப் பகர வந்தோன் வாழியே !
பங்குனியில் உத்தரநாள் பாரு தித்தான் வாழியே !
ஒண்தொடியாள் கலவிதனை ஒழித்திட்டான் வாழியே !
ஒன்பதினாயிரப் பொருளை ஓதுமவன் வாழியே !
எண்திசையும் சீர்பட்டர் இணைஅடியோன் வாழியே !
எழில்பெருகும் நஞ்சீயர் இனிதூழி வாழியே !

# நம்மாழ்வாரின் திருவிருத்தம்

நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம் நூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களால் இயற்றப்பட்டதாகும். இஃது அகத்துறையில் அமைந்துள்ளதாகும். வெளிப்படையாக ஒரு பொருளையும் உட்பொருளாக வேறொரு பொருளும் சில திருவிருத்தப் பாடல்களில் அமைந்துள்ளன. இதில் பாட்டுடைத் தலைவனாக எம்பிரானின் திருநாமம் கூறப்படுவதால் இதைப் பெருந்திணைத் துறையைச் சார்ந்தது என்றும் கூறுவர். திருமாலின் கருணை பெற்று பிறவி நீக்கம் அடைவதையே நம்மாழ்வார் திருவிருத்தத்தில் மையமாக வைத்து அருளிச் செய்துள்ளார்.

பெரியவாச்சான் பிள்ளை திருவிருத்தத்திற்குச் சிறப்பான வியாக்கியானம் எழுதி உள்ளார்.

**திருவிருத்தத்தின் முதல் பாடல் :**

பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா
ஒழுக்கும் அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனியாம்
உறாமை உயிரளிப்பான்
என்நின்ற யோனியு மாய்ப்பிறந்தாய்
இமையோர் தலைவா
மெய்ந்நின்ற கேட்டருளாய் அடியேன்
செய்யும் விண்ணப்பமே !

உலகில் உள்ள நிலையற்ற பொய்மைத்தன்மை கொண்ட பொருள்களை எல்லாம் உண்மையானவை என அறிவது அறியாமையாகும். இப்பிறவியில் பல தீய ஒழுக்கங்களைக் கடைபிடிக்க இந்த அழுக்கு உடம்பு காரணமாக இருக்கிறது. எனவே இறைவனிடம் இப்பிறவித் துன்பம் இனி பெற வேண்டாம் என நம்மாழ்வார் விண்ணப்பிக்கிறார்.

நம்மாழ்வாரின் மனக்கண்ணில் திருமால் தோன்றுகிறார். எனவேதான் 'இந்நின்ற நீர்மை' என்று சுட்டிக் காட்டுகிறார். முனிவர்கள் அரக்கர்களால் கொடுமைப்படுத்தப்பட்ட தங்கள் உடம்பை இராமபிரானுக்குக் காட்டியதுபோல என்று உரைகாரர் இதற்கு உதாரணம் கூறுகிறார்.

இறைவன் பிறப்பும் இறப்பும் இல்லாதவனாவான். 'பிறப்பில் பல்பிறவிப் பெருமானே' என்று திருவாய்மொழி கூறுகிறது. ஆனால் எம்பெருமான் உயிர்களைக் காத்தருள்வதற்காகப் பல அவதாரங்கள் எடுத்துப் பிறக்கவேண்டி உள்ளது. எனவேதான் "உயிர் அளிப்பான் என் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார். இப்பாசுரத்தில் அடியேன் என்றது தாசமார்க்கத்தைக் காட்டுகிறது என்று கூறுவார்கள்.

கண்ணபிரானின் காதல் கொண்ட தலைவி ஒருத்தி அவனைக் காண முடியாமல் வருந்துகிறாள். பிரிவுத் துயர் அவளை வாட்டுகிறது. அவளின் நிலைகண்டு தோழி கூறுவதாக அமைந்த பாடல் இது.

செழுநீர்த் தடத்துக் கயல்மிளிர்ந்
தாலொப்ப சேயரிக்கண்

அழுநீர் துளும்ப அலமரு
கின்றன வாழியரோ !
முழுநீர் முகில்வண்ணன் கண்ணன்
விண்ணாட்டவர் மூதுவராம்
தொழுநீர் இணையடிக்கே அன்பு
சூட்டிய சூழ்குழற்கே !

நீருண்ட மேகம் எந்த நேரத்திலும் மழை பொழியக்கூடியது. கண்ணன் மனமும் எந்நேரமும் கருணை மழை பொழியக் கூடியது. எனவே முழுநீர் முகில்வண்ணன் கண்ணன் என்று போற்றிப் புகழ்கிறார். எம்பெருமானைக் காணமுடியாமல் அழுதுஅழுது கண்கள் சிவந்துவிட்டமையால் சேயரிக்கண் எனப்படுகிறது.

மேலும் குளத்தில் மீன்கள் மிளிர்வதுபோல் அவள் கண்களில் கண்ணீர் துளும்புகிறது. தலைவி கண்ணன் வருகிறானா, வருகிறானா எனப் பல திசைகளிலும் பார்ப்பதால் கண்கள் அலமருகின்றன என்கிறார் ஆழ்வார்.

தலைவியே தன் நிலைமை குறித்து வருந்துவதாகம் 12ஆம் பாடல் காட்டுகிறது.

"பேர்கின் றதுமணி மாலை
பிறங்கியள் ளற்பயலை
ஊர்கின் றதுகங்குல் ஊழிகளே
இதெல்லா மினவே
ஈர்கின்ற சக்கரத் தெம்பெரு
மான்கண்ணன் தண்ணந்துழாய்
சார்கின்ற நன்னெஞ்சி னார்தந்து
போன தனிவளமே !"

கண்ணபிரான் மீது அன்பு கொண்டவர்கள் சக்கரப்படையின் அழகில் மயங்கி வருந்துகின்றனர். பகைவர்களை அச்சக்கரம் அழிக்கக் கூடியது. எனவே அவரும் வருந்துகின்றார். இவ்வாறு அன்பரையும் பகைவரையும் வருந்துகின்ற சக்கரத்தை உடையவனும் திருத்துழாய் அணிந்தவனுமான கண்ணன் எனக்குத் தந்த அருட்செல்வம் சிறப்பானது என்கிறாள் தலைவி.

எனது அழகிய மாமை நிறம் நீங்குகிறது. பசலைநோய் வந்து பரவுகிறது. இரவு விரைவாகச் செல்லாமல் ஊர்கின்றது. கங்குல் ஓர் ஊழிக்காலமாய்க் காட்சி தருகிறது. இதெல்லாம் என்ன என்று பிரானின் பிரிவால் பிதற்றுகிறாள் தலைவி. வருந்தும் தலைவி கண்ணனின் திருவுளத்தை "நன்னெஞ்சு" என்கிறாள். இப்போது பிரிவு தந்தாலும் முன்பு அருளை அளித்ததால் அவ்வாறு கூறுகிறாளாம்.

காதல் மனமொத்த தலைவனும் தலைவியும் பெற்றோர் இசைவு பெறாமல் திருமணம் செய்து கொள்ள வேற்றூர் செல்வது அகத்துறையில் உடன்போக்கு எனப்படும். தலைவன் தலைவியை வெப்பமும் முட்களும் நிறைந்த பாலைநில வழியேத் தன் ஊருக்கு அழைத்துச் செல்கிறான். வழியில் களைப்பு தெரியாமல் இருக்க விண்ணோர் தொழுங்கண்ணன் என்ற பெருமானின் பெருமையைப் பேசுகிறான்.

நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்
அறமென்று கோது கொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்
பாலை கடந்த பொன்னே !
கானிலம் தோய்ந்து விண்ணோர்
தொழுங்கண்ணன் வெஃகாவுது அம்பூந்
தேனிலஞ் சோலையைப் பாலதுளப்
பாலைக்குஞ் சேமத்ததே !

என்பது பாசுரம்.

கதிரவன் நால்வகை நிலத்தையும் வாயிலிட்டு நீரறமென்று உமிழ்ந்த கோதாகிய பாலை என்பது நல்ல நயமாகும்.

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி தலைவன் விரைவில் வருவானா, மாட்டானா என்பதை அறியக் கூடல் இழைப்பாள். அதாவது மணலில் பெருவட்டம் வரைந்து அதனுள் சிறு வட்டங்கள் வரைந்துகொண்டே போவாள். இறுதியில் அவற்றை எண்ணிப் பார்த்து அவை இரட்டையாய் இருந்தால் தலைவன் வருவான் என்றும் ஒற்றையாய் இருந்தால் வாரான் என்றும் முடிவு செய்வாள்.

தலைவி கண்களை மூடிக்கொண்டு மணலில் கைவிரலால் வட்டமாகச் சுழித்துக்கொண்டே வருவாள். இருமுனைகளும் ஒன்று கூடி வட்டம் உருவானால் தலைவன் வருகை தருவான் என்று உறுதி கொள்வாள் இதற்கும் கூடலிழைத்தல் என்று பெயர். நம்மாழ்வார் காட்டும் கூடல் இழைத்தல் பாசுரம் இது

சிதைக்கின்றது ஆழி என்றாழியைச்
சீறித்தன் சீரடியால்
உதைக்கின்ற நாயகந் தன்னொடு
மாலே உனது தண்தார்
ததைக்கின்ற தண்ணந் துழாயணி
வானதுவே மனமாய்ப்
பதைக்கின்ற மாதின் திறத்தறி
யேன் செயற் பாலதுவே !

தலைவி கூடல் இழைக்கிறாள். அக்கூடலோ தலைவன் வரமட்டான் என உணர்த்தியது. தலைவி சினம்கொண்டு அதைக் காலால் சிதைத்தாள். பிரானின் திருத்துழாய் பெறுவதிலேயே மனம்

உடையவளாய் பதைக்கிறாள். யான் செய்வது யாது என்று இப்பாடலில் தோழி வருந்துகிறாள்.

பெருமாளைக் காணாமல் பிரிந்திருப்பதால் தலைவிக்கு நோய் வருகிறது. கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்கின்றனர். "இவள் நோய் வானோர் தலைவனாகிய திருமாலினால் உண்டாகிய நோயாகும். இதைத் தீர்க்கத் திருத்துழாய் மாலையால், அத்துழாய் இலையால், அதன் கொம்பால் தலைவியை விசிறுங்கள்" என்று கட்டு விச்சி கூறுகிறாள். இதோ அந்த அருளிச் செயல்

வாராயின முலையாள் இவள்
வானோர் தலைமகனாம்
சீரா யினதெய்வ நன்னோயிது
தெய்வத் தண்ணந்துழாய்த்
தாரா யினும்தழை யாயினும்
தன்கொம்ப தாயினும்கீழ்
வேராயினும் நின்ற மண்ணாயி
னும்கொண்டு வீசுமினே !

இறைவன் பிரிவை தெய்வ நன்னோய் என்று அருளிச் செய்கிறார்.

இவ்வாறு சொற்சுவை, பொருட்சுவை, இலக்கிய நயம் ஆகியவற்றோடு பக்திச் சுவையைப் பெரும் அளவில் கலந்து பெருமாளின் பெருமையைப் போற்றும் வண்ணம் திருவிருத்தத்தை நம்மாழ்வார் நமக்காக அருளிச் செய்துள்ளார்.

# திருப்பாவையின் முதல் பாசுரம்

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் ஆண்டாள் நாச்சியார் அருளிச் செய்த திருப்பாவைப் பாசுரங்கள் பக்திப் பெருக்கையும் ஆன்மீக உணர்வினையும் இலக்கிய நயத்தையும் வாழ்வியல் செய்திகளையும் எடுத்து இயம்புகின்றன. அவை எல்லாக் காலங்களிலும் இறைவனை நினைந்து மனம் உருகிப் பாடவேண்டியவை ஆகும்.

“மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்” என்று விரதம் பூண்டு கண்ணனையே மணாளனாக மனத்தில் வரித்துக் கலந்துவிட ஆண்டாள் பாவை நோன்பு நோற்கிறாள். அந்த நோன்பில் கலந்து கொள்ள ஒவ்வோர் இல்லாகச் சென்று கன்னிப் பெண்களை எழுப்புகிறாள்.

திருவில்லிபுத்தூரையே ஆய்பாடியாகவும், வடபெருங் கோயிலையே நந்தகோபர் மாளிகையாகவும், அங்கு எழுந்தருளியுள்ள வட பத்ரசாயிப் பெருமானையே கண்ணபிரானாகவும், தன்னைக் கோபியரில் ஒருத்தியாகவும், மற்றவர்களைத் தோழிகளாகவும் கருதி ஆண்டாள் திருப்பாவை பாடுகிறாள்.

மார்கழி மாதத்தில் பாவை நோன்பு கொண்டாடப்படுவது தொன்மையான மரபாகும். வடமொழியில் நட்சத்திரமும் பௌர்ணமியும் ஒன்று கூடுவதை வைத்துப் பெயர்கள் அமைத்திருந்தனர். அதன்படி சித்திரை நட்சத்திரத்தில் பௌர்ணமி வரும் மாதம் “சைத்ரம்” எனப் பெயர் பெறும். விசாக நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடும் மாதம் ‘வைசாகம்’ ஆகும். மிருக சீர்ஷ

நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடும் மாதம் மார்க்க சீரிஷம் என்று கூறப்படுகிறது.

மேலும் கீதையில் 'மாஸானாம் மார்க்க சீர்ஷோஹம்' என்று கண்ணபிரான் கூறுகிறார். 'மாதங்களில் நான் மார்கழியாய் இருக்கிறேன்' என்று இறைவனே பறைசாற்றுவது மார்கழிக்கு மேலும் பெருமை ஊட்டுகிறது. மேலும் தேவர்களின் விடியற்காலை என்று மார்கழி மாதத்தைக் கூறுவர்.

அத்தகு சிறப்புப் பெற்ற மார்கழித் திங்களில் 'மதி நிறைந்த நல்லநாளில்' ஆண்டாள் பிற பெண்களை அழைக்கிறார். மதி நிறைந்த என்பதிலிருந்து முழு நிலவாய் ஒளிவீசும் பௌர்ணமி நாள் என்று அறிய முடிகிறது. இருளை அகற்றி எங்கும் ஒளி தரும் முழு நிலா நாளில் அஞ்ஞான இருள் அகன்று மெய்ஞான தீபம் அடைய அனைவரையும் எழுப்புகிறார்.

மதி என்பதற்கு அறிவு என்றும் பொருள் கூறுவர். இந்த நாள் மற்ற நாள்களைப் போல் அல்லாமல் இறைவனை எண்ணுகின்ற நாளாக அமைவதால் அறிவு நிறைந்த நாளாக மதி நிறைந்த நாளாகக் கொள்ளப்படுகிறது.

பாவை நோன்பு நோற்கும் முன்னர் 'நீராடப் போதுவீர்' என்று ஆயர்பாடிப் பெண்கள் அழைக்கப்படுகின்றனர். அப்பெண்கள் புறந்தூய்மை செய்யவேண்டி நீராட அழைக்கப்பட்டாலும், பின்னர் அவர்கள் எங்கும் நீராடியதாகக் குறிப்புகள் இல்லை. உண்மைதான் அவர்கள் திருமாலின் குணக்கடலில் நீராட எழுப்பப் படுகின்றனர்.

சங்க நூல்களில் கலவியை 'சுனையாடல்' என்று

குறிக்கின்றன. எனவே நீராடல் என்பதைக் கண்ணனுடன் கலத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். 'ஸம்ஸ்லேஷம்' என்று இதனை வடமொழி கூறும். மேலும் 'இறைவனை அடைய எல்லாரும் அதிகாரிகள்' என்பது வைணவ விதியாகும். எனவே இறைவனுடன் கலக்க வருகின்றவர்கள் யாவரும் வரலாம் எனும் பொருளில் "போதுவீர் போதுமினோ" என்று நாச்சியார் அழைக்கிறார்.

அவர்களை விளிக்கும்போது 'நேரிழையீர்' என்று கூறப்படுவதிலிருந்து ஆயர்குலப் பெண்டிரின் செல்வவளம் வெளிப்படுகிறது. நேர்த்தியான ஆபரணங்களை அவர்கள் கண்ணனின் வரவுநோக்கி அணிந்துள்ளனர்.

ஆயர்பாடியும் சாதாரணமானதன்று ; அது 'சீர்மல்கும் ஆய்பாடி' ஆகும். ஆய்பாடியில் கால்நடைகள் அதிகம் ! அதனால் அது சீர்பெற்று விளங்கியது. மேலும் பகவான் கண்ணன் அவதாரம் செய்த தலம் அல்லவா? அதனால் பெருமை பெற்றதாம் ஆய்பாடி !

நம்மாழ்வார் அயோத்தியை 'நற்பால் அயோத்தி' என்று அருளிச் செய்தார்.

இராமபிரான் தோன்றியதால் அயோத்திக்கு 'நற்பால்' என்ற அடைமொழி சேர்ந்தது. அங்குள்ளவர் அனைவரும் நற்பால் நல்ல பண்பு நல்ல சுபாவம் கொண்டவர்கள். அதனால்தான் கம்பன் 'வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்' என்று அயோத்தியைப் பாடுவான்.

அண்ணங்கச் சாரியார் "பரமபதத்தை விட ஆய்பாடி சீர் பெற்றது" என்று உரை எழுதுவார். ஏன் தெரியுமா ! ஆய்பாடி பக்த

சம்சாரிகள் மட்டும் அல்லாமல் முமுட்சுக்களாய் சீர்மை பெற்றவர்களும் வசிக்கும் தலம் ஆகும். மேலும் பரமபதத்தில் உயர்வு, தாழ்வைக் காண முடியும். ஆய்பாடியில் எங்கும் கண்ணனில் நீர்மை பிரகாசிக்கிறது.

அப்படிப்பட்ட ஆய்பாடியில் "கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன்" குமரனாகக் கண்ணன் விளங்குகிறான். வசுதேவன் பெற்றெடுத்த செல்வனை நாச்சியார் நந்தகோபன் குமரனாகக் காண்கிறார். "தேவகி புலம்பல்" பாசுரங்களில் குலசேகராழ்வார் மிகச் சிறப்பாக இதைக் காட்டுவார்.

வயது முதிர்ந்த பெண்கள் கண்ணனாகிய குழந்தையைத் தங்கள் தொடைகளின் மீது வைத்துக் கொண்டு "உன் தந்தை யார்" என்று கேட்பார்கள் ! கண்ணனோ தன் செம்மையான விரல்களினால் நந்தனைக் காட்டுவானாம் ! அப்பேற்றை வசுதேவன் பெறவில்லையாம்.

"உந்தையாவன்? என்றுரைப்ப நின் செங்கேழ்
விரலினும் கடைக்கண்ணினும் காட்ட
நந்தன் பெற்றனன் நல்வினையில்லா
நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே"

என்பன பாசுர வரிகள் ஆகும்.

நந்தகோபன் "கூர்வேல் நெடுந்தொழிலன்" என்று குறிப்பிடப்படுவது ஆய்வுக்குரிய ஒன்றாகும். நந்தகோபனுக்கு வேல் ஏது? ஆயர்களில் கையில் எப்போதும் கோல் இருக்கும். ஆனால் நந்தகோபன் கையில் வேல் ஏந்தி உள்ளானாம். ஏன் தெரியுமா ! கண்ணன் பிறந்தபின் சாதுவான நந்தகோபன் மாறிவிட்டான்.

கம்சனின் ஆட்களால் கண்ணபிரானுக்கு நேரிடும் இடுக்கண்களைத் துடைக்க எப்பொழுதும் நந்தகோபன் வேல் தாங்கத் தொடங்கிவிட்டான். மற்றும் இருபத்து நான்காம் திருப்பாவையில் "வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி" என்று குறிப்பிடப் படுகிறது. அங்கு திருவாழியே வேலாகிறது. இங்கும் அதையே கொள்ளலாம் என்று மேன்மைமிகு உ.வே. அண்ணங்காச்சாரியார் பொருள் கூறுவார்.

அடுத்து அவனை "யசோதை இளஞ்சிங்கம்" என்று காட்டுகிறார். சிங்கம் துர்குணத்தாரால் நெருங்க இயலாதது. கம்பீரமானது. நாச்சியார் திருமொழியிலும் "கோளரி மாதவன் கோவிந்தன்" என்று ஆண்டாள் பாடுவது நோக்கத் தக்கது. "கோளரி என்பது" ஆண் சிங்கமாகும்.

கண்ணனை வளர்க்கும் யசோதையை "தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே" என்று குலசேகரர் அருளிச் செய்வார். யசோதை "ஏரார்ந்த கண்ணியாம்" அதாவது அழகான அகலமான கண்களை உடையவள். அழகான கண்ணனின் திருஉருவம் பார்த்துப் பார்த்தே கண்கள் அழகாகி விட்டன போலும்.

ஊனக் கண்களே பெரிதென்றும் அழகானது என்றும் எண்ணியிருந்த உறங்காவில்லியை எம்பெருமானால் அரங்கநாதரின் கண்களைக் காட்டி அருளிய வரலாறு சிறப்பானதன்றோ !

"என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணும் உணர்ந்து" என்பது ஆழ்வார் அருளிச் செய்தது ஆகும்.

நந்தகோபனையும், யசோதையும் புகழ்ந்த பின்பு கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான் என்று கண்ணபிரான் போற்றப்படுகிறார். கண்ணபிரானின் நிறத்துக்கு கரிய மேகத்தை உவமை காட்டுவது தொன்றுதொட்டு வரும் மரபாகும்.

"பருநிற முகில்" என்று கம்பர் உவமை கூறுவார். கரிய மேகம் எவ்வாறு பயிர்களுக்கு மழை தந்து வளர்விக்கிறதோ அதுபோல கண்ணபிரான் கோபியர்களின் தாபத்தை ஆற்றவல்லவன். அன்பர்களின் குறை தீர்க்க வல்லவன். கண்ணனின் கண்கள் "செங்கண்" என்று காட்டப்படுகின்றன. செம்மையாவது கோணல் இல்லாமையாகும். சந்தேகம் இல்லாமல் பூஜிக்கத் தக்கவர் கண்ணபிரானே என்பதைக் கண்கள் அறுதியிட்டு உரைக்கின்றன.

'கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண' என்று அனுமன் இராமபிரானின் கண்களைத் தாமரைக்கு உவமை காட்டுவதும் இங்கு கருதத் தக்கது. சூரியனாகிய கதிரும், சந்திரனாகிய மதியமும் இரு கண்களாக விளங்குவதை 'கதிர் மதியம்போல் முகத்தான்' எனும் சொற்றொடர் காட்டுகிறது. சூரியன் வெப்பமானது. சந்திரன் குளிர்ச்சியானது. இரண்டும் எப்படி ஒரே முகத்தில் தோன்றும் என்ற ஐயம் எழலாம்.

அவரின் திருமுகம் பகைவர்க்கு வெப்பமாகவும் அன்பர்க்குக் குளிர்ச்சியாகவும் காட்சியளிக்கும் என்று பொருள் கொள்ளலாம். ஆண்டாள் பெருமாட்டியார் இதே உவமையை இருபத்து இரண்டாம் பாசுரத்திலும்

'திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல்நோக்குதியேல்'
என அருளிச் செய்வார்.

இப்படிப்பட்ட கண்ணனை 'நாராயணனே' என்று ஆயர்பாடிக் கன்னியர் போற்றுகின்றனர். 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்பதில் உள்ள தேற்றேகாரம் அவனே தேற்றாவிடில் வேறு யார் தேற்றுவார் என்று கேட்கிறது.

'பறை' என்பது நோன்புக்கான இசைக்கருவி என்று பொருள் கொண்டு அதை நாம் அவனிடம் பெறலாம் என்று கொள்ளலாம்.

'பறை' என்பதை பலன் என்ற கொண்டு பாவை நோன்பின் பலனை – பயனை நாராயணன் நமக்கு அருள்புரிவார் என்றும் பொருள் கொள்வர். பாவை நோன்பின் பயன் என்ன? அவனுக்கே அடிமையாதல் ! அவனுடனே இரண்டறக் கலத்தல் ஆகியவைதாம்.

ஆயர்பாடியின் செல்வச் சிறுமிகள் திருமாலைப் பாடி நோன்பு நோற்றுப் பயன் பெற்றார்கள். அவர்கள் 'இலக்குவன் போல கைங்கர்ய லட்சியம் கொண்டவர்கள் விபீஷணாழ்வான் போல அந்ய சேஷத்துவம் அற்றவர்கள், கஜேந்திராழ்வான் போல சுவாதந்திரமற்றவர்கள்' என்று வைணவப் பெருமக்கள் அவர்களைப் போற்றிப் புகழ்கிறார்கள்.

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் ! போதுமினோ நேரிழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்

— திருப்பாவை 1

# திருமங்கை மன்னனின் இலக்கிய நயம்

ஆழ்வார் பெருமக்கள் அருளிய பாசுரங்கள் நாலாயிரத்தில் மிக அதிகமான பாடல்களைப் பாடியவர் திருமங்கை ஆழ்வாரே ஆவார். பக்திப் பெருக்கோடு இலக்கியச் சுவையும் கலந்து அவரது பாசுரங்கள் செவிக்கினிய தேனாய்த் தித்திக்கின்றன.

பல்வேறு திவ்ய தேசங்களுக்குச் செல்லும்போது ஆழ்வார் நாச்சியார் கோயில் வருகிறார். அவ்வூரை அவரது பாடல்களில் "நறையூர்" என்றுதான் காட்டுகிறார். அந்த நறையூரைப் பாடவந்த ஆழ்வார் ஓர் அழகான காட்சியைக் கண்முன் கொணர்ந்து வைக்கிறார்.

அழகிய ஓர் ஆம்பல் மலரில் ஆண் நண்டும், பெண் நண்டும் இணைந்து இல்லறம் நடத்துகின்றன. பெண்நண்டு தற்போது சூல் கொண்டு மிளிர்கிறது. சூல் கொண்ட தன் மனைவிக்கு ஏதாகிலும் இனிமையான பொருள் கொண்டு வந்து தர ஆண் நண்டு விரும்புகிறதாம். தாமரை மலருக்குச் சென்று அப்பூவின் மகரந்தத்தைக் கொண்டுவந்து தர எண்ணிய ஆண் நன்டு மெல்ல நகர்கிறது. தாமரைப் பூவையும் அது அடைகிறது.

அவ்வமயம் கதிரவன் மறைய அம்மலர் மூடிக் கொள்ள ஆண் நண்டு மூடிய மலருக்குள் மாட்டிக் கொண்டது. மலருள் உருண்டு புரண்டு வெளியே வர முயல்கிறது. முடியவில்லை, மலரின் மகரந்தத்தாது உடல் முழுவதும் படிந்து விடுகிறது.

மறுநாள் காலை ஆதவன் தோன்ற பொழுதுவிடிய மலர் திறக்கிறது. உடலில் பூசிய மகரந்தத்துடன் மெதுவாக நடந்து தன் மனைவி இருக்கும் ஆம்பல் மலரை நோக்கி வருகிறது. அது அருகில் வரும்போது பகற் பொழுதாகி விட்டபடியால் ஆம்பல் மலர் மூடிக் கொள்கிறது. இம்மலருள் பெண் நண்டு இருக்கிறது.

ஆண்நண்டு கடந்த இரவு வேறிடத்தில் தங்கிய படியாலும் அதன் உடம்பில் தாதுக்கள் பூசிக் கொண்டிருந்ததாலும் பெண் நண்டு ஊடல் கொண்ட தன் இல்லக் கதவை அடைத்துக் கொண்டதாம். இக்காட்சியை பெரிய திருமொழியில்

பள்ளி கமலத் திடைப்பட்ட
பருவாய் அலவன் முகப்நோக்கி
நள்ளி யூடும் வயல்சூழ்ந்த
நறையூர் நின்ற நம்பியே

என்று ஆழ்வார் பாடி மகிழ்கிறார்.

இந்தப் பாசுரத்திற்காகப் பட்டர் பெருமான் விளக்க உரை கூறியதும் திரு நறையூர் அரையர் கேட்டாராம்.

"ஆராய்ந்து குற்றம் அறிந்த பிறகுதானே கதவடைத்துத் தண்டிக்க வேண்டும்? பெண் நண்டு விசாரிக்கவில்லையே. அதற்கு பட்டர்பிரான் என்ன செய்வது? கேள்வி முறை இல்லாதபடி பெண்ணாட்சி செய்யும் நாடாயிற்றே" என்று விடை சாமர்த்தியமாகச் சொன்னாராம்.

ஏனெனில் நாச்சியார் கோயிலில் பிராட்டிக்குத்தான் எல்லா முக்கியத்துவமும் அளிக்கப் படுகின்றன. வீதி புறப்பாட்டில் கூட நாச்சியார் முன்னே எழுந்தருளிச் செல்ல எம்பெருமான் பின்னே

வருவதுதான் வழக்கம். ஆண் ஆட்சி என்றால் கேட்பார் உண்டு பெண்ணரசு நாடானதால் கேட்பார் இல்லை என்ற நயம் சுவை மிகுந்ததாகும்.

அடுத்துத் திருமங்கை ஆழ்வார் சுவாமி மலைக்கு அருகில் உள்ள புள்ளம் பூதங்குடிக்குச் செல்கிறார். ஊர் முழுவதும் நீர்வளம் நிலவளம் நிரம்பி இருக்கின்றன. வயல்களை உழவர் பெருமக்கள் உழுது நீர் பாய்ச்சி சேறாக்கி இருக்கின்றனர். அவ்வயல்கள் தோறும் அளவற்ற மீன்கள் கிடந்து துள்ளுகின்றன. அங்கே துள்ளும் மீன்களைப் பிடிக்க கொக்கு, நாரை போன்ற பறவையினங்கள் பறந்து திரிகின்றன.

இக்காட்சியை ஆழ்வார் பாட வருகிறார்.

"பள்ளச் செறுவில் கயல்உகளப்
பழனக் கழனி அதனுள்போய்
புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்
புள்ளம் பூதங் குடிதானே"

என்பது அவர் பாசுரம். இந்த அடிகள் குறித்து ஆலவாயுடையான் என்பவர் பட்டரிடம் ஓர் ஐயம் எழுப்பினார். "வயலில் மீன்கள் நிறைய இருக்கும்போது வருகின்ற பறவை ஏன் தேடி வேண்டும்? மீன்கள் குறைவாக இருந்தாலன்றோ இரை தேடும்" என்ற சொற்கள் பொருத்தமாக இருக்கும்?

அதற்குப்பட்டர் இவ்வாறு விடையிறுத்தார். "இரை தேடும்" என்று ஆழ்வார் ஏன் அருளிச் செய்தார் தெரியுமா? அவ்வயல்கள் வளம் நிறைந்தவை. எனவே அங்கு வாழும் மீன்களும் தூண்கள்

போலத் தடித்திருக்கும். அப்பெரிய மீன்களைக் கூட்டல் உள்ள தம் குஞ்சுகளுக்கு எடுத்துச் செல்ல முடியாது என்று பறவைகள் வயல்களில் சிறிய மீன்களைத் தேடிப் பிடிக்கின்றன.

இவ்வாறு படிக்கப் படிக்க தமிழ்ச் சுவை தந்து நம்மை ஆனந்தக் கடலில் மூழ்கவைப்பவையே திருமங்கை ஆழ்வார் பாசுரங்கள் ஆகும்.

# திருமங்கை ஆழ்வாரின் திருத்தாண்டகப் பாசுரங்கள்

தாண்டகம் என்பது இசையுடன் பாடுவதற்கான முறையில் அமைந்துள்ள ஒரு பா வகையாகும். தொல்காப்பியம் செய்யுளியல் பகுதியில் "எண் சீரான் வந்த கொச்சக ஒரு போகு" என்பது இதனைக் குறிக்கிறது. மேலும் பன்னிரு பாட்டியல் 110 ஆவது நூற்பாவும் தாண்டகப் பாவிற்குரிய சீர், அடி எல்லைகளை வரையறுக்கிறது.

நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட திருவாய் மொழி எனும் வைணவ வேதத்தின் ஆறங்கமாகத் திருமங்கை ஆழ்வாரின் ஆறு நூல்களும் கூறப்படுகின்றன. அவற்றில் திருக்குறுந்தாண்டகம் முப்பது பாசுரங்களையும் கொண்டு விளங்குகின்றது. இத்தாண்டகப் பாக்களை மங்கை மன்னனே திருவரங்கத்தில் பெருமாளின் முன் உருகிப் பாடினார் என்று கூறுவர்.

இறைவன் திருவடியை அடைந்து அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையினால் பாடப்பட்டது திருக்குறுந்தாண்டகம் என்றும் அவனை அடைந்தபின் அப்பெருமானின் பெருமையப் பாடுவது திருநெடுந்தாண்டகம் என்றும் கூறுவார்கள்.

திருமாலின் பெருமையைக் கூறும்போது திருமங்கை ஆழ்வார் நம் தாண்டகப் பாக்களில் "இறைவனே செல்வம்" எனும் பொருளில் பெருமாளை பவளத்தூண் என்றும் மணித்திரள் என்றும் பைம்பொன் என்றும் முத்தொளி மரகதம் என்றும் காட்டுவார்.

நாம் எல்லாம் உயிரைக் காப்பாற்ற உணவை உண்டு உடம்பை வளர்த்துக் கொண்டுள்ளோம். ஆன்மிக உயிருக்கு உணவாக இறைவனே விளங்குகிறான். எனவே பெருமானைத் திருமங்கை மன்னன் உணவுப் பொருள்களாகவும் காண்கிறார்.

தேனிடைக் கரும்பின் சாறு, பச்சைத்தேன், அரங்கமா கோயில் கொண்ட கரும்பு, கடல் கிடந்த கனி என்று அவர் அருளிச் செய்கையில் நம் உயிரும் உடலும் பேரானந்த வெள்ளமதில் மூழ்கித் திளைக்கின்றன.

மேலும் திருமாலின் வண்ணத்தில் திருமங்கை ஆழ்வார் உள்ளம் பறிகொடுத்தார் போலும் ! எம்பெருமானின் வண்ணத்தை பூங்கெழு வண்ணன், வரும் புயல் வண்ணன் காவிபோல் வண்ணன், அலைகடல் வண்ணன், கரு நீல வண்ணன், செங்கண்ண வண்ணன், என்றெல்லாம் பாடிப்பாடி அகமகிழ்ச்சி கொள்கிறார்.

திருமாலின் பல்வேறு அவயங்களைக்கண்குளிரக் கண்டு அவற்றின் அழகில் பெரிதும் ஈடுபட்டதால் மங்கை மன்னன், "சேவடிச்செங்கண்மால், குன்றெடுத்த தோளினான், மாகீண்ட கைத்தலம், மை வண்ண நறுங்குஞ்சி. பெரியதோள், மின் இலங்கு திருவுரு" என்று இப்பாக்களில் புகழ்ந்துபாடுகிறார்.

திருமாலின் திவ்விய தேசத்தலங்களில் இருபத்து நான்கு திருத்தலங்களும் மற்றும் இருபத்தெட்டு அவதாரக்கதைகளும் தாண்டகப்பாக்களில் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன,

ஆழ்வார் பெருமக்களில் 'நாயகி நாயக' பாவத்தைப் பெரிதும் பாடியவர்கள் நம்மாழ்வாரும் மங்கை மன்னனுமேயாவார்.

பரமான்வாகிய இறைவனைத் தலைவனாகவும், சீவான் மாவாகிய தன்னைத் தலைவியாகவும் வைத்துப்பாடும் இம்முறை கற்போரையும் இறைவனின் பால் காதல் கொள்ள வைப்பதாகும்.

திருநெடுந்தாண்டகத்தின் பதினொன்றாம் பாடல் முதல் இருபத்தெட்டாம் பாடல் முடிய ஆழ்வார் தம்மை நாயகியாக எண்ணி தம் நாயகளாள இறைவன் மீது பாடிய பாசுரங்கள் ஆகும், இவற்றின் முதல் பத்துப்பாடல்கள் தலைவியின் தாய் கூறுவதாகவும், கடைசி எட்டுப்பாடல்கள் -தலைவியே பாடுவதாகவும் அருளிச் செய்யப்பட்டுள்ளன.

திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியுள்ள பெருமாளின் மீது தலைவி தன் நெஞ்சைப்பறி கொடுக்கிறான். அந்தச் செங்கண் மாலை அடைய முடியவில்லையே என உள்ளம் வருந்துகிறாள் தன் நிலையை எடுத்து திருக்கண்ணபுரப் பெருமாளிடம் உரைப்பதற்காக நாரையைத் தூது விடுகிறாள். நாரையானது சென்று தன் ஆற்றாமையை அப்பெருமானிடம் தெரிவித்தாலேதான் அப்பேரின்பம் அடைந்து விடுவேன் என்று கூறுகிறாள்,

“செங்கால் மடநாராய் இன்றே சென்று
திருக்கண்ண புரம்புக்குஎன் செங்கண் மாலுக்கு
என்காதல் என்துணைவர்க் குரைத்தி யாகில்
இதுவொப்ப தெமக்கின்ப மில்லை”

என்று கூறும் அத்தலைவி நாரையிடம் தூது சென்று வந்தால் அதற்கு என்னென்ன பரிசு கிடைக்கும் என்பதையும் கூறி அதைத்தன் வசப்படுத்தி விடுகிறாள்.

நீ தூது சென்று வந்தால் உனக்கு இக்காட்டையே

உரிமையாக்கி வயலின் மீன்களைத்தருவேன். நீயும் உன்துணையுடன் இங்கு இன்பமாக வாழலாம் என்று ஆசை காட்டுவது போல் கூறும் நயம் இன்புறத்தக்கதாகும்

"பைங்கானம் ஈதெல்லாம் உனதேயாகப்
பழனமீன் கவர்ந்துண்ணத் தருவன் ; தந்தால்
இங்கே வந்து இனித்திருந்துன் பெடையும் நீயும்
இருநிலத்தில் இனிதின்பம் அடையலாமே"

என்பது ஆழ்வாரின் அருளிச் செயல் ஆகும். தன் மகள் திருவரங்கனிடம் உள்ளம் பறிகொடுத்துக் கலங்குவதைக் கண்ட தாய் வருந்திப் புலம்புவது போல் ஒரு பாசுரம் காணலாம்.

"பாம்புப் பள்ளியில் துயில் கொள்ளும் தலைவா என்றும் வயல்கள் சூழ்ந்த திருவாலி மைந்தா என்றும் என்மகள் பிதற்றுகிறாள். உணவை உண்ணாமல் உறங்காமல் இவள் கிடக்கிறாளே ! அணியரங்கம் சூடுதும் என்று தோழியரை அழைக்கிறாளே ! கண்களில் நீர் மல்க பெருமாளையே எண்ணி உள்ளம் சோர்ந்தாளே ; துவண்டாளே என் செய்வேன்" என்று அப்பாசுரத்தில் தாய் பதறுகிறாள்.

திருமால் எழுந்தருளியுள்ள நிலைகளை வைணவ சம்பிரதாயம் ஐந்தாகப் பகுத்துள்ளது. ஸ்ரீ வசனபூஷணத்தின் 42 ஆம் சூத்திரமும், அதற்கு மணவாள மாமுனிகள் அருளிச் செய்த உரையும் இதைத் தெளிவாகக் கூறுகின்றன.

திருமங்கையாழ்வாரின் தாண்டகப் பாசுரங்களில் இவ்வைந்து நிலைகளையும் காண முடிகிறது.

"பாருருவில் நீர் எரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஒருருவில் மூவருமே என்ன நின்ற"

என்பது அந்தர் யாமித்துவம்.

"அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது" என்பது பரத்துவம்.

"பாற்கடலாய்"

என்பது வியூகம்

"மாயமான் மாயச்செற்று, மருதிடை நடந்து வையம்
தாயமா பரவை பொங்கத், தடவரை திரித்து வானோர்க்கு
ஈயுமால் எம்பிரானார்" என்பது விபவம்.

"கண்டியூர் அரங்கம் மெய்யம்
கச்சிபேர் மல்லை என்று மண்டினார்"
என்பது அர்ச்சாவதாரம்.

பிருதி எனும் திருத்தலத்தில் அசோக மரத்தின் செந்நிறப்பூக்கள் மலர்ந்துள்ளன. அவை கொத்துக் கொத்தாய்ப் பூத்திருப்பது நெருப்புப் பற்றி எரிவதுபோல் உள்ளது. எனவே அதைக் கண்டு அஞ்சி வண்டுகள் ஓடுகின்றன. இக்காட்சியை

தாது மல்கிய பிண்டிவிண் டலர்கின்ற
தழல் புரை எழில் நோக்கிப்

பேதை வண்டுகள் எரி என வெருவெரு பிருதி என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார்.

இவ்வாறு இயற்கை வளம், அகத்துறை, இறைவனின் படிநிலைகள் ஆகிய அனைத்தையும் தன்னகத்தே கொள்ளுமாறு திருமங்கையாழ்வார் அருளிய தாண்டகப் பாக்கள் நம்மைப் பெருமாளின் பேரானந்த அனுபவத்தில் திளைக்கச் செய்கின்றன.

# பரிபாடலில் திருமால் நெறி

தொல்காப்பியம் செய்யுளியலுக்கு உரைவகுத்த (சூ. 21) பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகியோர் தங்கள் உரைகளில் மேற்கோளாகப் பரிபாடலில் ஒரு பாட்டை எடுத்தாண்டுள்ளனர்.

இதை எழுதியவர் யாரெனத் தெரியவில்லை. திருமாலின் திருவடிப் பெருமையை நினைந்து வழிபடும் அன்பர்களில் உலக இன்பங்களையும், துறக்கத்து போகங்களையும் விரும்பி வேண்டுபவர்கள் சிறந்தவராகக் கருதப்படமாட்டார் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

பாண்டி நாட்டின் வைகை நதிக்கரையில் அமைந்திருந்த திருப்பதியான இருந்தையூரில் எழுந்தருளியுள்ள திருமாலை அடியவர்கள் துதிக்கின்றனர். இத்தலத்தை மதுரைப் பேரூரின் ஒரு பகுதியாகவும் கொள்ளலாம்.

இருந்தையூரின் சிறப்பை இப்பாடல் பல்வகையில் பேசுகிறது. வான்மழையால் புதுப்புனல் வையையாற்றில் பெருகி ஓடியது. ஒரு புறத்தில் ஓங்கியமலையும் அம்மலையில் வேங்கை, கடம்பு, மகிழம்,, அசோகம் போன்ற மரங்களும் இருந்தன. ஊரின் ஒரு புறத்தில் குளம் ஒன்று இருந்தது. அங்கு தாமரைப் பூக்களில் வண்டுகள் ஒலித்துக் கொண்டிருந்தன. அத்திருக் குளத்தில் விண்மீன்களைப் போல் எண்ணற்ற மீன்கள் மின்னின.

புதுநீரின் வரவால் மக்கள் விழாக்கோலம் பூண்டிருந்தனர். உழவர்களின் ஏர் மங்கலப்பாடல்கள் எங்கும் ஒலித்துக்

கொண்டிருந்தன. நாற்றுகளை நட்டுக் கொண்டிருக்கும் உழத்தியரும் அவர் அழகில் மயங்கிய உழவரும் நிறைந்திருந்தனர். வயல்கள் எல்லாம் திருமகள் வீற்றிருக்கும் தகுதியைக் கொண்டிருந்தன.

அறநெறிதவறாத ஒழுக்கமும், வேதப் பயிற்சியும், தவத்தின் முதிர்ச்சியும் கொண்டிருந்த பெரியோர்களும் வேள்வித்திறத்தில் மிக்க அந்தணரும் நிறைந்து இருந்தனர். இருந்தையூர் வளமான ஊராகத் திகழ்ந்தது.

"உண்ணுவ, பூசுவ, பூண்ப, உடுப்பவை" ஆகிய எல்லாம் கடைவீதிகளில் நிரம்பி இருந்தன. மருதம், நெய்தலுமாகிய மென்புலத்திலும் முல்லையும் குறிஞ்சியுமாகிய வன்புலத்திலும் தாமாக விளையும் பொருட்களைக் கொண்டுவந்து விற்கும் களமர்களும், உழுது, விதைத்துப் பயன் கொள்ளும் உழவர்களும் வாழ்ந்திருந்தனர். அறம் பிறழாது வாணியம் செய்யும் புண்ணிய வணிகர் இருந்தனர்.

மகளிர் தம் கூந்தல் மலர்களில் வண்டுகள் தேன் உண்ண வந்து மொய்க்க அவர்கள் அவற்றை விரட்டுவர். அப்போது அவர்களின் வளையல் ஒலியும், வண்டுகளின் ஆரவார ஒலியும் மிக்கொலிக்கும். களிறு போன்ற ஆடவரும், கற்போடு ஒழுக்கமும் மடமும் பொருந்திய பெண்டிரும் ஒருங்கே திரண்டு நின்றனர்.

இவர்கள் எல்லாம் படைப்பதற்கு ஆக்கிய பொங்கலோடும் மங்கலக்குடையுடனும், நறும்பூக்களோடும், நறும் புகைப் பொருள்களோடும் கோயிலுக்கு வந்தனர். அஃது ஆதிசேடன் திருக்கோயில் ஆகும் ஆதிசேடனின் கழுத்தில் கருநிறப் படப்புள்ளிகள் விளங்குகின்றன.

பாற்கடலைக் கடைந்த காலத்தில் திருமால் கூர்மாவதாரம் எடுத்து மந்தர மலையைத் தாங்கினார். மலையின் நடுவே கயிறாக அமைந்து கடைய உதவியவன் ஆதிசேடன். அவர்கள் வலிமையோடு இழுத்துக் கடையும்போது அறுபடாது அழகுறத் திகழ்ந்தவனும் அவனே !

காற்றுத் தேவனின் வலிமை கெடும்படி தன் ஆயிரம் படங்களையும் விரித்து மேருமலையக் காத்தவன் ஆதிசேடன். சிவபெருமான் சினந்து திரிபுரத்தை அழித்த காலத்தில் இமயமலையாகிய வில்லில் நாணாக அமைந்தது ஆதிசேசன்.

"அத்தகு பெருமை பொருந்திய ஆதிசேடனை யாமும் வணங்கி நின் நல்ல திருவடிகளைப் போற்றுவோம் ; யாம் எல்லோரும் எம் சுற்றத்தோடு நின் திருவடிகளைப் பிரியாதிருக்க அருள் செய்ய வேண்டும்" என்று அன்பர்கள் வேண்டுகின்றனர். இதற்காகவே அவர்கள் எம்பெருமானை வழிபடுகின்றனர்.

பெருமானின் திருவடியில் எப்போதும் கிடக்க நினைப்பவர்,, திருமாலின் குடையாக, ஆசனமாக என்றும் பிரியாதிருக்கும் ஆதிசேடப் பெருமானைப் போற்றி வணங்க வேண்டும் என்பதை இப்பாடல் காட்டுகிறது.

மேலும் அனந்தாழ்வானாகிய ஆதிசேடப்பெருமான் பெருமானைப் பிரியாமல் இருப்பதுபோல நாங்களும் என்றும் நின் திருவடிகளைப் பிரியாமல் இருக்க வேண்டும் என்பதும் அடியவர்களின் விருப்பமாகும் என்றும் அறியலாம்.

பரிபாடலின் இரண்டாம் பாடலைப் பாடியவர் கீரந்தையார் எனும் புலவர் ஆவார். உலகத்தின் தோற்ற முறைகளையும், வராக

அவதாரத்தையும் சிறப்பித்துக் கூறி கொடுமையான எண்ணங்கள் இல்லாத நல்லறிவை அருளவேண்டுமெனத் திருமாலிடம் இப்பாடலில் அவர் வேண்டுகிறார்.

பரம்பொருளாகிய இறைவனிடத்திலிருந்து ஆகாயமும் அதிலிருந்து படிப்படியாக காற்று, தீ, நீர், நிலம் ஆகியவை தோன்றியதாக வேதங்கள் கூறுகின்றன. மேலும் பல்வேறு ஊழிக்காலங்கள் கடந்த பின்னர்தான் நிலவூழி தோன்றுகிறது.

நில ஊழி தோன்றுவதற்கு முன் நீர் ஊழிக்காலத்தில் எங்கணும் பெருவெள்ளம் பெருக்கெடுத்துக் கிடந்தது. அவ்வெள்ளத்தினுள்ளே நில ஊழி மறைந்து கிடந்தது. அந்த நில ஊழி வெளியே வந்து அதில் உயிரினங்கள் தோன்றத் திருமாலே காரணமாக விளங்குவதைப் பரிபாடலின்

"கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவனை" எனும் அடிகள் காட்டுகின்றன.

திருமாலே ! உயிர்கள் உண்டாதற்பொருட்டு நீ வராக அவதாரம் எடுத்து வெள்ளத்தடியிலே கிடந்த இந்த நிலத்தினை எடுத்தாய். அச்செயலால் இது வராக கற்பமென்னும் பெயர் பெற்றது. இவற்றை அழித்தும் மீளத்தோற்றுவித்தும் வருகின்ற திருவிளையாட்டினை நீ தொடர்ந்து செய்து வருகிறாய் என்று பரிபாடல் கூறுகிறது.

இதையே கம்பர் அலகிலா விளையாட்டு என்பார்.

இந்த விளையாட்டை ஆடிக்கொண்டிருப்பதோடு திருமாலே சித்து, அசித்து ஆகிய இரண்டாகவும் இவ்வுலகில் திகழ்கிறார் என்று

திருமங்கை ஆழ்வார் கூறுகிறார்.

"திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்
செழுநிலத்து உயிர்களும் மற்றும்
படர்பொருள் களுமாய் நின்றவன்......"

என்பன அவர் அருளிச் செய்த பாசுர அடிகள் ஆகும்.

திருமாலே ஐம்பூதங்களாக விளங்குவதை நம்மாழ்வார்
"நீராய் நிலனாய் தீயாய்
காலாய் நெடுவானாய்" என்று பாடுகிறார்.

நிலஊழியை வெளிக்கொணர்ந்த ஆழிமுதல்வனின் பெருமையை மேலும் பரிபாடல் பேசுகிறது.

யார்யார் இறைவனை எப்படி எல்லாம் மனத்தில் எண்ணுகிறார்களோ அவர்கள் கருத்திற்கேற்ப எம்பெருமான் காட்சியளிப்பார். எல்லாவற்றையும் கடந்த பரம்பொருளை ஒரு குறிப்பிட்ட உரு என்பது மாயத்தோற்றமே

எனவேதான்

"வளையோடு புரையும் வாலியோற்கவன்
இளையன் என்போர்க்கு இளைய யாதலும்"

என்று பரிபாடல் கூறுகிறது. மேலும்

"புதையருள் உடுக்கைப் பொலம்பனைக் கொடியேற்கு
முதியை என்போர்க்கு முதுமை தோன்றலும்"

எனும் அடிகளிலிருந்து எம்பெருமான் பலராமன் என எண்ணுவார்க்குப் பலராமனாகவும் கண்ணன் என்பார்க்குக் கண்ணனாகவும் அவரவர்

நினைப்பிற்கேற்ப அருள்செய்வார் என்பது விளங்குகிறது.

சங்கினோடு ஒப்பான வெண்மையான நிறத்தைக் கொண்ட பலராமன் என்பதை "வளையொடு புரையும் வாலியோன்" எனும் அடி காட்டும்போது பெரியாழ்வாரின் பாசுரம் நினைவிற்கு வருகிறது. தளர்நடைப்பருவத்தில் வெள்ளிப் பெருமலைக் குட்டனான பலராமன் விரைந்தோட அவன் பின்னால் தொடர்ந்து கருமலைக் குட்டன் அடி வைத்துச் செல்வதுபோல் கண்ணன் வருவானோ என அவர் கேட்கிறார்.

"பலதேவன் என்னும்
தன்நம்பி யோடப் பின்கூடச் செல்வான்"
தளர்நடை நடவானோ? என்றும் அவர் அருளிச் செய்கிறார்.

வராக அவதாரத்தைச் சிறப்பிப்பது இப்பாடலுக்குள்ள தனிச்சிறப்பாகும். வானளவு ஓங்கி நின்ற வராகத்தின் கூர்மையான வெள்ளிய கொம்புகளுக்கிடையே நிலமகள் ஒரு புள்ளி போல விளங்குகிறாள். வராகக்களிறாகிய திருமால் அக்காலத்தே அவளை மணந்து கொண்டார் என்றும் இப்பாடல் காட்டுகிறது.

"பன்றியாய் மீனாகி அரியாய்ப் பாரைப்
படைத்துக் காத்துண்டுமகிழ்ந்த பரமன்"

என்று பெரிய திருமொழி காட்டு வதையும், பெரியாழ்வார்

"பன்றியும் ஆமையும் மீனமும் ஆகிய
பாற்கடல் வண்ணா" என்று அருளுவதையும்

நினைக்கத் தோன்றுகிறது.

அடுத்து எதிர்த்து வரும் அவுணர்களை எம்பெருமான் வெற்றிக் கொண்ட விதம் கூறப்படுகிறது. பகைவரின் கொடிகள் அறுந்து விழும்படியாகவும், அவர்களின் செவிகள் செவிடாகும்படியாகவும், அவர்தம் மணி முடிகள் வீழும்படியாகவும் திருமாலின் சங்கு முழங்கிற்று.

"தீய அசுரர்
நடலைப் பட முழங்கும் தோற்றத்தாய் நற்சங்கே"

என்று நாச்சியார் திருமொழியில் காண்கிறோம் அன்றோ?

மேலும் திருமாலின் சக்கரப் படையானது பகைவரின் உடலிலிருந்து தலைகளை அறுத்துத் தள்ள அத்தலைகள் சிதறி விழுந்தன. பனை மரங்களின் மேலுள்ள பல பதினாயிரம் குலைகள் வீழ்வதுபோல் அவை வீழ்ந்ததாகப் பரிபாடல்

"பனைமிசைப் பல பதினாயிரம் குலை தரை உதிர்வ போல்" என்று உவமை கூறுகிறது. திருமங்கையாழ்வார் திருக்கண்ணங்குடியில் எழுந்தருளியுள்ள திருமாலைப் பாடும்போது

"பானுநேர் சரத்தால் பனங்கனி போலப்
பருமுடி உதிரவில் வளைத்தோன்" என்று

அருளிச் செய்வது இங்கு நினைவு கூறத்தக்கது.

திருமாலின் ஒளி நீலமணியைப் போன்றது. எம்பெருமான் கண்கள் தாமரை மலர்கள் போன்றன. அவர் வாய்மை தவறாமல் வரும் நாளைப் போன்றது. அவர்தம் பொறுமை நிலத்தையும் எம்பிரான் அருள் மேகத்தையும் ஒத்தன. இவ்வாறு ஒப்புமை பல

கூறினாலும் "எவ்வயினோயும் நீயே" என்று கூறுவதால் அவர் அவற்றைக் கடந்து எல்லா இடங்களிலும் பரந்து விளங்குகிறார் என்று பரிபாடல் காட்டுகிறது.

மேலும் அந்தணர் முறையாகச் செய்கின்ற வேள்விச் சுடரில் நீ எழுந்தருளி அவர்களுக்குக் காட்சி தருகிறாய் என்று கூறப்படுவதால் சங்க காலத்தில் வேள்விகள் நடைபெற்றதை அறிய முடிகிறது.

எம்பெருமான் சாதாரண மாந்தருக்குச் சிலை வடிவத்திலும் அந்தணருக்கு வேள்வித் தீயிலும் யோகியர்க்கு அவர் உள்ளத்திலும், சித்தர்களுக்கு எங்கும் எதனிடத்திலும் தோன்றுவான் என்று கூறுவார்கள்.

எம்பெருமானே ! தேவர்கட்கு சாவா மருந்தாகிய அமுதத்தைத் தந்தருள வேண்டுமென நீ நினைத்தாய். உடனே அமுதம் அவர்களின் வாயினைச் சென்று அடைந்தது. அவர்களும் முதுமையற்ற வாழ்வையும் தோற்காத தோள்வலியும் பெற்றனர். அமரர் பொருட்டாக அத்தகைய நன்மை செய்து அருளிய பெரியோய் எமக்கும் அருள் புரிவீராக !

நாங்கள் நின் திருவடிகளில் எம் தலைகளை வைத்து வணங்கினோம். நின் புகழைச் சொல்லி வணங்கினோம். நின் புகழைச் சொல்லி நின்னைப் போற்றினோம் ! ஏன் தெரியுமா?

"கொடும்பாடு அறியற்க எம் அறிவெனவே

என்று வேண்டுவதற்காகத்தான்" என்று பரிபாடல் அடிகள் காட்டுகின்றன.

கொடும்பாடு என்பதற்கு மாறுபாடு என்று பொருள் கொள்ளலாம். அறிவு என்பதே தெளிந்து இருப்பதுதான். அதில் மயக்கமோ, மாறுபாடோ தோன்றக்கூடாது. அறிவு தெளிவாக இருந்தால்தான் செய்யும் செயல் சிறந்து வாழ்வு மேம்பாடு அடையும் எல்லாவற்றையும் அறிந்த பரம்பொருள் என் மனத்தே எக்காலத்தும் மாறுபாடு தோன்றாமல் இருக்க அருள் செய்யவேண்டும். அதற்காக இறைவனை நம் உள்ளில் இருப்பவனாக உணர்ந்து அவன் சுடரடியைத் தொழவேண்டும் என்பதே இப்பாடலின் கருத்தாகும்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்" என்று குறள் கூறுகிறது. இறைவனுடைய சேவடிகளைப் பற்றாகக் கொண்டவர்க்கு பிறவிப் பிணி அற்றுப்போகிறது. மீளமீளப் பிறக்கும் பிறவிகளாகிய தளையை அறுக்கத் திருமாலைச் சரணடைய வேண்டும்.

"பிறவிஅற்று நீள்விசும்பில் பேரின்பம் உய்க்கும்
திறம் அளிக்கும் சீலத் திருமால்" என்று மணவாள மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் அருளிச் செய்கிறார். இதையே பரிபாடலின் மூன்றாம் பாடலில்

"மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி" என்று கடுவன் இளவெயினனார் குறிப்பிடுகிறார்.

ஐந்து பூதங்களும், சூரிய சந்திரனும், ஐந்து கோள்களும் வசுக்கள் எண்மரும், பதினோரு உருத்திரரும், மூவேழ் உலகமும் திருமாலிடத்துத் தோன்றி பரந்தனாவாயின.

"தாமரை மலரில் தோன்றிய பிரமனுக்குத் தந்தை நீயே" என்று திருமாலைப் போற்றும் பரிபாடலும்

“வாய்மொழி ஓடை மலர்ந்த

தாமரைப் பூவினுள் பிறந்தோனும்” என்று நான்முகனைக் காட்டுகிறது. அதாவது தாமரை மலரானது நீரில்தான் வாசம் செய்யும், பிரமன் தோன்றக்கூடிய தாமரை மலருக்கு ஓடையாக வாய்மொழியாக வழங்கப்படும் தாமரை மலருக்கு ஓடையாக வாய்மொழியாக வழங்கப்படும் வேதம் இருக்கிறதாம். தாமரைமலர் ஊழிக்காலத்தில் திருமாலின் உந்தியில் முதலில் தோன்றும். அதற்கும் அடிப்படையானது வேதங்களே என்று பரிபாடல் காட்டுகிறது.

“மாணியாய் உருவாய், உலகளந்த மாயன்” என்று நாச்சியார் திருமொழி கூறுவதுபோல், வாமன அவதாரத்திலே ஒரு திருவடி உலகை அளக்க, அக்காலத்தும் மற்றோர் திருவடி அடியவர்களைக் காத்துநின்றது ; மேலும் வாமனனின் திருவடி நிலவுலகை அளக்கும்போது கீழேழ் உலகங்களிலும் சென்று பொருந்திற்று என்பது புராணம். வாமனரின் திருவடிகள் பரந்து சென்ற பெருமையை திருநெடுந்தாண்டகம் 5 ஆம் பாசுரத்தில் “ஒண்மதியில் புனல் உருகி” என்று தொடங்கி திருமங்கை மன்னன் சிறப்பாக அருளிச் செய்வார்.

திருமால் அன்னச் சேவலாக உருக்கொண்டதை விளக்குகையில்

“மாவிசும்பு ஒழுகுபுனல் வறள அன்னச்
சேலாய்ச் சிறகர் புலர்த்தியோய்” என்று கூறுகிறது.

அதாவது ஊழிக்காலத்தில் ஆகாயத்திலிருந்து பெருமழை பெய்ய, அம்மழையினால் வெள்ளம் தோன்ற, அவ்வெள்ளமானது

வற்றும்படியாக திருமால் அன்னச் சேவலாக உருக்கொண்டு சிறகுகள் கொண்டு புலரச் செய்தாராம்.

மேலும், "திருமாலே நின்புகழைத் தாமே கண்டறிந்து புதிதாக யாராலும் பட இயலாது. எனவே முன்னோர்கள் உன்னைப் போற்றிப் புகழ்ந்து பாடிய வகையிலேயே யாமும் தொடர்ந்துபாடுகிறோம்" என்று பரிபாடலின் அடியார்கள் வேண்டுகின்றனர்.

"பாடுவோர் பாடும் வகையே எம்பாடல் தாம் அப்பாடுவார் பாடும் வகை" அடிகளால் மேற்கண்ட கருத்து விளக்கப்படுகிறது.

கேசி எனும் அரக்கன் குதிரை உருவில் சினத்தோடு வந்த அவனைப் பெருமாள் வதம் செய்ததைப் பரிபாடல்

"கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினம் கொன்றோய்" என்று பாடுகிறது.

இதனைக் "கூந்தல் வாய் கீண்டானை" என்று இரண்டாம் திருவந்தாதியில் பூதத்தாழ்வார் குறிப்பிடுகிறார்.

"கூந்தன் மா கொன்று குடமாடிக் கோவலனாய்" என முத்தொள்ளாயிரமும் கூறும். "தனக்கு வமை இல்லாதான்" என்று திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் கூறுவதுபோல் பரிபாடலும் பெருமானை "நின்னைப் புரை நினைப்பின் நீயலது உணர்தியோ" என்று புகழ்ந்தேத்துகிறது. நினக்கு ஒப்புமை சொல்ல நினைத்தால் அதுவும் நீயே அல்லாது, வேறு யாது ஒன்றனையும் நீயேனும் அறிவாயா என்பது இதன் பொருளாகும்.

திருமாலின் கொடியாகவும், ஊர்தியாகவும், விளங்குகிற கருடனுக்கு ஒரு சமயம் தற்செருக்கு வந்துவிட்டதாம்.

அச்செருக்கை அடக்கத்திருமால் தன் ஒரு விரலைச் சற்றே அழுத்த ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேடனைக் கௌவிக் கொண்டுள்ள கருடன் "செங்கண்மாலே ! என்னைக் காத்தருள்க" என்று ஒவெனக் குரலெழுப்பியதை

"ஆயிர அணர்தலை அரவுவாய்க் கொண்ட
சேவல் ஊர்தியும் செங்கண் மாஅல்
ஒவெனக் கிளக்கும்" எனும் அடிகள் காட்டுகின்றன.

தீயினுள் நெருப்பாகவும், பூவினுள் மணமாகவும், கற்களுள் மாணிக்கக் கல்லாகவும், சொல்லினுள் வாய்மையாகவும், அறங்களில் அன்பாகவும், மரங்களில் ஆற்றலாகவும், வேதத்துள் உபநிடதமாகவும், பூதங்களில் ஆகாயமாகவும், சூரியனில் ஒளியாகவும், திங்களில் குளிர்ச்சியாகவும், எல்லாப் பொருள்களில் தன்மையாகவும் பெருமான் விளங்குவதால் அவர் "உறைவும் உறைவும் இல்லை" என்று பரிபாடல் கூறுகிறது,

"பாழ்எனக் கால்எனப் பாகுஎன" என்று பரிபாடல் மூன்று தத்துவங்களாக எம்பெருமான் திகழ்வதைக் காட்டுகிறது, 'பாழ்' என்பது ஆண்தத்துவம், ஆண் தன்னிடமிருந்து எதையும் பிறப்பிப்பதில்லை. ஆனால் பிறப்பிக்க வைக்கும் தன்மை உடையவன். 'கால்' என்பது ஐம்பூதங்களும் நிலைத்திருத்தலைக் காட்டுகிறது. பாகு என்பது சொல்லல், இயங்கல், கொடுத்தல், விடுத்தல் இன்புறுதல் எனும் தொழிலால் ப்ாகுபட்டிருத்தல் ஆகும்,

இப்பாடலின் 81 முதல் 90 முடிய உள்ள பத்து அடிகளும் பெருமானின் பல்வேறு சிறப்புகளையும் அடைமொழிகளையும் கூறுகின்றன. தமிழ் வழிபாட்டு முறைக்கு இவற்றையே எடுத்துக் கொள்ளலாம்,

நால்வகை வியூகமும் கூறுவதற்காக செங்கண் மாரி ! கருங்கண் வெள்ளை ! பொன்கண் பச்சை ! பைங்கண் மா அல் ! என்று திறன் விளங்கப்பாடப்பட்டுள்ளது.

சிவந்த கண்களை உடைய வாசுதேவனே ! கரிய கண்களை உடைய சங்கருடணனே ! பொன் நிறக்கண்களை உடைய பிரத்தியும்நனே ! பச்சை உடம்பை உடைய அநிருத்தனே எனத்திருமால் போற்றப்படுகிறார்.

அடுத்து "இடவல ! குடவல ! கோவல ! காவல !" எனும் அடி கூறப்படுகிறது.

"இடவல" என்பது திருமால் ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடும்போது அவர்கட்கு இடமாகவும் வலமாகவும் மாறி மாறி ஆடியதைக் காட்டும்.

"குடவல" என்பது குடக்கூத்தில் வல்லவர் என்பதைக் காட்டும். காமன் மகனான அநிருத்தனைத் தன் மகள் உழை காரணமாக வாணன் சிறை வைத்தான். வாணனின் "சோ" எனும் நகரவீதியில் சென்று திருமால் குடக்கூத்தாடினார். பஞ்சலோகங்களாலும் மண்ணாலும் செய்த குடங்களைக் கொண்டு ஆடிய கூத்து இப்பெயர் பெற்றது. தலையிலே அடுக்குக் குடங்களிருக்க இரண்டு தோள்களிலும் குடங்கள் இருக்க இரண்டு கைகளிலும் குடங்களை ஏந்தி ஆகாயத்திலே எறிந்து பிடித்து இதை ஆடுவார்களாம்.

"வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணிலம் அளந்தோன் ஆடிய குடமும்"
(கடலாடு காதை 54–55)

என்று சிலம்பு இதைக் காட்டும் "குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லவெங் கோவே" என்றும் குடமாடிய கூத்தனை என்றும் "குடமாடு தடமார்பர்" என்றும் திருமால் புகழப்படுவதை ஆழ்வார்கள் அருளிச் செய்வதில் பார்க்க முடிகிறது.

இப்பாடல் "நின் நேமிநிழலே" என முடிகிறது. அதாவது காத்தற் கடவுள் திருமால். அவருடைய படையாக அமைந்தது சக்கரம். ஆகவே அச்சக்கரத்தின் நிழலே இவ்வுலகுக்கும் எமக்கும் காவலாக என்றும் விளங்குமாக என்று திருமாலிடம் சரண்புகுவதை இப்பாடல் விளக்குகிறது எனலாம்.

"ஆசை வாய்ச்சென்ற சிந்தைய ராகி
அன்னை அத்தன்என் புத்திரர் பூமி
வாச வாள்குழலாள் என்று மயங்கி
மாளும் எல்லைக்கண்" என்று பெரியாழ்வார் (371)

அருளிச் செய்கிறார். என் அன்னை என் தந்தை என்று உறவை முன்னிறுத்தலும், என் நிலம் என்று உடைமைப் பொருள்களைக் கொண்டாடுவதும் மனத்திலே எழும் ஆசைகளின் அடிப்படையிலே அமைந்தவையாகும். அந்த ஆசையை எழுப்புவன மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐந்து இந்திரியங்கள் ஆகும். அஞ்ஞான இருள் தருகின்ற ஐம்பொறிகளால் உண்டாகும் மயக்கத்தை நீக்க வேண்டியதை கடுவன் இளவெயினார் எழுதிய நான்காம் பரிபாடல் "ஐந்திருள் அறநீக்கி" என்று காட்டுகிறது.

மேலும் திருமால் அன்பர்கள் நான்கு குணங்களைக் கொண்டு விளங்குவர் என்றும் அப்பாடல் காட்டுகிறது. அவை மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்பனவாம். அனைத்து உயிரிடத்தும் நட்பு கொள்ளுதல் மைத்திரி ; எல்லா உயிரிடத்தும் இரங்கி அருளுதல் கருணை ; அனைத்திலும் இன்பம் காணல் முதிதை; எப்பொருள்களிடத்தும் பற்றற்றிருப்பது உபேட்சை என்று ஆன்றோர் பெருமக்கள் இவற்றை வகுத்துக் கூறுவர்.

திருமாலின் திருமேனிக்கு உவமை கூறவந்த பரிபாடல்

"திருமணி, திரைபா டவிந்த முந்நீர்

வருமழை யிருஞ்சூல் மூன்றும் புரையு மாமெய்" என்று உவமைகளை அடுக்குவதைப் பார்க்கிறோம். அழகான சிறந்த நீலமணியையும், அலை முழக்கம் செய்யும் கடலினையும், கரிய மழை மேகத்தையும் ஒப்பாக விளங்கும் திருமால் என்று பொருள்தரும் இந்த அடிகள்தாம் கம்பர் பெருமானை

"மையோ மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ" எனப் பாட வைத்துள்ளன எனலாம். சங்கப் பாடல்களிலேயே இப்பாடலில் மட்டும்தான் "பிரகலாதனின் பெயர் பிருங்கலாதன்" எனக் கூறப்பட்டு நரசிம்மாவதாரத்தின் பெருமை பேசப்படுகிறது.

தொடர்ந்து பழங்காலத்தில் கடலடியில் கிடந்த உலகினை வெளிக்கொணர்ந்து தன் கழுத்தில் சுமந்து நின்ற திருமால் என்று பொருள் தரும்

"புகுவத்துக் கருவல் கந்தத்தால்

தாங்கியில் வுலகம் தந்தடிப் படுத்ததை" எனும் அடிகள் வராக அவதாரத்தின் புகழைப் பாடுகின்றன.

திருமாலே ! நின் வெம்மையை சூரியனிடத்திலும், தன்மையை நிலவிடத்திலும், அருட்குணத்தை மழையினிடத்திலும், நின் தோற்றமும் பரப்பும் கடலிடத்திலும், நின் உருவை ஆகாயத்திலும், நின் வருகையை வாயுவிடத்தும் பார்க்கலாம்.

இவ்வாறு அமைந்திருப்பதால் இவை நின்னிடமிருந்து தோன்றிப் பிரிந்து மீளவும் நின்னையே வந்து அடைவனவாக உள்ளன என்று திருமாலின் பெருமைகள் பரிபாடலில் கூறப்படுகின்றன.

இதையே நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருமாலின் பரத்துவத்தை அவதாரத்திலே எடுத்துக் காட்டும்போது

"எவரும் யாவையும் எல்லாப் பொருளும்
கவர்வு இன்றித் தன்னுள் ஒடுங்க நின்ற
பவர்கொள் ஞானவெள் ளச்சுடர் மூர்த்தி" என்று அருளிச் செய்வார். மேலும் ஒரு சிலந்திப் பூச்சி தன்னிடத்திலிருந்து நூலை உண்டாக்கிப்பின் அதனை விழுங்குகின்றது. அப்பூச்சி அழியாமல் நிலைபெற்று விளங்குகிறது. அதுபோல

"அரங்கர் அண்டம்
பன்னூறு கோடி படைத்து அவை
யாவும் பழம்படியே
மன்னூழி தன்னில் விழுங்குவர்" என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் தன் திருவரங்க மாலையில் விளக்குவார்.

மற்ற எந்தப் பாடலிலும் காணமுடியாத அளவுக்கு கருடாழ்வாரின் பெருமைகள் இப்பாடலில் காணப்படுகின்றன.

பனை, கலப்பை, யானை போன்ற பலவற்றைக் கொடியாகத் திருமால் கொண்டிருந்தாலும் கருடச் சேவற்கொடியே ஒப்பற்றதாக உயர்ந்து விளங்குகிறது. கருடனுக்கு இடையில் கச்சாகவும், தோள்வளையாகவும் தலைமாலையாகவும், பிற அணிகலன்களாகவும் பாம்புகள் விளங்குகின்றன. இவ்வாறு பாம்புகளைக் கொண்டிருப்பதால் கருடனைக் கண்டு பகைவரும் நடுங்குவர்.

திருமாலே ! நினக்குப் பகைவர் எவரும் இலர் ; உறவானவர் யாவரும் இலர் ; யாவரிடத்தும் நீ ஒரு தன்மைத்தாகவே விளங்குகிறாய் என்று பரிபாடல் கூறும்போது "வேண்டுதல் வேண்டாமை இலான்" எனும் சொற்றொடர் நினைவுக்கு வருகிறது.

மேலும் எம்பெருமாள் தமக்குத்தனியாக வடிவம் இல்லை. "மனக்கோள் நினக்கென வடிவுவேறு இலையே" அவரவர் மனத்தில் நினைப்பதற்கேற்ப அவ்வப்படிவாகவே நின்று அவரவர்க்கு அவர் அருள் செய்கிறார்.

பாரதிக்கு அதனால்தான் கண்ணன் ஆண்டானாகவும் அடிமையாகவும், காதலியாகவும், தோழனாகவும் நினைப்பிற்கேற்பத் தோன்றினார் போலும் !

மேலும் "துழாஅய் நாறிணார்க் கண்ணியை" என்று கூறி வணங்குவதன் மூலம் பெருமான் அணிந்துள்ள திருத்துளசியின் பெருமை கூறப்படுகிறது. "பூத்தண் துழாய் முடியாய்" என நம்மாழ்வார் அருளிச் செய்கிறார். திருமகளாகிய அழகிய மறுவினைக் கொண்ட மார்பினை உடையவனே ! தாமரை மலர் போன்று சிவந்த கண்களையும் அளவிடமுடியாத பெருமையையும் உடையவனே ! என்று போற்றப்படுவதோடு

'நின்னின் சிறந்த தாளினை யவை' என்றும் கூறப்படுகிறது. வீடுபேற்றை வழங்குங்கால் நின்னை விடச்சிறந்த திருவடிகளை உடையவரே ! என்று பொருள்தரும் இவ்வடிகள் எம்பெருமானின் அடிகளைப் பாடுகின்றன.

பொருந்திய நின் பாதங்கள் ஏத்திப் பணியாவேல் பல்பிறப்பும் ஏதங்கள் எல்லாம் எமக்கு என்று பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் பாடுவார். எம்பெருமானின் திருவடிகளே சரணம் என்று வீழ்ந்துவிட்டால் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடந்துவிடலாம். 'அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண்ணில் உள்ளன ஒலிக்கின்றதே' என்பார் திருப்பாணாழ்வார்.

'பாதங்கள் இவையென்னின் படிவங்கள் எப்படியோ' என்று விராதன் துதியில் கூறும் கம்பர் மேலும் 'இருவினையும் துப்புறமும் 'நீர்த்த சுடர்த் திருவடியால் துடைத்தாய் நீ' என்று இராமபிரானைப் போற்றுவார்.

"ஐயன் மரைமலர்ப்பாதம் நீங்கா வாழுதி" என்று சுக்ரீவனிடமும் "மன்னுயிர்க்குறுதி செய்வான் மலரடி சுமந்து வாழ்தி" என்று அங்கதனிடமும் வாலி இராமபிரான் திருவடிப் பெருமைகளைப் பேசுவான். "பிராட்டியும் அவனும் விடினும் திருவடிகள் விடாது திண் கழலாயிருக்கும் என்பார் முமுட்சப்படியில் பிள்ளை உலக ஆசிரியர். எனவேதான் பரிபாடலும் திருவடிப்பெருமையை முன்பே இறைவனைக் காட்டிலும் பெருமை பெற்றதாகக் காட்டி உள்ளது. ஆலமரமும் கடம்ப மரமும் பெருமாள் குடிகொண்ட இடங்களாகப் பரிபாடல் காட்டுகிறது. ஆலும் கடம்பு மணிமார்" என்று கலித்தொகை (101) காட்டும்.

நல்ல ஆற்றிடைக் குறைகளிலும், குன்றங்களிலும் பிற இடங்களிலும் பல தெய்வங்களாகக் குடிகொண்டு பல்வேறு திருநாமங்கள் உடையவனே ! என்று எம்பெருமானைப் போற்றும்போது திருவரங்கப் பெருமானை "ஆயிரம் பெயரால் அமரர் சென்று இறைஞ்ச" என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்வது நினைவு கூறத்தக்கது.

"அவரவர் ஏவலாளனும் நீயே
அவரவர் செய்பொருட்டு அரணமும் நீயே" என்று தன் அடியார்க்கு ஏவலாளனாகவும், காவலனாகவும் ஆகின்ற இருபாசுர நிலையை உணர்த்தும் பரிபாடல் அவரவர் செய்யும் நல்வினைகளுக்குப் பாதுகாப்பாக என்றும் திருமால் விளங்குவார் என்ற நம்பிக்கையையும் நமக்கு அளிக்கிறது.

பரிபாடலின் பதின்மூன்றாம் பாடலைப் பாடியுள்ள நல்வெழுதியார் எம்பெருமானின் வடிவழகைப் பற்றி மனம் உருகிப் பாடுகிறார்.

"மணிவரை" எனும் கரியமலையைப் போன்று திருமால் காட்சி தருகிறார். "மாயோன் அன்ன மால்வரை" என்று நற்றிணையும் கூறும் அம்மலையிலிருந்து வீழும் அருவிகள் போல் அவர் அணிந்துள்ள மாலைகள் தோன்றுகின்றன. மாலைக் காலத்திலே அடிவானத்திலே இருதிசைகளிலும் தோன்றும் ஞாயிறும் நிலவும்போல சக்கரமும் சங்கும் விளங்குகின்றன. சக்கரமும் சங்கும் இவ்வாறு சுடர்களாக விளங்குவதை இரு சுடர் இருபுறத்தேந்தி என்று கம்பர் பாடுவார் ; "விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி" என்று சிலம்பும் "சங்கு திகிரி சந்த்ரசூரியர்" என்று தக்கயாகப் பரணியும் கூறும்.

ஞாயிற்றின் வெப்பம் வருத்தி அச்சம் தருவது போல் சக்கரப்படை பகைவர்க்கு அச்சத்தையும் நிலவின் குளிர்ச்சிபோல் எம்பெருமானின் கருணை அன்பர்க்கு அருள் வெள்ளத்தையும் அளிக்கின்றன. இத்தகைய வடிவழகு கொண்ட எம்பெருமானைத் துதிப்போர்க்கு

"உரிதமர் துறக்கமும் உரிமை நன்கு உடைத்து" என்று பரிபாடல் கூறுவதால் அவர்க்கு பெருமாள் உறையும் திருவைகுண்டம் உரிமைப் பொருளாக அருள் செய்யப்படும் என்பது விளங்குகிறது.

தொடர்ந்து "ஓசையில் அறியப்படும் வானமும் நீயே " ஓசை, ஊறு எனும் இரண்டால் அறியப்படும் காற்றும் நீயே, ஓசை ஊறு, ஒளி ஆகிய மூன்றானும் உணரப்படுமு் தீயும் நீயே ! ஓசை ஊறு, ஒளி, சுவை என்னும் நான்காலும் அறியப்படும் நீரும் நீயே ! ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனும் ஐந்தாலும் உணரப்படும் நிலனும் நீயே !" எனத் திருமால் விளங்கப்படுகிறார்.

"தன்னுரு உறழும் பாற்கடல்" என்று திருப்பாற் கடலைப் பரிபாடல் சுட்டிக் காட்டுகிறது. அதாவது பெருமாள் கரியமேனியை உடையவர். ஆனால் பாற்கடலோ வெண்மை நிறத்தது. எனவே தன்னோடு மாறுபடும் நிறத்தை உடைய பாற்கடலில் ஆயிரம் தலைகளை உடைய ஆதிசேடன் மேல் எம்பெருமான் பள்ளி கொண்டுள்ளார்.

திருவேங்கடத்தைப் பாடும்போது மங்கை மன்னர் "பள்ளியாவது பாற்கடல்" என்பார்.

"பையரவினணைப் பாற்கடலுள் பள்ளி கொள்கின்ற பரமமூர்த்தி" என்று பெரியாழ்வார் அருளிச் செய்வார்.

துளசிமாலை சூடிய அறிதுயில் கொண்டிருப்பவர் எனுமாறு "துளவஞ்சூடிய அறிதுயிலோனும்" என்று பரிபாடல் கூறுகிறது. பெருமாள் உறங்குவதுபோல் காட்டி விழித்திருந்து இவ்வுலக உயிர்களைக் காத்து அருள் பாலிக்கிறார். உண்மையில் அவர் உறங்கவில்லை. அவரது உறக்கத்தைப் பெரியாழ்வார் கள்ள நித்திரை என்பார்.

"வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன் மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம் காணலாம்"

என்பது அவர் அருளிய பாசுரம் "பாற்கடலில் பையத்துயின்ற பரமன்" என்று ஆண்டாள் நாச்சியார் இத்துயிலைப் போற்றுவார். மேலும் இத்துயிலை யோகநித்திரை என்றும் பெரியோர் கூறுவது மரபு. "பந்தனையிலாதான் யோகத்துயில் வரப்பள்ளி கொண்டான்" என்று படைத்துணையழைத்த சருக்கத்தில் வில்லிபுத்தூராழ்வார் பாடுவார். "பாற்கடல் யோகநித்திரை சிந்தை செய்த எந்தாய்" என்று நம்மாழ்வார் மனம் உருகி வேண்டுவார்.

"பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனாகவும், பகைவர்தம் புழுதியாகிய மார்பை உழுகின்றதான கலப்பையை உடைய பலராமனாகவும், மணிபதித்த பொன் தகட்டால் ஆகிய கிம்புரி எனும் கொம்பை உடையவராகக் களிறாகவும் விளங்கும் பெருமாளே ! சேவற் கொடியை உடையவனே ! அருளின் காரணமாகப் பிறக்கும் நின் வாய்மொழிகள் சங்கின் ஒலியையும், பகைவரிடம் சினம்

காரணமாகப் பிறக்கும் வாய்ச் சொற்கள் மேகத்து இடி முழக்கத்தையும் ஒத்திருக்கின்றன” எனப் புகழும் பரிபாடல் “இருமை வினையும் இல ஏத்துமவை” என்கிறது. இருவினைகளும் சேரா ! அவர்கள் பற்றற்றவர் ஆவர் என்பது இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு எனும் வள்ளுவர் வாக்கை வலியுறுத்துகிறது.

இலைகளுக்கு மேலாக உயர்ந்து வளர்ந்த வளமான இதழ்களைக் கொண்ட செந்தாமரை மலர் போன்று பெருமாளின் திருவடிகள் விளங்குகிறதாம். தாமரைக் கொடியின் இலைகள் திருமேனிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. “அடை நிவந்த முட்டாள சுடர்த்தாமரை” என்று மதுரைக் காஞ்சி கூறும்.

“அக்கமலத்து இலைபோலும் திருமேனி அடிகளுக்கே” என்று திருவாய்மொழி **(9:7:3)** அருளிச் செய்யும். முடிந்ததும், முடியப்போவதும், தோன்றப் போவதும் ஆகிய காலங்கள் மூன்றும் கடந்த திருவடிகளை உடைய எம்பெருமானே ! வாகுவலயமும் தோளும் பிடரியும் பெரியனவாகப் பெற்றவனே ! மார்பும் மனமும் பரந்தவாகப் பெற்றவனே ! வேள்வியில் விருப்பமும் போரில் வெம்மையும் கொண்டிருப்பவனே நெருப்பு நிறமான வெட்சிப் பூவைத் திருத்துழாயின் இடையே கட்டியுள்ள மாலையை உடையவனே என்றெல்லாம் திருமாலைப் போற்றிப் பாடிய பரிபாடலின் அடியார்

“அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம்” என்று வணங்கின்றனர். எம் அன்னையாகவே உம்மை நினைத்து மலரடிப் போற்றிச் சரண் புகுந்தோம். இறைவன் அன்னையின் அருள்

உள்ளம் கொண்டு தங்களைக் காப்பாற்ற வேண்டும் என்பது எங்கள் வேண்டுகோள் என மொழிகின்றனர்.

"முன்னும் முன்னும் யாம் செய்த தவப் பயத்தால்" இப்பேறு எங்களுக்கு கிடைத்தது. நாங்கள் முன்னைப் பல பிறவிகளில் நல்ல வினைகள் செய்ததால்தான் நின் பெருமை மிக்க திருவடிகளை வணங்கும் பாக்கியம் எமக்குக் கிடைத்தது. இப்பொழுது கூட நாங்கள் என்ன வேண்டுகிறோம். தெரியுமா, பொன்னோ, பொருளோ, புகழோ வேண்டாம். நின் அடிகளைத் தொடர்ந்து இனிவரும் பிறவிகளிலும் வணங்கவே விரும்புகிறோம்.

"இன்னும் இன்னும் எம் காமம் இதுவே" என்று அவர்கள் பாடுகின்றனர்.

இவ்வுலகில் புறப்பொருள்களால் அகத்திற்கு பல்வேறு இன்பங்கள் கிடைக்கலாம். ஆனால் மீண்டும் மீண்டும் பெருமாளைத் தொழுது போற்றுவதே சிறந்த இன்பம், எல்லாவகை இன்பங்களிலும் சிறந்தது நித்திய தேவி தரிசனமே என்பது இப்பாடலின் கருத்தாகும் ; இதை உணர்ந்து நாம் போற்ற வேண்டும்.

திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதிகளில் பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஆறு ஆழ்வார் பெருமக்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருத்தலம் அழகர் கோயில் என அழைக்கப்படும் திருமாலிருஞ்சோலையாகும்.

பரிபாடலின் பதினைந்தாம் பாடல் முழுமையும் இம்மலையின் பெருமையே கூறப்பட்டுள்ளது. "புலவரை யறியா" என்று

தொடங்கும் இப்பாடல் திருமாலிருஞ்சோலை ஆலயத்தில் உள்ள பழைய சிலாசாசனங்களில் ஒன்றிற் காணப்படுகின்றது. திருமாலின் பெருமைகளைக் கூறி அவர் எழுந்தருளியுள்ள அழகர் கோயிலைச் சிறப்பித்து அங்கு சென்று வழிபடுங்கள் என்று ஆற்றுப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

இந்நிலவுலகில் பெருமையோடு அழகுடன் பல மலைகள் உயர்ந்து நிற்கின்றன. அவற்றுள்ளும் மக்களுக்குத் தேவையான பொருட்களைத் தந்து பயன்படும்படி விளங்குவன ஒரு சிலவே, அச்சிலவற்றிலும் இறைவன் குடிகொண்ட குன்றங்கள் சிறப்பானவை ஆகும். அவற்றினுள்ளும் சிறந்தது திருமாலிருஞ்சோலையாகும்.

அக்குன்றத்தைப் பற்றிப் பாடும்போது

"எல்லாம் வேறுவேறு உருவின் ஒருதொழில் இருவர்த்
தாங்கு நீள்நிலை ஓங்கி இருங்குன்றம்" என்று பரிபாடல் கூறுகிறது.

வேறுவேறு உருவத்தினைக் கொண்டிருந்தாலும் ஒரு தொழிலையே செய்துவரும் மாயோனும் பலராமனும் எழுந்தருளியிருப்பதால் அம்மலை பெருமை பெறுகிறது. கண்ணனுக்கும் பலராமனுக்கும் உவமையாக முதலில்

"கல்லறை கடலும் கானலும் போலவும்" என்பது கூறப்பட்டுள்ளது. அதாவது கல்லென்று ஒலியோடு ஆரவாரிக்கும் கடலும் அக்கடலினோடு பொருந்தி உள்ள கானலும் போன்று கண்ணனும் பலராமனும் இருக்கிறார்களாம். கடலின் நீல வண்ணம் கண்ணனுக்கும் கானலாகிய வெண்மலையின் வெண்மை பலராமனுக்கும் உவமையாகப் பொருந்துகின்றன. இதையே,

"மாயவனும் தம்முனும்போலே மறிகடலும்

கானலுஞ்சேர் வெண்மணலுங் காணாயோ" என்று திணைமாலை நூற்றைம்பது (58) பாடுகிறது. மேலும் "புல்லிய சொல்லும் பொருளும் போலவும்" அவர்கள் இணைந்திருந்தனர் என்றும் உவமை கூறப்படுகிறது.

அக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள திருமாலின் திருவடிகளைப் பற்றி அவர் அருள் செய்தால் அன்றி வீடு பேற்றை அடைதல் மிக அரிதாகும். அத்தகைய அரிதான வீடுபேற்றை எளிதாகப் பெற உதவுவது திருமாலிருங்குன்றம்.

மேலும் திருமந்திரத்தின் நடுப்பதமாகிய "நம" என்னும் தொடர்மொழி அடியவன் தனக்குத்தான் உரியன் அல்லன் என்பதை உணர்த்துகிறது. எனவே அவன் "மாலிருங்குன்றம் எளிதிற் பெறல் உரிமை ஏத்துகம் சிலம்ப" என்று பரிபாடல் அடியவர் வேண்டுகின்றனர்.

திருமாலிருஞ்சோலையில் வீழும் அருவிகள் பலராமனின் திருமார்பில் தொங்கும் வெண் கடப்ப மாலைபோல் விளங்குகின்றன.

"தென்கொ டிசைக்குத் திலதமாய் நின்ற திருமாலிருஞ்சோலை" எனத் திருவாய்மொழி (10.7:4) புகழ்ந்தேத்தும் இக்குன்றத்தைப் பரிபாடல்

"சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவின்

சோலை யொடு தொடர்மொழி மாலிருங்குன்றம்" என்று பாடுகிறது. அருவிகளின் நீர்ப்பெருக்கால் சிலம்பாறு அழகுபெற அச்சிலம்பாறு அழகு செய்யும் திருமாலிருஞ்சோலையாக அக்குன்றம்

விளங்குகிறது. இந்த சிலம்பாறு பாய்வதை "சிலம்பாறுடை மாலிருஞ்சோலை நின்ற சுந்தரனை" என்று நாச்சியார் திருமொழியும் (9:10) சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலையே என்று பெரியாழ்வார் திருமொழியும் (4:2:1) அருளிச் செய்கின்றன.

நாம் ஒருவரை விரும்பினால் அவருடன் தொடர்புடையவற்றையும் மதித்துப் போற்றுகிறோம். இதுதான் உள்ளத்தின் இயல்பாகும். அதுபோல பெருமானின் திருவடிகளில் சரண்புகுந்த அடியவர்க்கு அவன் கோயில் கொண்டிருக்கும் குன்றமும் சிறப்புடையதாகத் தோன்றுகிறது. அம்மலையின் சிறப்புகளை மேலும் அடுக்கிக் கூறுகிறார்கள்.

இருளானது வளர்ந்து நிற்பதுபோல கரிய உருவோடு பொன் வேய்ந்த உருக் கையோடு திருமால் காட்சியளிப்பதாக "இருள் வளர்வெனப் பொன்புனை உடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே" என்று பாடப்படுகிறது. கம்பன் இராமனை "அல்லையாண்டு அமைந்த மேனியழகன்" என்று கூறுவான்.

அம்மாலையின் சுனைகள் எல்லாம் திருமாலின் நீலவண்ணத்தைக் கொண்ட நீலப் பூக்களையும் அசோக மரக்கிளைகளெல்லாம் பெருமானின் உடுக்கையைப் போல பொன் செய்விய பூக்களைக் கொண்டுள்ளன. தம்மை அடைந்தவரைப் பெருமாளின் அருள் ஆதரிப்பதுபோல் மரங்கள் காய்களும், கனிகளும் கொண்டு திகழ்கின்றன. வேங்கை மரத்தின் சிவந்த பூக்கள் திருமால் பகைவர்க்கு அச்சமூட்டுவது போல் விளங்குகின்றன. இவ்வாறு அம்மலையின் அனைத்துமே மாயோனோடு தொடர்புடையதாகவே திகழ்கின்றன. கோயில் உள் செல்ல இயலாதவர் கோபுர தரிசனம் காணல் போல தொலைவில்

உள்ளவர்கள் குன்றத்தின் தோற்றத்தைக் கண்டு வணங்கலாம்.

ஏனெனில் மலையும் மாலும் ஒன்றே எனும் பொருள் தரும்படி "திருமாலிருஞ்சோலை மலை என்றேனென்னத் திருமால் வந்தென் நெஞ்சு புகுந்தான்" எனத் திருவாய்மொழி (10:8:1) அருளும் அன்றோ?

"தைய லவரொடும் தந்தா ரவரொடும்
கைம் மகவோடும் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசை தொழதினிர் சென்மின்" என்று பரிபாடல்தான் இல்லத்துணைவி, தாய் தந்தையர், கைக்குழந்தை, சுற்றம் ஆகியோரோடு சென்று திருமாலை வணங்கவேண்டும் என்று வலியுறுத்தும் முதல் நூலாகும். திசையை நோக்கித் தொழுதுகொண்டே செல்லுங்கள் ; எம்பெருமான் கோயில் கொண்டுள்ள திசையே பெருமை உடையது என்றும் கூறுகிறது. குகப்படலத்தில் இராமனின் அடிபணிய வரும் குகப்பெருமானை "திசைநோக்கித் தொழுகின்றான்" என்று கம்பர் பெருமான் கூறுவார். "திசை நோக்கித் தொழுகின்றான்" என்று கம்பர் பெருமான் கூறுவார். "திசை நோக்கி மெய்பூசனை புரியும் வேங்கடமே" என்று திருவேங்கட மாலை கூறும்.

தன் உந்தியில் தோன்றிய கமலம் போன்ற கண்களை உடைய "தாமரை புரையுங் கண்ணன்" கரிய மேகம், இருள், நீலமணி போன்று விளக்கம் திருமேனியை உடைய "காரிருள் மயங்குமணி மேனியன்" மேலும் எப்படிப்பட்ட உலகத்தும் அவன் தோன்றுவான். எதற்காகத் தெரியுமா? அங்கே உள்ள அடியவர்களுக்கு மயக்கத்தாலே சென்றடையும் துன்பங்களைத் தீர்க்கவேண்டும் அல்லவா ! "மன்பது மறுக்கத் துன்பம் களைவோன் அன்றோ"

பசுமையான துளவத்தை அணிந்தவனே ! கரிய குன்றொத்த நிறத்தை உடையவனே ! வெண்மை பொருந்திய பேரொளியை உடையவனே ஒப்பற்ற குண்டலத்தினை அணிந்தவனே ! கருடப் புள்ளாகிய வெற்றிக் கொடியை உடையவனே ! என்று புகழும் அன்பர்கள்

"சலம்புரி தண்டேந்தினவை ;
வலம்புரி வயநேமியவை ;
வரிசிலை வய அம்பினவை ;
புகரிணர்சூழ் வட்டத்தவை ; புகர் வாளவை ;" என்று

திருமாலைப் போற்றி வழிபடுகின்றனர்.

அதாவது "சினம் பொருந்ததாகிய தண்டாகிய படைக்கலத்தை உடையவனே ! வெற்றி தரும் சக்கரப் படையை உடையவனே ! கட்டமைந்த வில்லோடு வெற்றி பொருந்திய அம்புகளை உடையவனே ! புள்ளிகளின் ஒழுங்குடன் விளங்கும் பாராவளையை உடையவனே ! வாட்படையை உடைய்வனே!" என்று பெருமாளின் பஞ்சாயுதங்களும் போற்றிப் பாடப்படுகின்றன.

திருமாலின் படைகளைக் கூறிப் புகழ்ந்து வழிபட்டால் அவரையும் நினைந்து வணங்கியது போலாகும்.

அழகிய சிறப்புடன் புகழ் அமைந்த வேதம் உங்கள் தன்மை இதுவென உரைத்துள்ளது. அவ்வாறே யாமும் வணங்குகிறோம்.

இருங்குன்றத்து அடியில் கண்ணபிரானையும் பலதேவரையும் வணங்கி வாழ எமக்கு அருள்வாயாக என்று இறுதியாக அடியார்கள் வேண்டுகின்றனர்.

எம்பெருமான் இருக்கும் இடத்தை வழிபடுதலும் அவரின் உடைமைகளைப் போற்றி வணங்கி அடி பணிதலும் அன்பர்களின் உள்ளம் உருக்கும் செயல்கள் என்பதை இப்பாடல் காட்டுகிறது.

# சிலம்பில் திருமால் நெறி

ஐம்பெருங்காப்பியங்களுள் சிலப்பதிகாரம் தனிச் சிறப்பைப் பெற்றுள்ளது. “நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என மகாகவி பாரதியார் அதற்குப் புகழ்மாலை சூட்டி உள்ளார்”

சிலம்பை யாத்த இளங்கோவடிகள் அக்காலத்தில் நிலவிய வைணவ சமயத்தை ஆங்காங்கே சுட்டி காட்டிச் சென்றுள்ளார். வைணவத்தின் தனிப்பெருந் தெய்வமான திருமாலின் பெருமைகளும் சிலப்பதிகாரத்தில் பேசப்படுகின்றன.

சிலம்பில் திருமாலின் பெயர்களாக அஞ்சனவண்ணன், அறிதுயில் அமர்ந்தோன், இலங்கை அழித்த சேவகன், கடல் வண்ணன், கோகுலம் மேய்த்தவன் செங்கண் நெடியோன், குருத்து ஒசித்தான், நீணிலம் கடந்த நெடிமுடியண்ணல், நாராயணன், திரு அமர்மார்பன், நீணிலம் அளந்தோன், நெடியோன், நெடுமால், புள்ளூர் கடவுள், மணிவண்ணன், மலர்க்கமல் உந்தியான், மாயவன், வையமளந்தான், மலைமிசை நின்றோன், மலையத்துயர்ந்தோன் முதலிய பல பெயர்களைப் பார்க்க இயல்கிறது.

புகார் நகரில் இந்திரவிழா கொண்டாடப்படுகிறது. அந்நகரத்தில் உள்ளஎல்லா ஆலயங்களிலும் உள்ள கடவுளர்க்கு வழிபாடுகள் நடக்கின்றன. அனைத்துக் கோயில்களிலும் வேள்விகள் செய்யப்படுகின்றன. புகார் நகரின் கண் உள்ள கோயில்களைக் குறிப்பிடும்போது

"வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்"

என்று இரு ஆலயங்களை இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

இவை முறையே பலதேவனுக்கும், திருமாலுக்கும் எழுப்பப்பட்ட ஆலயங்களாகும். கண்ணனுக்கு மூத்தவனாகிய பலதேவனுக்குத் தனிக்கோயிலும் வழிபாடும் இருந்ததை சிலம்பில் காணமுடிகிறது.

பலதேவனை வாலியோன் என்று குறிப்பிடுவதுபோலவே புறநானூறும் "வலியொத்தீயே வாலியோனை" என்று குறிப்பிடுகிறது. மேலும் பரிபாடல் கூட இதேபோல பலதேவனை "வளையோடு புரையும் வாலியோற்கவன்" என்று பாடுகிறது. சிலம்பும் பரிபாடலும் பலதேவனின் வண்ணத்திற்கு வளையலின் வெண்மையை உவமையாகக் கூறுகின்றன. அவ்வளையல் சங்கினால் செய்யப்பட்டதால் மிகவும் வெண்மையாகக் காட்சி தருகிறது.

பெரியாழ்வார் பலதேவன் ஓடுவதைத் தன் பாசுரத்தில்

முன்நல் ஓர் வெள்ளிப் பெருமலைக் குட்டன்
மொடுமொடு விரைந்தோட

என்று அருளிச் செய்வதிலிருந்து பலதேவனின் வெண்மை நிறத்தை உணரமுடிகிறது.

நீலமேனி நெடியோன் என்பது திருமாலைச் சுட்டும் திருப்பெயராகும். "நீலத் தடவரை மாமணி நிகழக் கிடந்ததுபோல்" என்று பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார் அருளிச்

செய்வதை நாம் அறியலாம்.

மேலும் சிலம்பில்

"மணிவண்ணன் கோட்டம் வலம்செயாக் கழிந்து"

"ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்"

என்ற அடிகளிலும் திருமாலுக்குக் கோயில்கள் பல இருந்ததைக் காணமுடிகிறது.

"நெடியோன் கோட்டம்" என்பதில் திருமால் நின்ற கோலத்திலும், "அறிதுயில் அமர்ந்தோன்" என்பதில் கிடந்த கோலத்திலும் எழுந்தருளி இருந்தார் என்று கூறலாம்.

இதுபோன்றே பலராமனுக்கும் கோயில் இருந்ததை

"மேழி வலனுயர்ந்த வெள்ளை நகரமும்"

"புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம்" என்ற அடிகள் காட்டுகின்றன.

மாதவி ஆடிய பதினொரு ஆடல்களையும் இளங்கோவடிகள் கூற முற்படுகிறார். அவற்றிற்கு முகநிலையாக் மாதவி முதலில் "மாயோன் பாணி" ஆடினாளாம். மாயோன் பாணி என்பது திருமாலைப் போற்றும் தேவ பாணியாகும்.

மாயோனை மற்றவர்க்கெல்லாம் முதலில் கூறியது ஏனெனில் திருமால் காவற்கடவுளாய் அருள் செய்வதால் என்று அடியார்க்கு நல்லார் எழுதுகிறார்.

அடுத்து மாதவி ஆடிய கூத்துகளைப் பற்றிப் பாடும்போது,

கஞ்சன் வஞ்சம் கடத்தற் காக

அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்

அல்லியத் தொகுதியும்

என்று அல்லியத் தொகுதி என்ற ஆடலை இளங்கோவடிகள் பாடுகிறார்.

அஞ்சன வண்ணன் என்பது அருமையான திருப் பெயராகும். திருவழுந்தூர் பெருமாளைப் பாடும் திருமங்கை ஆழ்வார் "தென்னழுந்தையில் மன்னி நின்ற அஞ்சனக் குன்றந்தன்னை அடியேன் கண்டு கொண்டேனே" என்று நெக்குருகுவார்.

"அஞ்சனவண்ணனை, ஆயர்கோலக் கொழுந்தினை" என்று பாடுவார் பெரியாழ்வார்.

கம்சனால் வஞ்சக எண்ணத்துடன் ஏவப்பட்ட யானையின் கொம்பை ஒடிக்கக் கண்ணபிரான் ஆடிய கூத்து இங்கு கூறப்படுகிறது.

இவ்வரலாற்றைத் திருமங்கை மன்னன்
"கஞ்சன் விட்ட வெஞ்சினத்த
களிறடர்த்த காளையென்று"
அருளிச் செய்வார்.

மாதவியின் ஆடல்களுள் ஒன்றாக "அவுணன் கடந்த மல்லின் ஆடலும்" என்ற அடியில் மல்லாடல் கூத்து காட்டப்படுகிறது.

முன்பொருகாலத்தில் வாணாசுரன் என்னும் அசுரனை அழிக்கும் பொருட்டு மல்லனாகிப் போரிட்ட திருமாலின் வரலாறு இக்கூத்தால் அறியப்படும்.

“மல்லடர்த்து மல்லரை அன்றட்டாய்” என்று திருமங்கை மன்னனும்

“மல்லரை மாட்டிய தேவாதி தேவனை” என்று ஆண்டாள் நாச்சியாரும் திருமாலைப் புகழ்ந்தேத்துவர்.

மேலும் வாணாசுரன் தனது மகள் உழை காரணமாகத் காமன் மகன் அநிருத்தனைச் சிறையில் அடைத்தான். அப்போது அநிருத்தனை மீட்பதற்காக வாணனின் “சோ” எனும் நகர வீதியிற் சென்று திருமால் ஆடிய கூத்து குடக்கூத்து எனப்படும். இது பஞ்ச உலோகங்களாலும் மண்ணாலும் செய்யப்பட்ட குடங்களைக் கொண்டு மாயோன் ஆடியதாகும்.

இதை நெடிய பூமியைத் தாவியளந்த மாயோன் வாணனது பெரிய சோ எனும் நகரவீதியிற் சென்று குடங்கொண்டு ஆடிய குடக் கூத்து எனும் பொருள் தரும்படி

“வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணிலம் அளந்தோன் ஆடிய குடமும்” என்று சிலம்பில் காட்டப்படுகிறது.

மாதவிபால் சென்ற கோவலன் கானல் வரிப்பாடல் பாடுகையில் யாழ் இசைமேல் வைத்து ஊழ்வினை வந்து உருத்த அவளைப் பிரிகிறாள். கண்ணகியிடம் வந்து சேர்கிறான். மாட மதுரைக்குச் செல்ல எண்ணுகிறான். ஏடலர் கோதாய் எழுக எனக் கண்ணகியிடம் கூற அவளும் கிளம்புகிறாள்.

இருவரும் தங்கள் மாளிகைவிட்டு வெளியே வந்தனர்.

அடுத்து அவர்கள் அந்நகரில் உள்ள மால் கோயிலின் வலப் பக்கத்தே சென்றனர்.

"அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலம்செயாக் கழிந்து"

என்ற அடிகளின் மூலம் நாம் மேற்சொன்ன பொருளை அறியலாம்.

வலம் செயாக்கழிந்து என்பதற்கு "வலம் செய்து" என்று அடியார்க்கு நல்லாரும், ந.மு. வேங்கடாசாமி நாட்டாரும் உரை எழுதுகிறார்கள்.

அனந்தாழ்வாராகிய ஆதிசேடனுக்கு வைணவத்தில் முக்கியமான இடம் உண்டு. குடையாக, சிங்காசனமாக, மரவடியாக, புணையாக, விளக்காக, பட்டாக, அணையாக திருமாலுடன் அனந்தாழ்வர் கலந்துள்ளார். 'அணிகிளர்' என்ற அடைமொழியால் அழகு விளங்கும் அரவம் என்று உணரமுடிகிறது. யாவற்றையும் தான் உறங்கும்போதும் அறிந்து கொண்டிருப்பது திருமாலின் அறிதுயிலாம். துயிலுதல் என்பதற்கு பதைப்பின்றி இருத்தல் என்ற பொருளும் உண்டு. துளவஞ் சூடிய அறிதுயிலோன் என்று பரிபாடலில் காணலாம். இதை யோக நித்திரை என்று கூறுவர். மணிவண்ணன் என்பது திருமாலின் திருநாமங்களுள் ஒன்றாகும். மேலும் நீலமணி போலும் நிறம் உடையவர் என்றும் கொள்ளலாம்.

"மாலே, மணிவண்ணன்" என்பது ஆண்டாள் நாச்சியார் அருளிய பாசுர அடியாகும். 'பாற்கடல் யோக நித்திரை' என நம்மாழ்வார் அருளுவார்.

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் மதுரை

செல்லும் வழியில் மாங்காட்டு மறையோனைச் சந்திக்கின்றனர். அவனிடத்தில் கோவலன் 'யாது நம் ஊர்? ஈங்கு என் வரவு?' என வினவுகின்றான்.

அதற்கு அவன் 'நான் மாங்காடு எனும் ஊரினன் திருவரங்கத்தில் திருமாலின் கிடந்த கோலத்தையும், திருவேங்கடமலையில் எம்பெருமான் நின்ற கோலத்தினையும் காட்டு காட்டு என என் கண்கள் எனதுள்ளத்தை வாட்டியதால் 'இங்கு வந்தேன்' என விடை பகர்ந்தான்.

மறையோன் கூறும் பதினேழு அடிகளில் இளங்கோ அடிகள் திருமாலின் திருவடிவத்தைச் சொற்சித்திரமாக வரைந்து காட்டுகிறார்.

திருமால் பாம்பணையில் பள்ளி கொண்டிருந்ததற்கு உவமையாக 'நீல மேகம் நெடும்பொன் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல' என்று அடிகள் பாடுகிறார். கரிய மேகமானது பக்கங்களில் விரிந்து மிகாமல் பொன் மலையினடத்துப் படிந்தது போல என்பது இதன் பொருளாகும்.

நீலமேகம் திருமாலுக்கும் பொன் குன்றம் ஆதிசேடனுக்கும் உவமையாகும்.

"ஆயிரம் மேலும் விரிந்தெழு தலையுடை அருந்திறல்
பாயல் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி கிடந்த வண்ணமும்" என்று திருமாலின் பள்ளிகொண்ட நிலை பாடப்படுகிறது.

ஆயிரம் தலைகளை உடைய அரவணை என்பதைப் பரிபாடலும் "மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த கவைநா

வருந்தலைக் காண்பின் சேக்கை" என்று கூறுகிறது.

திரு அரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள திருமாலைப் பலர் தொழுதேத்தினர் என்று சிலம்பு காட்டுகிறது. இதனை

"வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவின் அணையான்" என்று திருப்பாணாழ்வார் பாடுவார்.

திருமகள் குடிகொண்டு உறையும் மார்பு உடையார் ஆதலின் திருமால் "திரு அமர்மார்பன்" என்று போற்றப்படுகிறார்.

திருவாழ் மார்வன் தன்னை என்றும் திருமார்பா என்றும் பெரிய திருமொழியில் திருவழுந்தூர்ந்தலத்தை மங்களா சாசனம் செய்கையில் மங்கை மன்னர் போற்றிப் பராவுவார்.

இவ்வாறு திருமால் பாம்பணையில் பள்ளி கொண்ட கோலத்தைக் காட்டு காட்டு என்று என் கண்கள் கவல்கின்றன என மாங்காட்டு மறையவன் கூறுகிறான்.

"அணியரங்கத்து அரவணையற்ற பள்ளி கொள்ளும் நிறம்
திகழும் மாயோனைக் கண்டென் கண்கள்
நீர்மல்க என்றுகொலோ நிற்கும் நாளே" என்று குலசேகரப் பெருமாள் பாடுவது இங்கு நினைக்கற் பாலது.

அடுத்துத் திருவேங்கடத்தை மாங்காட்டும் மறையோன் "வீங்கு நீர் அருவி வேங்கடம்" என்பான். மங்கை மன்னனும் "அருவிசோர் வேங்கடம் நீர்மலை" என்று "தெள்ளியீர்" பாசுரத்தில் குறிப்பிடுவார்.

வேங்கட மலையின் உச்சியில் ஞாயிறும் சந்திரனும்

இருபக்கத்தில் சிறந்து விளங்குகின்றன. அவற்றினிடையே கருமேகமானது மின்னலாகிய ஆடை உடுத்துக் காட்சித் தருகிறது. இதேபோல இரு தாமரைக் கைகளிலும் சக்கரத்தினையும் சங்கினையும் ஏந்தி பொன்னலான ஆடை உடுத்தித் திருமால் நின்ற கோலத்தில் காட்சி அருளுகிறார். இதோ சிலம்பின் அடிகள்

ஒங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி உடுத்து விளங்குவில் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போல

பகையணங்கு அழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலம்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ வாடையின் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்

"வலக்கை ஆழி இடக்கைச் சங்கம் இவையுடை மால் வண்ணன்" என்பார் நம்மாழ்வார்.

இதையே நாம் பரிபாடல் பதின் மூன்றாம் பாடலில் காணலாம்.

"பருவம் வாய்த்தலின் அருவிசும்ப ணிந்த
இருவேலு மண்டிலத் திலக்கம் போல
நேமியும் வளையும் ஏந்திய கையால்
கருவி மின்னவி நிலக்கும் பொலம்பூண்

அருவி யுருவி னாரமொடு அணிந்தநின்
திருவறை உலகம்" என்பது பரிபாடலின் பாடல்.

இவ்வாறு இருநூறுபாசுரங்களுக்கு மேல் பாடல் பெற்ற திருத்தலங்களான திருவரங்கத்தையும் திருவேங்கடத்தையும் சிலம்பில் பார்க்கமுடிகிறது. திருவரங்கம் 247 பாசுரங்களாலும் திருவேங்கடம் 202 பாசுரங்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்டவையாகும்.

மாங்காட்டு மறையோன் அடுத்து முக்கியமான திருத்தலமான திருமால் குன்றம் பற்றியும் கூறுகிறான், இத்தலம் திருமாலிருஞ்சோலை என்றும் அழகர் கோயில் என்றும் அழைக்கப்படுவதை நாம் அறிவோம்.

இத்தலத்தை,

"ஆயிரம் ஆறுகளும் சுனைகள்பல ஆயிரமும்
ஆயிரம் பூம்பொழிலும் உடை மாலிருஞ்சோலையதே"

என்று பெரியாழ்வார் பாடும். அச்சோலைக்குச் செல்லும் வழியைக்காட்டும் சிலப்பதிகாரமும்.

"செவ்வழிப் பண்ணிற சிறைவண்டு அரற்றும்
தடந்தாழ் வயலொடு தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயின்"

என்று காட்டுகிறது மேலும் அத்தலத்தில் குடிகொண்டுள்ள திருமாலை வணங்கும் முறையையும் சிலம்புகாட்டுகிறது.

ஓங்கி உயர்ந்த அக்குன்றத்தை மும்முறை வலம்வரவேண்டும். அங்கு எழுந்தருளியுள்ள உயர்ந்தோனாகிய திருமாலைத் தொழும்போது மனத்தில் அப்பெருமானின் சிவந்த திருவடிகளைக் கொள்ளவேண்டும் எனும் பொருளில் மாங்காட்டு மறையவன்,

"ஓங்குயர் மலையத்து உயர்ந்தோன் தொழுது
சிந்தையில் அவன்தன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தாய்"

என்று கூறுகிறான். இறைவனை எண்ணுகையில் மற்ற எதையும் மனத்தால் எண்ணக்கூடாது என்பதை அவன் மற்றோர் இடத்திலும் வலியுறுத்துகிறான்.

"மற்றவை நினையாது மலைமிசைநின்றோன்
பொற்றாமரைத்தாள் உள்ளம் பொருந்துமின்" என்று கூறும் மறையவன் அவ்வாறு பொருத்தித் தொழுதால் இறைவனாகிய திருமாலின் கருடக் கொடி பறக்கும் கொடிமரம் கண்ணில் தோன்றும் என்று கூறுகிறான்.

"உள்ளம் பொருந்துவீர் ஆயின் மற்றவன்
புள்அணி நீள்கொடி புணர்நிலை தோன்றும்"

கொடிமரம் காணப்பட்ட அளவில் திருமாலின் மலர் போன்ற இரண்டு திருவடிகளும் உம்மை ஏற்று பிறவித் துன்பமதை நீக்கும் என்றும் அவன் கூறுகிறான்.

தோன்றிய பின்னவன் துணைமலர்த் தாளினை
ஏன்று துயர்கெடுக்கும் இன்பம் எய்தி

என்ற அடிகளில் மலர்த்தாள் என்ற சொற்றொடர் நோக்கத்தக்கது. இரண்டு அடிகளுக்கு முன் மறையோன் கூறுவதாக பொற்றாமரைத்தாள் என்று வருகிறது.

இறைவன் திருவடிகளை மலருக்கு உவமை கூறுவது ஒரு மரபார்ந்த வழக்காகும்.

"செங்கமலக் கழல்" என்பார் பெரியாழ்வார் "அடி இணையும் கமலவண்ணம் என்பார் மங்கை மன்னர் கமல பாதம்" என்பார் திருப்பாணாழ்வார். "பிறவிப் பெருங்கடல் நீந்த இறைவன் அடிசேர்தலின்" அவசியத்தை மாங்காட்டு மறையவன் இவ்வாறு நவில்வதைப் பார்க்கிறோம்.

வைணவத்தின் சிறந்த மந்திரமாக "ஓம் நமோ நாராயணாய" என்றும் திருநாமம் கருதப்படுகிறது. சிலம்பும் இம்மந்திரத்தைப் பற்றிக் கூறுகிறது. மதுரை செல்லும் வழியில் மூன்று பொய்கைகள் காணப்படும். அவற்றில் ஏதேனும் ஒன்றில் "ஓம் நமோநாராயணாய" எனும் திருமந்திரத்தில் மனம் ஒன்றி அதை முறையாக ஓதி நீராடவேண்டும் என்று மாங்காட்டு மறையோன் கூறுவான்.

இங்கு இளங்கோவடிகளின் சமயப் பொது நோக்கையும் காணமுடிகிறது. அப்பொய்கையில் மூழ்கும்போது கூறவேண்டுவதை

"அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்
ஒருமுறை யாக உளங்கொண்டு ஓதி"

என்று அவர் பாடுகிறார். ஐந்தினும் எட்டினும் என்று அவர் இரு

மந்திரங்களையும் கூறுகிறார்.

அவை சைவ வைணவ சமயங்களின் மந்திரங்களைக் குறிக்கின்றன. இரண்டுமே வேதங்களை இடமாகக் கொண்டவை. ஐந்து என்பது நம: சிவாய நம சிவாய எனும் சைவத் திருமந்திரத்தையும் எட்டு என்பது ஓம் நமோ நாராயணாய எனும் வைணவத் திருமந்திரத்தையும் குறிக்கும்.

வைணவ மந்திரத்தின் பெருமையை மிகச் சிறப்பாகப் பாடியவர் திருமங்கை ஆழ்வார். அதிலும் சிறப்பாக "குலம் தரும்" எனத் தொடங்கும் பாசுரத்தில் நாராயணா என்னும் திருநாமம் என்னென்ன அருளும் என்று பாடுவார். பெற்றதாயினும் ஆயின செய்யும் என அவர் அருளுவது நினைந்து நினைந்து இன்புறத் தக்கதாகும். இறைவனாலேயே தன் செவியில் திருமந்திரம் ஓதப்பட்ட பேறு பெற்றவர் அன்றோ மங்கை மன்னர்.

இறுதியாக மாங்காட்டு மறையோன் விடைபெறும்போது

"நீள் நிலம் கடந்த நெடுமுடி அண்ணல்

தாள்தொழுத கையேன் போகுவல் யான்" என்று கூறுகிறான். இங்கே அவன் திருமாலின் வாமனாவதாரப் பெருமையைப் பேசுகிறான். "அடி மூன்றில் இவ்வுலகம் அன்றளந்தாய்" என்று பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் அருளிச் செய்வார்.

"நான் நீண்ட உலகைக் கடந்து அளந்த திருமாலின் திருவடிகளைத் தொழுத கையை உடையவன்" என்று தன்னை அடக்கமாகக் கூறிக் கொள்கிறான் மாங்காட்டு மறையோன்.

வேட்டுவ வரியில் எயினர்கள் கொற்றவையை வழிபடுகின்றனர். கொற்றவையின் பலிபீடத்தைப் பாடும்போது கொற்றவை தெய்வத்தைத் திருமாலின் இளையாள் என்று இளங்கோவடிகள் கூறுகிறார்.

அப்பலிபீடத்தின் கண் பாதிரி, புன்னை, குரா, கோங்கு ஆகிய மரங்களில் பூக்கள் பூத்து மணம் வீசிக்கொண்டிருந்தன வண்டுகளின் கூட்டம் வீணைபோல இசைத்துக் கொண்டிருந்தது. இவை எங்கே இருந்தன என்று கூறி முடிக்கையில் இளங்கோ அடிகள் "திருவமார்க்கு இளையாள் திருமுன்றிலே" என்று பாடுகிறார்.

சிவபெருமானின் இடப்பாகத்தில் உறையும் கொற்றவை திருமாலுக்கு இளையவள் என்ற புராண மரபை ஒட்டி இங்கு கூறப்பட்டுள்ளது.

ஊர்காண் காதையில் மதுரை மாநகரில் உள்ள பல கோயில்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றில்

"உவணச் சேவல்" என்பது கருடனைக் குறிக்கும். கருடன் திருமாலின் வாகனம் ஆகும். வைணவர்கள் கருடக்கொடி ஏற்றுவது மரபு. உரை கூறவந்த அடியார்க்கு நல்லார்.

"உவணப் புட்சேவலைப் பதாகையாக
உயர்ந்த திருமால் கோயிலும்" என்று எழுதுகிறார். மற்ற கோயில்களிலிருந்து வேறுபடுத்திக் காட்ட திருமால் ஆலயங்களில் கருடக் கொடிகள் கட்டப்பட்டிருந்தன என அறியலாம். "கருளப் புட்கொடி" என்பார் நம்மாழ்வார்.

"மேழி" எனும் "கலப்பை" பலராமனின் ஆயுதமாகும். எனவே "மேழி வலன் உயர்த்த" என்று பலராமன் கோயில் பாடப்படுகிறது.

கோவலன் கவுந்தியடிகளிடம் தனது நிலையைக் கூறி வருந்துகிறான். கவுந்தியடிகள் அப்போது இராமாவதாரத்தைப் பற்றிக் கூறுகிறார்.

"தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வன் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ !"

என்பன அவர் மொழியும் அடிகளாகும். வேதத்தை அருளித் தந்த நான்முகனைப் பெற்ற திருமாலான இராமன் தந்தையின் ஏவலால் கானகம் சென்று அவனது மனைவியைப் பிரிந்து கருந்துயர் அடைந்ததை நீ அறியாயோ? என்று அவர் கேட்கிறார்.

திருமால் நான்முகனைப் பயந்ததை "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் பாடுவார்.

"நாவியுள் நற்கமல நான்முகனுக்கு ஒருகால்
தம்மனையானவனே" என்று பெரியாழ்வார் செங்கீரைப் பருவத்தில் அருளிச் செய்வார்.

"திருத்தனைத் திசை நான்முகன் தந்தை" என்று திருக்கண்ணபுரம் திருமாலைத் திருமங்கையாழ்வார் தொழுவார்.

இராமன் கானகத்தில் சீதையைப் பிரிந்து வருந்தியதை

"தனமருவு வைதேகி பிரியலுற்றுத் தளர்வெய்தி" என்று குலசேகரப் பெருமாள் பாடுவார்.

"நீ போய்த்
தாழிரும் சடைகள் தாங்கித்தாங்கரும் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண் டாண்டின் வாவென்று இயம்பினன் அரசன்"

என்று தாதை ஏவியதாகக் கைகேயி கூறுவதைக் கம்பர் பாடுவார்.

மதுரை மாநகரில் அழகிய மனையில் கோவலனுக்குக் கண்ணகி உணவு பரிமாறுகிறாள். அக்காட்சியை ஐயையும் அவளது தாய் மாதரியும் காண்கின்றனர். இக்காட்சி நமக்குக் கண்கொள்ளாக் காட்சி என அவர்கள் மகிழ்ந்தனர். மேலும் கோவலனைக் கண்டு

"ஆயர்பாடியின் அசோதை பெற்றெடுத்த
பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ" என்று உவமை

கூறி வியக்கின்றனர்.

"இந்த கோவலன் அன்று ஆயர்பாடியில்யசோதை பெற்றெடுத்த காயாம்பூ வண்ணமுடைய கண்ணன்தானோ" என்று எண்ணி இறும்பூதெய்துகின்றனர்.

கண்ணபிரானிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்ட பெரியாழ்வார் கண்ணனை யசோதைத்திருமகள் என்று பல இடங்களில் குறிப்பிடுவார்.

கண்ணனுக்குக் காப்பிடல் பாசுரங்களில் அவர் "மாதர்க்குயர்ந்த அசோதை மகன்தன்னை" என்றும்
"அசோதை நல்லாய்ச்சிதன் புத்திரன்" என்று

அன்னைமகிழும் பாசுரத்திலும் அருளிச்செய்வார்.

மேலும் அவன் காயாம் பூமேனியன் என்பதை "காய மலர் நிறவா" என்று செங்கீரைப்பருவத்தில் அழைப்பதால் அறியமுடிகிறது. இதே உவமையைச் சிலம்பிலும் பார்க்கிறோம்.

கோவலனுக்குக் கண்ணனை உவமை கூறியவர்கள் கண்ணகியைப் பற்றிக் குறிப்பிடும்போது "இவள் காளிந்தி ஆற்றின் கண் கண்ணபிரானின் துன்பம் தீர்த்த நப்பின்னையோ" எனும் பொருளில்,

"தொழுனை ஆற்றினுள் தூமணி வண்ணனை
விழுமம் தீர்த்த விளக்குக் கொல்லென" என்று பாடுவர்.

"நந்தகோபாலன் மருமகளே ! நப்பின்னாய்" என்று திருப்பாவைப் பதினெட்டாம் பாசுரத்திலும் "நப்பின்னை நங்காய்" என்று இருபதாம் பாசுரத்திலும் ஆண்டாள் நாச்சியார் அருளிச் செய்வது இங்கே குறிப்பிடத் தக்கதாகும்.

காப்பியத்தில் கதை மேலும் நகர்கிறது. கோவலன் கொலையுண்டான். ஆயர்பாடியில் தீய நிமித்தங்கள் தோன்றின. அப்போது மாதரியை நோக்கி "உள்ளம் வருந்தாதே ! முன்பு ஆயர்பாடியில் கண்ணன் தனக்கு மூத்தோனாகிய பலராமனுடன் விளையாடிய பால சரித நாடகங்கள் பல உள்ளன. அவற்றுள் நப்பின்னையோடு ஆடிய குரவைக் கூத்தினை நாம் ஆடுவோம்" என்று கூறினாள்.

கண்ணனின் இளம் பருவப்பிள்ளை விளையாட்டை என்ன விளையாட்டோ? என்று நாச்சியார் வினவுவார்.

குரவைக் கூத்து ஆடுகையில் மாதரி ஏழு கன்னிப் பெண்களை நிறுத்தி அவர்களுக்குப் புதிய பெயர் சூட்டுகிறாள். அப்பொழுதும் வைணவ மரபை ஒட்டிய பெயர்களான மாயவன் பலராமன், நப்பின்னை என்பனவற்றை அவள் சூட்டுவதாகச் சிலம்பு காட்டுகிறது,

குரவைக் கூத்தைக் காட்டும் ஆய்ச்சியர் குரவை முழுவதுமே திருமால் பற்றிய செய்திகளால் நிரம்பிக் கிடக்கிறது. மாயவன் கழுத்தினில் துளபமாலையினை நப்பின்னை சூட்டினாள். "வண்டுழாய் மாலை" எனச் சிலம்பு காட்டும் மாலையை "சூழ்ந்த துழாய் அலங்கல்" என்று பேயாழ்வார் குறிப்பிடுவார்.

திருமால் தன் மார்பில் குடிகொண்டுள்ள இலக்குமியை விரும்பி நோக்குவதில்லை என்று கூறும் மாதரி அதற்கான விடையையும் கூறுவதை நாம் பார்க்கிறோம்.

வையம் அளந்தான்தன் மார்பின் திருநோக்காப்
பெய்வளைக் கையாள் நம்பின்னைதானாம் என்றே
ஐயென்றாள் ஆயர்மகள்

வையம் அளந்ததை "ஓங்கி உலகளந்த உத்தமன்" என்பார் ஆண்டாள் நாச்சியார். நப்பின்னையை விரும்பும் காரணம் கருதித்தான் திருமகளை நோக்கவில்லை என வியந்தாள் மாதரி. நப்பின்னை இங்கே நம்பின்னை எனக் குறிப்பிடப்படுவது போல சீவகசிந்தாமணியும் "நீணிரை நம்பின்னை" என்று காட்டுகிறது.

மேலும் ஆயர்பாடியில் ஒருநாள் கண்ணபிரானுக்குத் துன்பம் செய்ய வஞ்சகமாக வந்து நின்ற குருந்த மரத்தினை ஒடித்து

மாயவன் வெற்றி பெற்ற வரலாறும் இங்கு சுட்டிக் காட்டப்படுகிறது.

கண்ணன் இவ்வாறு குருந்தமரம் முறித்ததைச் சிலம்பு "கொல்லைப்புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும்" என்று பாடும்.

இச்செய்தியைத் திருக்கோட்டியூர்த் தலம் பற்றிப் பாடும்போது பெரியாழ்வார் இப்படிக் குறிப்பிட்டு அருளுவார். "குருந்தம் ஒன்று ஒசித்தானொடும்"

வஞ்சனையால் வந்த கன்றினையே குறுந்தடியாகக் கொண்டு தீய எண்ணத்துடன் நின்றிருந்த விளாமரத்தின் கனியைக் கண்ணன் உதிர்த்த செய்தியையும் சிலம்பில் ஆய்ச்சியர் குரவையில் பாடுகின்றனர்.

"கன்று குணிலாக் கனி உதிர்த்த மாயவன்" இவ்வாறு இளங்கோ வடிகள் இதைக் காட்டுகிறார்.

"கன்றினை வாலேலை கட்டிக்
கனினள் உதிர எறிந்து" என்று இதே வரலாற்றைப் பெரியாழ்வார் பாடுவார். மேலும் பெரிய திருமொழியில் திருநாங்கூர்த்தலத்தைப்பாடும்போது.

"கன்றதனால் விளவெறிந்து கனி உதிர்த்த காளை" என்றும் திருக்கோட்டியூர்தலத்தைப் பாடும்போது

"கன்று கொண்டு விளங்கனி எறிந்து" என்றும் திருமங்கையாழ்வார் அருளிச் செய்வார்.

மேலும் திருமால் திருப்பாற் கடலைக் கடைந்த புராணச்

செய்தியையும் ஆய்ச்சியர் குரவையில் காணமுடிகிறது. மேருமலையை மத்தாக நிறுத்தி வாசுகியைக் கயிறாகக் கொண்டுப்பாற் கடலைக் கடைந்ததை

"பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன்" என்று ஆய்ச்சியர் வாழ்த்திப் பாடுகின்றனர். இவ்வரலாற்றைத் திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியில் அருளிச் செய்வதைப் பார்க்கலாம்.

மலை ஆமைமேல்வைத்து வாசுகியைச் சுற்றி
தலைஆமை தான் ஒருகை பற்றி – அலையாமல்
பீறக்கடைந்த பெருமான் திருநாமம்
கூறுவதே யாவர்க்கும் கூற்று

என்பது அவர் பாடலாகும்.

கண்ணனது விளையாட்டல்களை எல்லாம் கூறிப்பாடும் கன்னிப் பெண்கள் "இத்தகைய பெருமையுடைய கண்ணபிரான் இங்கே நமது பசுக்கூட்டத்துக்குள் வருவானா? அப்படி அவன் வருவானாயின் அவன் வாயினால் ஊதும் குழலின் இனிய இசையைக் கேட்போம்" என்று வேண்டிப்பாடுகின்றனர்.

"இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையம் தீங்குழல் கேளாமோ தோழி" என்றும்

"ஆம்பலம் தீங்குழல் கேளாமோ தோழி" என்றும்

"முல்லையம் தீங்குழல் கேளாமோ தோழி" என்றும் அவர்கள் பாடுவதாக அடிகள் எழுதுகிறார். மூன்றாம் திருவந்தாதியில் கண்ணன் பசுக்களை மேய்த்துக் குழல் ஊதியதை

"கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதி" என்ற பேயாழ்வார் அருளிச் செய்வார். இச்செயலையே

"கேயத் தீங்குழல் ஊதிற்றும் நிரை மேய்த்ததும்" என்று நம்மாழ்வார் பாடுவார். மேலும் கண்ணனின் குழலூதற் சிறப்பைப் பெரியாழ்வார். "நாவலம்" என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்கள் பாடுவார்.

அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவன் ஒரு வன்குழ லூதின போது
மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும் ; வளர் கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே !

என்பது அவற்றில் குறிப்பிடத் தக்கதாகும்.

குரவையாடும் ஆய்ச்சியர் யார் அழகைப் பாடுவது என்று மயங்குகின்றனர். யமுனை ஆற்றில் ஆடைகளை ஒளித்த அவன் வடிவழகைப் பாடுவோமோ? அல்லது ஆடையையும் வளையலையும் இழந்த நாணத்தாலே கையால் தன் உடலை மறைத்த நப்பின்னை முக அழகைப் பாடுவோமா என்றெல்லாம் அவர்கள் பலவாறாய் பாடுகின்றனர்.

மேலும் "கதிர் திகிரி யான் மறைத்த கடல் வண்ணன்" எனும் அடைமொழி கொடுத்துச் சிலம்பில் திருமால் புகழ் பாடப்படுகிறது. ஞாயிற்றைத் தன் சக்கரத்தால் மறைத்த கடல் போன்ற நீலவண்ணன் என்பதால் பாரதப் போரில் நடந்த ஒரு நிகழ்ச்சி இங்கு சுட்டிக் காட்டப்படுகிறது.

தனது அன்பன் அருச்சுனனுக்குத் தேரோட்டும் போது அவன் சயத்திரதனைக் கொல்வதாகச் செய்த சூளுரையைக் காக்கும் பொருட்டுச் சூரியனைச் சற்று நேரம் தன் ஆழியால் கண்ணன் மறைத்து பகலை இரவாக மாற்றிய விளையாட்டை நாம் அறிவோம். அதையே ஆய்ச்சியரும் பாடுகின்றனர்.

மேலும் ஆய்ச்சியர் ஆடுவதாக மாதரி கருதவில்லை. மாயவனாகிய திருமாலே பலராமனுடனும், நப்பின்னையுடனும் ஆயர்குலச் சிறுமியர் சூழ துவாரகையின் தாதெருமன்றத்தில் குரவைக் கூத்து ஆடுவதாக அவள் கண்டுகளித்தாள்.

"மாயவன்தன் முன்னினொடும் வரிவிளக்கைப் பின்னையொடும்
கோவலர்தம் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர
ஆய்வளைச் சீர்க்கு அடியெயர்த்திட்டு அசோதையார் தொழு
தாதெரு மன்றத்து ஆடும் குரவை"

என்ற அடிகளிலிருந்து யசோதை பிராட்டியும் அப்பொழுது கண்ணனை வணங்கிப் புகழ்ந்ததைச் சிலம்பு காட்டும்.

அடுத்து கருடப் பறவையை ஊர்தியாகக் கொண்ட திருமாலை உள்வரியாகிய ஒரு பாட்டினால் போற்றுவோம் என்கிறாள் மாதரி. மாதரியைப் போலவே மணிமேகலையிலும் குரவைக் கூத்தைக் கண்ணன் ஆடினதாகக் கூறும் பாடல் அடிகள் உள்ளன.

"மாமணி வண்ணனும் தம்முனும் பிஞ்ஞையும்
ஆடிய குரவை இஃதாம் என நோக்கியும்"

என்ற அடிகளால் மணிமேகலை காட்டும் குரவைக் கூத்தை அறியமுடிகிறது" என்பார் நம்மாழ்வார்.

அடுத்து ஆய்ச்சியர் உள்வரிவாழ்த்தைப் பாடி ஆடுகின்றனர். பாண்டியன், சோழன், சேரன் ஆகிய மன்னர்களைப் போற்றிப் புகழ்கின்றனர் ஆய்ச்சியர்.

பாண்டிய மன்னனைக் "கோகுலம் மேய்த்துக் குருந்தொசித்தான்" என்று ஆநிரையை மேய்த்துக் குருந்த மரத்தினை முறித்த கண்ணனே என்றும்,

சோழவேந்தனை "பொன்னந்திகிரிப் பொருபடையான்" என்பதால் "போரில் வல்ல சக்கரப் படையை உடைய திருமால்" எனவும்,

வஞ்சியில் வாழும் சேரனை "கன்னவில் தோள் ஓச்சிக் கடல் கடைந்தான்" என்பதால் மலைபோன்ற தன் தோள்களைச் செலுத்தி பாற்கடலைக் கடைந்த திருமால் எனவும் கூறுவர். இவ்வாறு விருப்பு வெறுப்பற்று இளங்கோவடிகள் மூன்று மன்னர்களையுமே திருமாலுக்கு நிகராக மொழிவது போற்றற்குரிய ஒன்றாகும்.

இதற்குப் பிறகு குரவைக் கூத்தாடுவோர் கண்ணனை முன்னிலையாக்கிப் போற்றித் துதிப்பதாகச் சிலம்பு காட்டுகிறது. அப்போது அவர்கள் "கடல் போன்ற கரிய நிறத்தை உடைய கண்ணனே ! நீ முன்பு மந்தரமாலையை மத்தாகவும் வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கலக்கினாய். ஆனால் அவ்வாறு கலக்கிய உன்கை "அசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை" யாயிற்றே ! இப்படிக்கூட ஆகுமோ ! இஃது என்ன மாயமோ என்று பாடுகின்றனர்.

கண்ணபிரானின் திருக்கைகளைப் பற்றிப் பெரியாழ்வார் சப்பாணிப் பருவத்தில் இதே கருத்தைப் பாடி உள்ளார்.

"ஆழ்கடல் தன்னை
மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி
வடம்சுற்றி வாசுகி வன்கயிறாக
கடைத்திட்ட கைகள்" என்பது அவர் அருளிய அடிகளாகும்.

யசோதையிடம் கட்டுண்டமாயன் என்பதை "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் என்று மதுரகவியழ்வார் பாடுவார்.

திருமாலே ! உறுபசி ஒன்றின்றியே உலகு அடைய உண்டனையே என்று அவர்கள் பாடுகின்றனர். அதாவது பசி இல்லாதிருக்கும்போதே நீ எல்லா உலகங்களையும் உண்டாய் ; அங்ஙனம் உண்ட வாய் களவினால் உறிவெண்ணெய் உண்டவாயாகும். இஃது என்ன மாயமோ ! என்று ஆய்ச்சியர் வியந்து மகிழ்கின்றனர்.

திருமால் உலகங்களை உண்டதைப் பல ஆழ்வார் பெருமக்கள் பாடி மகிழ்ந்துள்ளனர். உலகத்தை உண்டபோது எம்பெருமான் எட்டுத்திசைகளையும், நிலம், நீர், ஆகாயம், நெருப்பு, காற்று ஆகிய ஐந்து பூதங்களையும் எடுத்து உண்டதாக பரமேச்சுர விண்ணகரத்தை மங்களாசாசனம் செய்யும்போது திருமங்கை மன்னர் அருளிச் செய்கிறார்.

"அண்டமும் எண்திசையும் நிலனும்
அலைநீரொடு வான், எரி, கால் முதலா

உண்டவன்" என்பது அவர் பாடல் அடிகள் ஆகும்.

கண்ணனின் ஆயர்சேரி விளையாட்டுகளில் அண்டை வீடுகளின் உறியிலிருந்து வெண்ணெயை எடுத்து விழுங்கிவிடுதல் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதைப் பெரியாழ்வார் மிக அனுபவித்துப் பாடி உள்ளார்.

"திண்ணக் கலத்தில் திரைஉறி மேல்வைத்த
வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும்" என்றும்

"உருக வைத்த குடத்தோடு வெண்ணெய்
உறிஞ்சி உடைத்திட்டுப் போந்துநின்றான்" என்றும்

"கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக்
குடத்தயிர் சாய்த்துப் பருகி" என்றும்

அவரது பாசுரங்களில் பல இடங்களில் பார்க்க முடிகிறது. முன்னிலைப் பரவலில் மூன்றாவது பாடலாக ஆய்ச்சியர்கள்

"இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே" என்று வாமன அவதாரத்தையும்

"நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்த அடி" என்று கிருஷ்ணாவதாரத்தையும்

"மடங்கலாய்" என்றழைப்பதன் மூலம் நரசிம்ம அவதாரத்தையும் போற்றுகின்றனர்.

மூவுலகையும் ஈரடியால் அளந்த திருவடிகளே பஞ்சபாண்டவர்க்கும் தூதாக நடந்தனவே ! இஃதென்ன மாயமோ என அவர்கள் வியக்கின்றனர்.

வாமனாய் வந்து உலகளந்தபோது திருமாலின் திருவடிகள் நின்றதைத் திருநெடுந்தாண்டகத்தில் "ஒண்மிதியில் புனல் உருவி ஒரு கால் நிற்ப" எனும் பாசுரத்தில் மங்கை மன்னர் சிறப்பாகப் பாடுவார்.

"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி" என்பதும்
"அன்று இவ்வுலகம் அளந்தாய் ! அடி போற்றி" என்பதும்
திருப்பாவை அடிகளாகும்.

மேலும் "பாமரு மூவுலகும் அளந்த பற்பபாதாவோ !" என்று நம்மாழ்வார் தொழுதேத்துவார். "ஞாலத்தை எல்லாம் அளந்தான் அவன்சேவடி" என்று இரண்டாம் திருவந்தாதியில் பூதத்தாழ்வாரும் புகழ்ந்து துதிப்பார்.

பஞ்சபாண்டவர்க்குத் தூதாய் நடந்ததை "பஞ்சவர்த் தூதனாய்ப் பாரதம் கைசெய்து" என்று பெரியாழ்வாரும்.

"பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை தூது சென்றியங்கும்" என்று திருவல்லிக் கேணித் தலத்தைப் பாடும்போது மங்கை மன்னனும் அருளிச் செய்வர்.

மேலும் ஆய்ச்சியர் குரவையிலேயே "பஞ்சவர்க்குத் தூது நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே" என்று சிலம்பும் காட்டுகிறது. இதே பாடலில் கம்சனை வென்ற வெற்றியும் கூறப்படுகிறது.

மடங்கலாகிய நரசிம்மத்தை "அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க உருவாய் என்று

பெரியாழ்வாரும்,

“பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண், புடைப்ப
பிறை எயிற்ற னல்விழிப் பேழ் வாய்
தெள்ளிய சிங்கமாகிய தேவை” என்று மங்கை மன்னரும் பாடுவார்கள்.

அடுத்து படர்க்கைப் பரவலில் திருமாலை வாழ்த்தும்போது சோ அரணும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டவிழ்த்த சேவகன் என ஆய்ச்சியர் போற்றுகின்றனர்.

சோ என்னும் அரணை அழித்ததை “சோவின் அருமை அழித்த மகன்” என்று நான்மணிக்கடிகையின் கடவுள் வாழ்த்து கூறுகிறது. திருமால் இராமனாக வந்து இலங்கையை வென்றதை “சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்” என்று திருப்பாவையில் ஆண்டாள் நாச்சியார் பாடுவார்.

குலசேகராழ்வார் “மலையதனால் அணைகட்டி மதில் இலங்கை அழித்தவனே” என்று போற்றுவார்.

இத்தகைய சீர்பெற்ற திருமாலின் புகழை அனைவரும் கேட்க வேண்டும். அவற்றைக் கேட்காத செவிகளைத் “திருமால் சீர் கேளாத செவி என்ன செவியே” என்று ஆய்ச்சியர் இகழ்ந்து பேசுகின்றனர்.

“மால்சரிதம் கேளாச் செவித்துளை நச்சு நாகம் செறிவதோர் துளை” என்று பாகவதபுராணம் பாடும்.

செவியை இகழ்வதுபோலவே ஆய்ச்சியர் “கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே?” என்றும் கேட்கின்றனர்.

இதையே “மைதவழ்வெற்பன் மணவணி காணாமல் கையாமல் புதைபெறூஉம் கண்களும் கண்களோ?” என்று கலித்தொகை பாடும். சிலம்பின் இப்பாடலில் உள்ள “கண்ணும், திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை” என்ற அடிகளை ஒத்ததாக “கையும் மலரடியும் கண்ணும் கனிவாயும், செய்ய கரிய திருமாலே” என்று திருமாலைப் போற்றும் அடிகளை விக்கிரம சோழனுலா காட்டுகிறது.

செவியையும் கண்ணையும் கூறுவதுபோலவே நாவைப் பழித்ததை முன்பு பார்த்தோம்.

இவ்வாறு ஆய்ச்சியர் ஆடும் குரவைக் கூத்தின் மூலம் திருமாலின் பல்வேறு அவதாரச் சிறப்புகளை நாம் அறிந்து மகிழமுடிகிறது. வேறு எந்த செய்தியையுமே கூறாமல் திருமாலைப் பற்றி மட்டுமே புகழ்ந்து கூறும் காதையாக இக்காதை திகழ்கிறது.

வஞ்சிக் காண்டத்தின் காட்சிக் காதையில் திருமால் பற்றிய ஓர் உவமையைக் காண முடிகிறது. சேரமன்னன் செங்குட்டுவன் மலைவளம் காணச் செல்கிறான். அவ்வாறு சென்றவன் பேரியாறு எனுமோர் ஆற்றின் கரையில் தங்கினான்.

அந்தப் பேரியாறு ஒரு பெரிய மலையின் குறுக்கே பாய்ந்து ஓடி வருகிறது. நீண்டு உயர்ந்து நிற்கும் திருமாலின் மார்பிலே விளங்கும் மாலைபோல அந்த ஆறு விளங்குவதாக “நெடியோன் மார்பில் ஆரம்போன்று” என்று இளங்கோ அடிகள் உவமை காட்டுகிறார்.

சேரன் செங்குட்டுவன் வடதிசை நோக்கிப் படையெடுக்கிறான். மன்னனின் ஆணை பிறந்ததும் இந்நில உலகைச்

சுமந்திருக்கும் ஆதிசேடன் என்னும் பாம்பின் ஆயிரம் தலைகளும் நடுங்குமாறு படைவீரர்கள் எழுந்தனர். முரசுகள் ஒலித்தன என்பதை

"உரவுமண் சுமந்த அரவுத்தலை பனிப்பப்
பொருநர் ஆர்ப்பொடு முரசெழுந்த தொலிப்ப" என்று

கால்கோட்காதையில் பார்க்க முடிகிறது. ஆதிசேடனுக்கு ஆயிரம் தலை என்பதைத் திருமாலிருஞ்சோலை தலத்தைப் பாடுகையில்

"ஆயிரம் பைந்தலைய அனந்த சயனன் ஆளும் மலை"

என்று பெரியாழ்வார் அருளுவார்.

சேரன் படையெடுக்கக் கிளம்புகையில் "அவன் வெற்றி பெறுவானாக" என்று வாழ்த்தித் திருவனந்தபுரத்தில் திருக்கோயிலில் யோக நித்திரையிலிருக்கும் திருமாலின் சேடம் கொண்டுவந்து சிலர் வாழ்த்துகின்றனர்.

"குடக்கைக் குட்டுவன் கொற்றம் கொள்கென
ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடம் கொண்டு சிலர் நின்றேத்த" என்பன பாடல் அடிகள்.

சேடம் என்பது திருமாலுக்குப் படைத்த உணவு மலர் முதலியவையாம்.

புகார் நகரத்துத் திருமாலில் கோயிலைக் குறிப்பிடுகையில் இதோ அறிதுயில் எனும் சொற்றொடரைப் பயன்படுத்தி அடிகள். அணிகிளர் அறிதுயில் என்கிறார்.

அவர்கள் கொடுத்த சேடத்தை வாங்குகிறான் சேர மன்னன் செங்குட்டுவன்.

"ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்

தாங்கினனாகி" என்பதால் அதை வாங்கித் தனது அழகிய மணித்தோளின் மீது தாங்குகின்றானாம். "ஆடகமாடம்" எனப்படும் திருஅனந்தபுரத்தை நம்மாழ்வார் மட்டுமே பதினோரு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். காப்பிய முடிவிலும் வரம் தருகாதையில் கூட "ஆடகமாடத்து அரவணைக் கிடந்தோன்"என்று இளங்கோ அடிகள் இத்தலத்தைக் காட்டுகிறார்.

செங்குட்டுவனுக்கும் கனகவிசயர்க்கும் கடும்போர் நடைபெறுகிறது. அப்போர்க்களத்தில் பேய்கள் குரவைக் கூத்தாடுகின்றன. அப்போது அவை கரிய வண்ணனான திருமால் புரிந்த மூன்று போர்களின் வெற்றியைப் புகழ்ந்து பாடுகின்றன. அவற்றில் ஒன்று "கடல்வயிறு கலக்கிய ஞாட்பு"; திருமால் மந்தரமலையை மத்தாகவும் வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தபோது வானவர்க்கும் தானவர்க்கும் இடையே நிகழ்ந்த போராகும்.

அடுத்து இரண்டாவது போராக "கடல் அகழ் இலங்கையில் எழுந்த சமரம்" இது கடலை அகழியாக உடைய இலங்கையில் இராமாதாவரத்தில் இராமன் நிகழ்த்திய போராகும்.

மூன்றாவதாக "தேரூர் செரு" என்று குறிப்பிடப் படுவது பாண்டவரின் வெற்றிக்காகக் கண்ணன் தேரூர்ந்து நடத்திய பாரதப் போகும்.

திருமால் நெறியின் பொதுவான செய்திகளைச் சிலம்பில் இளங்கோவடிகள் காட்டுவதையும் காணலாம். திருமாலுக்கு

இன்றியமையாத் தொழில்களாக படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியனவாகும்.

படைத்தல் தொழிலைக் காட்ட பிரமனைத் திருமால் தோற்றுவித்ததை "வேத முதல்வன் பயந்தோன்" என்று சிலம்பு காட்டுகிறது.

காத்தல் தொழிலைக் குறிப்பிட தேவர் தம்மைக் காத்திட கடல் கடைந்ததைப்

"பாம்பு கயிறாகக் கடல் கடைந்த மாயவன்" என்றும் பஞ்சபாண்டவரைக் காப்பாற்றும் பொருட்டு

"பஞ்சவர்க்குத் தூதாக நடந்த அடி" என்றும் சிலம்பு பாடுகிறது.

அழித்தல் தொழிலை இறுதியில் உலகம் முழுவதும் திருமாலிடம் ஒடுங்குவதை

"உறுபசியொன் றின்றியே உலகடைய ண்டனையே"என்று இளங்கோவடிகள் பாடுகிறார்.

வைணவ சமய வழிபாட்டில் கொடி, மந்திரம், வழிபாடு ஆகியவை முக்கியமானவையாகும்.

"புள்ளூர்க் கடவுளைப் போற்றுதும்" என்று கருடக் கொடியும்

"ஓம் நமோ நாராயணாய" எனும் திருமந்திரத்தை "எட்டினும் வருமுறை எழுத்தின் மந்திரம்" என்றும், வழிபாட்டைக்

காட்டிட திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை மதுரை, காவிரிப்பூம்பட்டினம், திருஅனந்தபுரம் எனும் திருத்தலங்களையும் சிலம்பில் பார்க்க முடிகிறது.

வைணவ சமயத்தில் பரத்துவம், வியூகம், விபவம் அந்தர் யாமித்தும், அர்ச்சை என்ற ஐந்து நிலைகளில் திருமால் விளங்குவதாகக் கூறுவர். இவற்றையும் நாம் சிலம்பில் பல்வேறு இடங்களில் பொருத்திப் பார்க்கலாம். பரத்துவம் என்பதை விண்ணாட்டு நிலை என்பர். பிறப்பில்லாத நித்திய சூரிகளுடன், தேவியர் மூவருடன் சங்கும், சக்கரமும் இருகைகளில் ஏந்தித் திருமால் விண்ணகத்தில் விளங்கும் நிலையாக இதனைக் கூறுவர். ஆய்ச்சியர் குரவையில் "பொன்னந்திகிரி பொற்படையான்" என்று பாடுவதில் இந்நிலையைக் காணலாம்.

அடுத்து வியூகம் என்பது அணிவகுப்பு நிலையாகும். அனந்தனின் மீது பாற்கடலில் திருமால் பள்ளிகொண்ட நிலையை இது குறிக்கிறது. "அரவின் அறிதுயில் அமர்ந்த எணிவண்ணன்" என்பதும் பாயற்பள்ளி பலர் தொழுதேத்த திருவமர்மார்பன் கிடந்த வண்ணம் என்பதும் இந்நிலையைக் காட்டுகின்றன.

"விபவம்" என்பது பிறப்பு நிலையாகும். இதனை அவதாரம் என்பர். தாதை ஏவலின் மாதுடன் போகிக் காதலி நீங்கக் கருந்துயர் உழந்தோன் என்று இராம அவதாரமும் "ஆயர்பாடியின் அசோதை பெற்றெடுத்த பூவைப் புதுமலர் வண்ணன்" என்று கிருஷ்ணாவதாரமும் "மடங்கலோறாய்" என்று நரசிம்ம அவதாரமும், இரண்டடியாய் மூவுலகும் இருள்தீர நடந்தனையே என்பதால் வாமன அவதாரமும் காட்டப்படுகின்றன.

அந்தர்யாமித்வம் என்பது உள்ளுறை நிலையாகும். அன்பர்கள் இதயத்தை உள்இடமாகக் கொண்டு இறைவன் இருக்கும் நிலையையும் உலக உயிர்கள் பொருள்கள் ஆகியனவற்றில் திருமால் இருக்கும் நிலையையும் இது குறிக்கிறது.

இதனை "அருபொருள் இதுவென்றே அமரர் கணம் தொழுதேத்த" என்பதாலும், சிந்தையில் அவன்தன் சேவடிவைத்து"என்பதாலும்

"மற்றவை நினையாது மலைமிசை
பொற்றாமரைத்தாள் உள்ளம் பொருந்துமின்" என்ற மாங்காட்டு மறையவனின் சொற்களாலும் அறியலாம்.

"அர்ச்சை" என்பது மிக எளிமையான வழிபடுநிலையாகும். வீடுகளில் வைத்துள்ள செம்பு, வெள்ளி, கல், மரம் ஆகியவற்றில் மட்டுமன்றி கோவில்களில் உள்ள திரு உருவங்களில் திருமால் குடிகொண்டிருப்பதை இந்நிலை காட்டும்.

ஓங்குயர் மலைத் துயர்ந்தோன் என்ற திருமாலிருஞ்சோலையின் திருஉருவும், பூம்புகாரில் இருந்த "மணிவண்ணன் கோட்டம்", மதுரையில் இருந்த "உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும் " ஆகியவையும் வழிபடுநிலையை எடுத்துக் காட்டுகின்றன.

இறுதியாக இளங்கோவடிகள் சிலம்பில் பல்வேறு சமயங்களையும் பல்வகைக் கடவுள் நெறிகளையும் காட்டினாலும் மிகையான இடங்களில் ஆழ்வார் பெருமக்களைப் போலவே வைணவ சமயத்தையும் திருமால் நெறியையும் புகழ்ந்து போற்றுகிறார் என்பது தெளிவாகிறது.

# கண்ணன் என் தோழன்

பாரதியார் கண்ணபிரானைப் பல்வேறு நிலைகளில் வைத்துப் பார்த்துப் பாடினாலும் முதலில் அவர் கண்ணனைத் தோழனாகத்தான் காண்கிறார். ஏனெனில் தோழமை என்பது கிடைத்தற்கரிய பெருஞ்செல்வமாகும். தாயிடம், மனைவியிடம், உடன் பிறந்தாரிடம் சொல்ல முடியாத ரகசியங்களையும், கேட்க முடியாத ஆலோசனைகளையும் நண்பனிடம்தான் கேட்க முடியும்.

"குகனொடும் ஐவரானோம்" என்று இராமபிரான் குகப் பெருமாளை சகோதரனாகத்தான் ஏற்கிறார். ஆனால் பெரியாழ்வாரோ

"கூரணிந்த வேல்வலவன் குகனொடும் கங்கை தன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதும் ஓரடையாள" என்று பாடுகிறார். குகனும் "தோழமை என்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றோ" என்றுதான் பேசுவான்.

எனவே உடன்பிறந்தான் பாசத்தை விட தோழனின் உறவு மேம்பட்டதாக விளங்குகிறது எனலாம். கண்ணனுக்கு அருச்சுனனை உறவினனாக, தங்கை கணவனாக இருந்தான். கீதை கேட்கும்போது சீடனாக இருந்தான். ஆனால் பரந்தாமனும் பார்த்தனும் இணை பிரியாத் தோழர்களாக விளங்கினார்கள் என்பதே பாரதம் சொல்லும் பாடமாகும்.

பாரதியாரும் கண்ணனைத் தோழனாகக் காணும்போது தன்னை அருச்சுனனாக வைத்துக் கொள்கிறார். அதனால்தான் "நான் சுமித்திரையைச் சிறை எடுத்துச் செல்ல வழி சொல் என்றால்

என் தோழனான கண்ணன் யோசனை சொல்வான் ; மேலும் விற்போரில் சிறந்த கர்ணனைக் கொல்ல வழிகேட்டால் அதற்கும் கண்ணன் திட்டம் உரைப்பான்'' என்று பாடுகிறார்.

மேலும் என் தோழனான கண்ணன் "பெருஞ் சேனைத் தலைநின்று போர் செய்யும் போதினில் தேர் நடத்திடக் கொடுப்பான்'' என்று பாரதி பாடுகிறார்.

தன்தோழன் பார்த்தனுக்குத் தேர் செலுத்திச் சாரதியாய் இருந்ததால் பார்த்தசாரதி என்ற பெயரையே கண்ணபிரான் பெற்றார். பரந்தாமன் தோழனாக வந்து தேரோட்டியதால்தான் கௌவரை அழிக்க முடிந்தது என்று பெரியாழ்வார் அருளிச் செய்கிறார்.

"பலர்குலைய நூற்றுவரும் பட்டழிய பார்த்தன்
சிலைவளையத் திண்தேர்மேல் முன்நின்ற'' என்பது அவர் பாசுரம்.

இதையேதான் திருநறையூர் தலத்தைப் பாடும்போது மங்கைமன்னன் அருளிச் செய்கிறார். விசயனுக்குத்தேர் ஒட்டியதன் மூலம் கண்ணபிரான் எதிர்த்து வந்த படையெல்லாம் விண்ணுலகு அனுப்பினாராம்.

"பண்ணின் மேல் வந்த படையெல்லாம் பாரதத்து
விண்ணின் மீதேற விசயன்தேர் ஊர்ந்தானை'' என்று அவர் பாடுகிறார்.

மேலும் தோழன் என்பவன் உடுக்கை இழந்தவன் கைபோல உடனே உதவுபவனாக இருத்தல் அவசியமாகும். அப்போதுதான் அவனால் இடுக்கண்களைக் களைய முடியும். அதனால்தான் பாரதி கண்ணனான என் தோழன்

"அழைக்கும் பொழுதினிற் போக்குச் சொல்லாமல்
அறை நொடிக்குள் வருவான்" என்கிறார்.

முதலை வாயில்பட்ட யானை "ஆதிமூலமே" என்று அலறி அழைத்தவுடன் ஓடி வந்தவனன்றோ எம்பெருமான். அதனால்தான் பெரியாழ்வார்.

"பதக முதலை வாய்ப்பட்ட களிறு
கதறிக்கை கூப்பிஎன் கண்ணா ! கண்ணா என்ன
உதவப்புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த" என்று பாடுகிறார்.

மேலும் கண்ணபிரான் கருடாழ்வாரின் மேல் ஏறி மிக வேகமாக பாரதி சொல்வதுபோல் அரை நொடிக்குள் வந்தாராம். ஆனால்தான் அந்த வேகத்தைக் காட்ட பெருமாளே உனக்கு நமஸ்காரம் அல்ல ; நீ வந்தாயே அந்த வேகத்துக்கு நமஸ்காரம் என்கிறார்.

மேலும் பாரதி கூறுகிறார். "என் தோழன் எனக்கு நோய் வந்தால் மருந்து கொடுப்பான். மனத்தில் கவலைகள் எழும்போது இதமாகப் பேசி அதை மாற்றிடுவான்"

கவலையாகிய நோய்க்கே அவன்தான் மருந்து. அவனே மருந்தும் கொணர்ந்து தருவானாம். தோழன் என்பான் தவறு செய்யும்பொழுது இடித்துரைக்கும் பண்பு கொண்டவனாய் இருக்கவேண்டும். அதனால்தான் பாரதி தன் தோழனான கண்ணனைப் பற்றி

"உள்ளத்திலே கருவங் கொண்ட போதினில்
ஓங்கி யடித்திடுவான் – நெஞ்சில்

கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு
காறியுமிழ்ந்திடுவான்” என்று பாடுகிறார்.

பாரதி தன் தோழனிடம் விசித்திரமான பண்புகளைப் பார்க்கிறார். அவன் கொல்லுங்கொலைகட்கஞ்சிடாத மறவர் குணம் உடையவன். அதே நேரத்தில் கண்ணன்

“நல்லவருக் கொரு தீங்கு நண்ணாது
நயமுறக் காத்திடுவான்” என்கிறார்.

கண்ணபிரான் அன்பர்க்கு நண்பனாகவும், பகைவர்க்கு எதிரியாகவும் விளங்குவதைப் பாரதக் கதையில் நாம் அறிகிறோம்.

பெரியாழ்வார் “குடங்கள் எடுத்து ஏறவிட்டுக் வத்தாடவல்ல எங்கோவே”என்று பாடுகிறார். அவன் குழலூதுவதிலும், கோபியர்களோடு பாடுவதிலும், ஆடுவதிலும் வல்லவன். பாரதியும் தன் தோழனை

“ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும் ஆறுதல் செய்திடுவான்” என்கிறார்.

பாரதி தோழனாக கண்ணனைக் கொண்டதில் பெருமிதம் கொள்கிறார். இறைவனை சக நண்பனாகக் கொள்வது பெரும் பாக்கியம் அன்றோ.

ஒருவனுக்கு செல்வம் நிறைய இருக்கலாம். வசதிகள் நிரம்ப இருக்கலாம். ஆனால் பசிக்கும் நேரத்துக்கு உணவு கிடைத்தால் அந்த உணவே அவனுக்கு தெய்வம்.

மழையில் நனைந்து துன்பப்படுபவனுக்கு என்ன வேண்டும் என்று கேட்டால் அந்த நேரத்துக்குக் குடைதான் கேட்பான். அதுபோல தோழன் என்பவன் தக்க நேரத்தில் தக்கபடி இருக்க வேண்டும். இதை

"மழைக்குக் குடை பசிநேரத்து உணவு என்றன்
வாழ்வினுக்கு எங்கள் கண்ணன்" என்று பாரதி பாடுகிறார்.

மேலும் கண்ணனை இழந்துவிடில் இச்சகத்தினில் வாழ்வதிலேன் என்றும் அவர் கூறுகிறார். ஆபத்தில் உதவுபவனாக, தண்மைக் குனம் உடையவனாக கீதை உரைத்து இன்பம் தருபவனாகத் தன் தோழன் திகழ்கிறான் என்று பாரதி கொள்ளும் பெருமையை நாமும் அடையலாம். ஏனெனில் பிருந்தாவனமும் நந்தகுமாரனும் யாவருக்கும் பொது பொது சொந்தமன்றோ !

# கண்ணன் என் தாய்

நாட்டையும் நதியையும் தாயாகக் கொண்டு போற்றுவது பண்டைய மரபாகும். காவிரி ஆற்றைப் பாடவ்நத இளங்கோவடிகள்

"வாழியவன்றன் வளநாடு மகவாய்
வளர்க்கும் தாயாகி" என்று பாடுகிறார்.

இந்திய நாட்டையே "எங்கள் தாய்" என்று போற்றிக் கொண்டாடிய மகாகவி பாரதியார் கண்ணனையும் தாயாக்கிப் பாடி மகிழ்கிறார்.

கண்ணன் எனும் தாய் தனக்குப் பாலூட்டியதைப் பாடும் பாரதி தன் மடியில் என்னை வைத்துப் பல கதைகள் சொன்னாள் என்றும் மகிழ்கிறார். சோறூட்டும் போதும் நிலவைக் காட்டும்போதும், குழந்தைக்கு விளையாட்டுக் காட்டும்போதும் பிள்ளையை மடியில் வைத்துத் தாய் கதை சொல்வது தொன்று தொட்டு வரும் வழக்கம்.

மகாராட்டிர சிவாஜி வீரமகனாக மாறியது தன்தாய் சொன்ன கதைகளினால்தான் என்று கூறுவர். அதுபோல இன்பம், துன்பம், வெற்றி தோல்வி, வீழ்ச்சி போன்ற பலவற்றையும் தாயான கண்ணன் கதைகள் வழியாய்க் காட்டியதாகப் பாரதி பாடுகிறார். மேலும்

"என்பருவம் என்றன் விருப்பம் – எனும்
இவற்றினுக் கிணங்களன் உளமறிந்தே
அன்பொடவள் சொல்லி வருவாள்" என்று பாரதி எழுதுகிறார்.

யார்யாருக்கு என்ன வேண்டுமென்பதும் அதை எப்போது

நல்க வேண்டும் என்பதையும் இறைவன் அறிந்துள்ளவன். தேவையான சந்தர்ப்பத்தில் அவற்றைத் தருவான் என்பது இங்கு மறைமுகமாய் உணர்த்தப்படுகிறது.

கண்ணன் எல்லாம் அறிந்தபிரான், என்னை நினைந்து அருள் செய்பவன். அவன் தாய்; நான் கன்று; இந்தக் கன்றாகிய என்னைத் தாயை நினைக்குமாறு செய்தவனும் கண்ணனே என்று பெரிய திருமொழி கூறுகிறது.

தாய்நி னைந்தகன் றேயொக்க என்னையும்
தன்னையே நினைக்கச் செய்து

என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்வது குறிப்பிடத் தக்கதாகும்.

"விந்தை விந்தையாக எனக்கே – பல
விதவிதத் தோற்றங்கள் காட்டுவிப்பான்" என்று

கண்ணன் காட்டும் பல தோற்றங்களைப் பாரதியார் பாட வருகிறார்.

சந்திரன், மேகம், சூரியன், விண்மீன், மலை, நதி, சோலை என்று பார்க்கின்ற இயற்கையெல்லாம் கண்ணனின் தோற்றம் என்று கூறும் பாரதி கண்ணபிரான் இவ்வுலக இயற்கை, எல்லாப் பொருள்களும் தோன்ற மூலமுதற் காரணமானதாய் என்று போற்றுகிறார்.

ஆழ்வார் பெருமக்கள் திருமாலை இயற்கைப் பொருளாக எண்ணி எண்ணி அனுபவித்து மகிழ்ந்தவர்கள். கண்ணனைக் 'கருமலைக்குட்டன்' என்பார் பெரியாழ்வார். 'கனலுருவ' என்று போற்றுவார் திருமங்கையாழ்வார் கருக்கலந்த காளமேக மேனியாய் என்பர் திருமழிசையாழ்வார். கார்க்கடல் நீர்வண்ணன் என்று பேயாழ்வார் அருளிச் செய்வார். அவரே 'நின்மேனி... அந்திவான் காட்டும்' என்பார்.

"ஒரு கரு ஞாயிறு அந்தமில்லாக் கதிர்பரப்பி அலர்ந்தது ஒக்கும்" என்பார் நம்மாழ்வார்

இவ்வாறு இவர்கள் அருளிச் செய்தவழியே பயணம் செய்த பாரதி கண்ணனை இயற்கைப் பொருட்களில் கண்டு மகிழ்கிறார்.

ஒரு தாயின் கடமை வளர்ந்த தனது பிள்ளைக்கு வழிகாட்டும் அறிவுடைய தோழர்களும், காதல் புரிந்து கடிமணம் புரியும் நற்பெண்களையும் சூழ வைத்தலாகும். பாரதி கண்ணனான தனது தாய்

"அறிவுடைய மெய்த் தோழரும் அவள் கொடுத்தாள்" என்றும் "நன்றியல் காதலுக்கே இந்த நாரியர் தமையெனைச் சூழ வைத்தாள்"என்றும் வழிவகுத்து வைத்ததைக் காட்டுகிறார்.மேலும் "காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று பாடிய பாரதி தனக்கு விளையாட்டுத் தோழர்களாக பறக்கும் பறவைகள் திரிந்திடும் விளங்குகள், நீந்தும் மீன்கள் எல்லாவற்றையும் கண்ணன் அளித்ததாகப் பாடுகிறார்.

முதலிலேயே கண்ணன் என் விருப்பம் அறிந்து எனக்களிப்பான் என்று பாடியதற்கு இளவ சாட்சியாக நிற்கின்றன.

இவ்வுலகத்தில் சாத்திரங்களையும் அறிவையும் தோற்றுவித்து மனித உயிர்களுக்கு வழிகாட்டுபவர் திருமாலே என்பது உயர்ந்த கொள்கையாகும். இதையே கண்ணனாகிய தாய்தான்

சாத்திரம் கோடி வைத்தாள் – அவை
தம்மினும் உயர்ந்ததொர் ஞானம் வைத்தாள்

என்றும் பாடும் பாரதியின் புரட்சி மனம் உடனே நான் கண்டு நகைத்திடுவதற்காக "பொய்வேதங்கள் மதக் கொலைகள், அரசர் கூத்துக்கள், மூத்தவர் தம் பொய்ந்நடை, இளமூடர்தம் கவலையும்பண் இவ்வுலகில் தோன்றின என்று பாடுகிறது.

கண்ணன் அன்பு காட்டி அருளிச் செய்வதைப் பாரதி

"வேண்டிய கொடுத்திடுவாள் – அவை
விரும்புமுன் கொடுத்திட விரைந்திடுவான்"

என்று பாடுகிறார்.

என் விருப்பம் தெரிந்து அந்த விருப்பம் என் மனத்தில் தோன்றுவதற்கு முன்னமே இறைவன் அருள் செய்வான் என்ற நயம் இந்த அடிகளில் மிளிர்கிறது. மேலும் "விரைந்திடுவான்" என்ற சொல் திருமால் அருள் செய்வதில் காட்டும் வேகத்தைக் காட்டுகிறது.

"முதலை வாய்ப்பட்ட யானையைக் காக்க வேகமாய் வந்தாயே. பெருமாளே அந்த வேகத்திற்கு வந்தனம்" என்று வைணவர்கள் போற்றுவது குறிப்பிடத்தக்கது.

கண்ணன் என் தோழன் பாட்டில் தன்னையே அருச்சுனனாக எண்ணிய பாரதியார் கண்ணன் என் தாயில் "அண்ணன் அருச்சுனன் போலெனை ஆக்கிடுவாள்" என்று அண்ணனாக அருச்சுனனை ஏற்கிறார்.

இறுதியாக "தான் எக்காலத்திலும் கண்ணன் புகழ்பாடுவேன் ; அவன் புகழ் வாழ்வையும் பெருமையும் எனக்கு அளிப்பான்" என்று உறுதியிட்டுப் பாரதி இப்பாடலை முடிக்கிறார்.

"சொல்லுந்தனையும் தொழுமின், விழும் உடம்பு
செல்லுந்தனையும் திருமாலை"

என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்வது இங்கு நினைக்கத் தக்க ஒன்றாகும்.

கண்ணனைத் தாயாகக் கருதிய பாரதியார், கண்ணனைப் பெண்ணாக்கி, அன்னை வடிவமாக்கி உலகின் இயற்கையில் எல்லாம் அத்தோற்றத்தைக் கண்டு மகிழ்ந்து போற்றுவது பாரதியின் அடிமன வளர்ச்சியைக் காட்டுகிறது என்று கூறலாம்.

